உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# பஞ்சநதமான்மியம்

என்கின்ற

# திருவையாற்றுப்

# புராணம்.

இஃது

கற்றோரும் மற்றோருமாகிய யாவருக்கும்

எளிதிலே பயன்படும்பொருட்டு

திருவையாறு ம-ா-ஸாமிஜோஸியரவர்கள்

தம்பி முத்துஸாமிஜோஸியர் குமாரர்,

**ஸ்ரீ சாமாசாஸ்திரியவர்களால்,**

வடமொழியினின்று மொழிபெயர்த்து

மகாவித்துவான், மீனாக்ஷிசுந்தரம்பிள்ளையவர்கள்

மாணாக்கராகிய,

வலலமாநகரம்

**தி. கந்தசாமிஉபாத்தியாயரால்,**

தென்மொழியில் வசனமாகச்

செய்து,

**திருவையாறு "ஜியோதிர்விலாஸ"**

அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1885 பார்த்திவ ஞு கார்த்திகை மீ



Kindly sent by Devaji Rao Hd Clerk of the Dt. Mf Court, [illegible]

உ

## பாயிரம்.

### ஆதிவிநாயகர் வணக்கம்.

பூமேவு திருமகளுங் கலைமகளு மகிழ்ந்துறையும் புகழையாற்றுப், பாமேவு திருத்தனியீற்றிருந் தருளியம்பிரெடுமயணிவோர்கட்குத், தார்மேவுஞ்சொற்பொருளு முதுக்குறைவுமளவாத சுகமுமல்கு, மாமேவு மதிவேணி யாதிவிநாயகனிருதாள் வணக்கஞ்செய்வாம். (க)

### பஞ்சநதீசுவரர்வணக்கம்.

திருவளருங்கடற் புவியோர்தூரி சுறக்குங்காவிரிசூழ்திருவையாற்றில், அருமறைசொல்லறம் வளர்த்தநாயகியோடமர்ந்துயிர்களெல்லாம்போக, மருவவினிதருளிப்பின் வலச்செவியிற்றாரகமா மனுவுரைத்துக், கருதரியமுத்தியுறவருள்செம்பொற்சோதிகழல் கருத்துள்வைப்பாம். (உ)

## பாயிரம்.

### நந்திகேசுவரர் வணக்கம்.

மன்னுபுக ழையாற்றி னருந்தவச்சி லாதமுநி மகவா ய்வந்து, பன்னுசிக மாகமமெ லாமுலகந் தழைவெய்தப் ப ரன்பாற்றேர்ந்து, மின்னுமெழிற் கயிலையில்வீற் ணவர் மகுடமுடிதழை வீற்றிருக்கும், கொன்னுலவு நெடுஞ்சூ ற் படைதரித்த நந்திகழ ல்குறித்து வாழ்வாம். (எ)

### சத்தமாதர்கள்வணக்கம்.

தஞ்சமெனத் தொழுதேதது மிந்திரனுக் குயர்விசய ந்தன்னைநல்கும் விஞ்சுபுகழபிராமி திகழுமகே ஸ்வரியழகு மிளிர்கௌமாரி, மஞ்சுறுநா ரயணிவ ராகியிந்தி ராணி மகிழ்காளியென்னும், எஞ்சலிலாப் புகழ்மருவுசத்தமாதரை யுமன்போடேததி வாழ்வாம. (அ)

### திருமுகள் வணக்கம்.

பல்வளமும் பொலிந்தோங்கு திருவையாற் றரும றைகள் பரவமேவித, தொல்வினையின் றொடரறுத்த கவு தமர்க்கும் விழைபொலிசு ரரதிபற்கும், மல்குபெருவாழ்வ ருளிப் போறறுமடி யவர்வறுமை மாற்றிநாளுஞ், செல் வமொடு பல்வரமு நல்குசெழுங் கமலையடி சென்னிசே ர்ப்பாம். (கூ)

### அறுபத்துமூவர் வணக்கம்.

தந்தையடி சிதைத்தவிக ளிந்தையற வரிபிரமர் தம்மா ற் காணு, வெந்தையடி கண்டதிருச் சேய்ஞலூர்ப் பிள் ளையடி யிறைஞ்சி யேத்தி, முந்தைமறை முடிமல ரடி யெய்து மறுபத்து மூவராய, சுந்தரஞ்சேர் திருத்தொண் ரடிமலர்கண் முடியிலுறத தொழுதல் செய்வாம். (ய)




பிரணதார்த்திஹரர். அறம்வளர்த்தநாயகி.

ஜப்பியேசுவரர். திரிருஸினி.

செம்பொற்சோதியார்.

திரிருவே.





# புராணவரலாறு.

———(*)———

நெடியகடல்சூழ்ந்த பெரியவுலகத்தில், இருதத மாவிபலதளிர்களு மலர்களு நெருங்கிச்செங்கதிர்வெப்புருயணிழலையுடையதும், அந்தரநாட்டமரரும் புகழுமழகினையுடையதும், முடங்கியவுளையையுடைய சிங்கத்தோடு கரியடானையும், முதிர்ந்தவலிமையையுடையபுலியோடுமானும், விரிந்தசிறகையுடைய கருடனோடு பாம்பும், பகைகடிந்தென்று கட்புற்றிருக்கின்றமையால், தாருகாவனரிஷிகளாலேவிய பரம்பையும் சந்திரனையும் பஃகயறகொண்ட பரமசிவன்செஞ்சடைக் காட்டையொப்பதும், தவத்தோர்கள்கோபத்தால் விளையினுசமாகும்வண்ணஞ் சபிக்கவும், அவர்களாலிகழவும், பகைவராலலைக்கவும், பவளம் போன்ற விதழையுடைய விலக்குமிவசிக்கின்ற மார்பிற்றுளபமாலையணிந்த திருமாலால் வேரோடும்பறித்ததுமான கற்பகவனமும்தனக்கொப்பில்லாததும், அசோகம் - பலா-நாவல்- குருந்து-அரசு-மருது- கரவீரம்-பாடலம்- மாவயம்-வடம்-மகிழ்-தெங்கு- கொன்றை- சோதி.சே-புன்னை-வழை-காம்பை- நாந்தம்-வாழை- கல்வியாளர் போன்றபனைந்துதன்னைன்றசந்தனம்- யாவருக்கும்பயன்படுகின்ற

செல்வர்போன்ற தளிர்த்துப்பழுத்தமா, உலோபர்களைப்
போன்ற உடல்முழுதுங்கருக்குமட்டையையுடையபனை
முதலானவிருக்ஷங்களை யுடையதுமான நைமிசாரணியத்
தில், மரவுரிதரித்தவரும், தெய்வத்தன்மையுள்ளவிபூதியோ
டுருத்திராக்ஷம் புனைந்த மேனியரும், மறைமுதலானகலை
யுணர்ச்சியுடையரும், ஜெனனவியாதியை நாசஞ்செய்கின்ற
பஞ்சாக்ஷரமியைந்த வுள்ளத்தையுடையருமான அத்திரி-
ததீசி- காத்தியாயனர்-சுனப்புச்சர்- அகஸ்தியர்-சுகர்-மாதே
வர்-கண்ணுவா- கருக்கர்-பிருங்கி - சதாநந்தர்- மார்க்கண்
டா- பிருகு-போதாயனர் - ஆபஸ்தம்பர்-இலகிதர்- சதீகக
ணர்-சாண்டில்லியர்- பாரத்துவாசா-புலகர்- சந்திரசூடர் -பு
ச்சகா- புலத்தியா-சாபாலி-கவுதமர்-சனற்குமாரர்-நாரதர்
சம்பு-மாணி- மாண்டவியர்- ஆரபத்தர்- காசிபர்-விசுவாமி
த்திரா- கலைசசிருங்கர்-கற்கி-கூசுமாரண்டர் - மாதேவர்-கு
சுகு-பார்க்கவர்- சனந்தர்-ஆசுவிலாயனர்- தால்ப்பியர்- கிரு
தர்-சங்கர்- அகமருடணர்-பராசரர்-சனுதர் -திருதர்-சனகர்
வசிட்டர்-பிரசண்டர்-துருவாசர்- பருப்பதர்-சிலாதர்-தத
தாத்திரேயர்- சத்தி-தவுமியர்-சுமந்து-பபுரு-வாமதேவர்-
சரபங்கர்-வச்சர்- உபமன்னியர்- கண்டு- அரிதகர்- சவுன
கர்- ஏவலர்-சுனர்-அசிதர்- விந்து-பாணினி-வீபண்டகர்-
காலவர்-அங்கிரசர் சாதாதபர்-சுனச்சேபர்- சருச்சரர்- இ
சைப்பியர்-வசு-திரணவிந்து-முற்கலர்-கபிலர்-அட்டவக்கிர
ர்-காணர்-சுனகர்- உ[illegible]சர்-பகவர்-கவுண்டின்னியர்-ப
யிலுவர் உக்கிரவீரியர்-தூ[illegible]திரணதூமாக்கினி-செ
மதக்கினி முதலானமுனிவ[illegible]டிச்செய்தயாகமுடிவில்,
சத்துவகுணம்,போர்த்தென்ன வெ[illegible]பூதிதடங்கியமேனி

யும்,பவளக்கொத்தெனத் திரண்டுநீண்ட வேணியும், கோ
த்தணிந்த திருவக்கமாலிகையும், பரிசுத்தமாகிய ஐந்தெ
ழுத்தையெப்பொழுதுந் தியானிக்கின்ற சிந்தையுமுடைய
சூதமாமுனிவரர் வந்தார். வந்தவரை நைமிசாரணியவாசி
களாகிய அத்திரிமுனி முதலானவர்கள்கண்டு,இளங்கன்று
னது தன்தாய்வரவு கண்டெதிரோடுந்தன்மை போல்வி
ரைந்தெதிர்கொண்டு சிந்தையுண்மகிழ்ந்து வந்தனைபுரிந்
து முகமலர்ந்து அன்பினாலருக்கியபாதியமுதலாகமுறை
ப்படி செய்கடன்புரிந்து இனியவாசனத்திருத்திச், சந்திர
னைத்,தாரகைக்கூட்டஞ் சூழ்ந்தாற்போற் சூழவிருந்து,ஐய
னே! நின்வரவால் இச்சென்மமெமக்குப் புனிதமாகியது.
இத்தினநற்றினமாகியது என்றுமுகமன்கூறி,மறைமுழுது
ணர்ந்த வியாசமுனிவரிடத்து மயக்கமறயாவு நன்குணர்ந்
தோய்!ரோமஹரிடணன் காதலனே! இறையவனே!யாங்
களுய்யுமவண்ணம் பதினெண்புராணங்களுளொன்றான
பிர்ம்மகைவர்த்தத்திலுள்ள ஸ்ரீமத்பஞ்சநதமான்மியத்தைத்
திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்றார்கள். அப்போது
நைமிசாரணியவாசிகளாகிய முனிவர்களைநோக்கிக் குறுந
கைகொண்டு மலர்முகம்விளக்கிச் சடைமுடிதுளக்கிநன்று
நன்றென்று வேட்டவர்மலங்களை வாட்டி வெம்பவத்தை
வீட்டி முத்திகொடுக்கின்ற ஸ்ரீமத்பஞ்சநதமான்மியத்தை
ஆதிகாலத்தில் சூரியவம்சத்திற்பிறந்த தேவவர்ம ராசனான
வன், பிராம்மணோத்தமரும் சிவபக்தசிரேஷ்டருமான
சுமந்துமகரிஷியை நோக்கி மகாசிலாக்கியகுணமுள்ளமு
னிசிரேஷ்டரே! அறுபத்தாறுகோடிதீர்த்த மகத்துவத்து

டன், காவேரிநதியின் பெருமையையும், விருத்தாசலேஸ்ரவர் பெருமையையும், மாயூரநாதர் பெருமையையும், தேவரீர் திருவாய்மலர்ந்தருளக் கேட்டானந்த மடைந்தேன் இப்பொழுது ஸ்ரீமத்பஞ்சநத மான்மியத்தைக் கேட்க மிகுந்த விருப்பமுள்ளவனாக இருக்கின்றேனென்றுசொல்ல அரசனைநோக்கி அரசனே! அரசர்களுக்குரிய உலகவிவகாரத்தைவிட்டு உலகத்திலுள்ளசகல சீவகோடிகளுங் கேட்டு ஆனந்தமடைந்து கடைத்தேறும்படியான ஸ்ரீமத்பஞ்சநத மான்மியத்தை நீ கேட்க விருப்பமுற்றமையால், உன்னைப்பார்க்கிலும் உத்தமகுணத்தைஉடையவர்களொருவரும் இவ்வுலகத்திலில்லை. இந்தப்பஞ்சநதமாகாத்மியசிரவணபட்ஞதிகளால் யாவருமுத்திருஷ்ட பதவியையடைகிறார்கள். அந்த ஸ்தலத்தின் பெருமையைப் பூர்வபுண்ணியமில்லாதவர்களறியமாட்டார்கள், பரமசிவனுனவர் பிரிவின்றி எக்காலமும் அங்குவசிக்கின்றாரென்றும், அன்றியுமந்தஸ்தலத்தின் பெருமையை ஆதிகாலத்தில் பார்வதிதேவியார் பரமசிவனைநோக்கித் தேவதேவா மகாதேவா பிராணநாயகா- பஞ்சநதஸ்தலத்தின் மான்மியத்தை எனக்குச்சொல்லியருளவேண்டுமென்றுகேட்க, அப்பொழுதுபரமசிவன் பார்வதிதேவியை நோக்கிப் பெண்ணே! பூர்வத்தில் காவேரிதீரத்தில் வாசஞ்செய்தவரும், பிராமணோத்தமரும், வருணாச்சிரமதருமத்தைவிடாதவரும், வேதவேதாங்கபாரங்கதரும், திரிகால சிவபூஜா துரந்தரரும், திரிபுண்டராங்கித திருமேனியையுடையவரும், உருத்திராக்ஷமாலிகாபரணரும், எக்காலமும் பஞ்சாக்ஷரமந்திரஞ் சபிக்கின்ற நாவையுடையவருமான நாதசன்மாவை அவர்மனை

பாளாகிய அனவத்தியாதேவி என்பவள் நமஸ்கரித்தெழுந் துநின்று ஸ்வாமி உலகத்தில், தெரிசித்தளவில்முத்தியையு ம்,ஸ்நானததளவில் பாபவிமோசனத்தை யுங்கொடுக்கத்த க்கக்ஷேத்திரங்களையும், தீர்த்தங்களையும், தங்கள்கிருபை க்கிடமாகிய எனக்குத்திருவாய் மலர்ந்தருளவேண்டுமென் றுகேட்க நாதசன்மாவானவர் தன் மனையாளாகிய அன வத்தியாதேவியைப் பார்த்து பெண்கள்நாயகமே மரணத் தால் முத்திகொடுக்கின்ற காசி, மேல்கடலோரத்திலுள்ள திருகோகரணம், சோமநாதம், விருபுராக்ஷம், திருக்கேதா ரம், மல்லிகார்ச்சுனம், திருவேகம்பம், திருக்காளத்தி, விரு த்தாசலம், அருணாசலம், ரிஷபாசலம், சீர்காழி, திருவீழி ஞலை, வயித்தீஸ்வரன்கோவில், திருவெண்காடு, திருவா ரூா, வேதாரணியம், கவுரிமாயூரம்,திருவிடைமருதூர், கு ம்பகோணம், ஸ்வாமிமலை, திருவானைக்கா, திரிசிராமலை, மதுரை,இராமேசுவரம், முதலாக மற்றுள்ளஸ்தலங்களைப் பலகால் தெரிசித்தடையும் பயனை யொருகால் தெரிசி தளவில் கொடுக்கத்தக்க திருவையாறு,திருப்பழனம், திரு ச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப் பூந்துருத்தி, திருநெய்த்தானம், என்கிறசப்தக்ஷேத்திரங்க ளுள் முதன்மையாயுள்ள திருவையாற்றின் மான்மியத் தையுனக்குச் சொல்லுகிறேனென்று நாதசன்மா அனவத் தியாதேவிக்குச் சொல்லியவாறு உனக்குச் சொல்லுகிறே னென்று பரமசிவனானவர் பார்வதிதேவியாருக்கு ச்சொ ல்லியருளினார். அவ்வண்ணமே உனக்குச்சொல்லுகிறேன் நீ சிரத்தையாகக் கேட்கக்கடவாயென்றும்; சுமந்துரிஷி யானவர்தேவவர் மாராஜாவுக்குச்சொல்லியருளினார். அதை

இப்பொழுது உங்களுக்குச் சொல்லுகிறேனென்றருதபு
ராணிகர் சொல்லததொடங்கினர்.

புராணவரலாறு.

முற்றிற்று.

## க-வது துஷ்பிரவர்த்தி முத்தி அடைந்த அத்தியாயம்.

வர்ணாச்சிரம தருமத்தைவிட்டவனும் எப்பொழு
தும் பிறருக்குக்கெடுதிவிளைபபவனுமாகிய துஷ்பிரவர்ததி
யென்னுமோர் பிராமணனிருந்தான். அவன்அதிரூபலாவ
ணியமுள்ளதன்றாயைத் தன்பிதா வில்லாத வேர்நாள்அதி
மோக மயக்கத்தாற் புணர்ந்தான். அச்சமயத்தில் தன்பிதா
வானவர் வந்தார், வந்தவரை அம்மகாபாதகன் கண்டு கா
ம மயக்கத்தாற் பழிபாவங்கட்கஞ்சாமற் கோடெறியால்
வெட்டி அவர்உயிரைப்போக்கி முனபோலவே தனதா
யைப் புணர்ந்தான். உபநயனஸம்ஸ்காரம் பண்ணிவைதத
தாற்குருவும், அன்னதானம், அபயதானம், வித்தியாதான
ம், ஜனனம், முதலான காரணததாற் பிதாவும், தவசில
ம் ஒழுககம், அதிதிபூஜை, சிவபூஜை, க்ஷேத்திர, தீர்ததா
டனம், வேதமோதல், முதலானகாரணததால்பிராமணோ
த்தமருமான தனபிதாவைக் கொலைசெயதநிமித்தம் பிரம
கத்தியும், யாவரும் மாதருபூஜை செயயவேண்டுமென்று
வேதததில் விதிததிருககஅதைவிட்டுத தன்றாயைக் கற்பழி
த்துப் புணர்ந்ததால் மகாபாவமும் அவனைப்பற்றிக்கொள்
ள அதனாற் சித்தப் பிரமையுண்டாகித் தன்தேசம், தன்கிர

கம், சுற்றத்தார் முதலானவர்களையும்விட்டு, அநேகதேசம் மலை, காடு, முதலானதுகளிற் றிரிந்து அவசனாய்க் கருநிற மடைந்து பசி, தாகத்துடன் அலைந்து அனேககாலஞ் சென்றபின், திருவையாற்றில் காவேரிநதிக் கரையையடைந்து சிலகாலஞ் சென்றபின், அநேகஜனங்கள் மாகமாசத்தில் ஒருநாள் சூரியோதயத்திற்குமுன் கூட்டமாக ஸ்நானஞ் செய்யவந்தார்கள். அவர்களைத் தூரத்திற்கொண்டு அந்த மகாபாதகன்பின்சென்றான். அக்காலத்தில் புண்ணியநதியாகியகாவேரியில் ஸ்நானஞ்செய்துகொண்டிருந்த ஓர்பிராமணோத்தமர் தன்னிரண்டு கைகளாற் சலத்தை முகந்து அவன்மேல்வீச அவனைப்பற்றியிருந்த பிரமகத்தியானது அவனைவிட்டு நீங்கித் திவ்விய சரீரத்தையும், கலக்கமில்லாத அறிவையுமுடையவனாகி, இங்குநாம் வரவேண்டிய காரணம் யாதென்று ஆலோசித்துநிற்குங்காலத்தில், பூர்வபுண்ணியத்தாற் காவேரிசலமானது இம்மாகமாசத்திலுன்சரீரத்திற் பட்டமையாலுன்னைப்பற்றியிருந்தபிரமகத்தி நீங்கியது. உன்னாற் செய்யப்பட்ட மாதுர்கமன முதலான கொடிய பாவங்களுக்குக் கும்பீபாகமுதலான அசங்கியநரகங்களில் அநேக கற்பகாலங் கிடந்து நீ வாதனை அடையவேண்டியது. அப்பாவங்களை அநுபவியாமலிருக்கவேண்டினால் உன்மரணபரியந்தம் பஞ்சநதத்தில் வசித்துப்புண்ணிய தீர்த்தமாகிய காவேரியில் தினந்தோறுந் திரிகாலஸ்நானஞ்செய்து பரமசிவதரிசனம் பண்ணிக் குரூபதேசத்தாற் பஞ்சாக்ஷரசபம் தினமொன்றுக்குப் பதினாயிரஞ்சபித்து, நூறுபிரதக்ஷிணமும், ஏகாதசருத்திரசபமும் ஏகவாரபோசனமும், வர்ணாச்சிரம தர்மாசரணமும், உற

தியாகச்செய்வாயேல் உன்பாவப்பிராயச் சித்தமாகும். இல்லாவிடில் அநேக கற்பகாலம் நரகவாதனை அடைவாயென்று ஆகாயத்தில் அசரீரி உண்டாயிற்று. அவ்வசரீரியைக்கேட்டு த்தன்மரணபரியந்தம் அவ்வாறே திருவையாற்றில் வசித்துக் காவேரிஸ்நானமுதலானதும்செய்து, மரணமடைந்து, இந்திரலோகத்தைப்பெற்றுப் பின்பு, பூர்வபுண்ணியப் பிரபாவத்தால் நூறு சனனம் பிராமணனாகப்பிறந்து, கடைசியில் சந்நியாசம் பெற்று, இந்திரியநிக்கிரகஞ்செய்து விரக்தனாகப் பிறவாமுத்தியடைந்தான். துஷ்பிரவர்த்தி மிகக்கொடிய பாவங்களைச் செய்தமையால் நூறுதரம் பிறந்து முத்திடைடைய வேண்டியதாயிற்று. புண்ணியாத்மாக்கள் ஒரேசன்மத்தில் முத்தியடைவது சத்தியம்.

முதலாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உ-வது- சிவப்பிரியர்சாரூப சாமீபமடைந்தவத்தியாயம்.

காவேரிதீரத்திற்பிறந்தவர்களும், அறுபத்துநாலுகலைக்கியானங்களையறிந்தவர்களும், நாலுவேதம்-ஆறங்கம்-மீமாஞ்சை-நியாயசாஸ்திரம்-பதினெண்புராணம், தர்மசாஸ்திரம்- முதலானவைகளை ஐயந்திரிபறவுணர்ந்தவர்களும், காமக்குரோத லோப மோக மத மாச்சரியமென்னும் அறுவகைக் குற்றங்களை நீக்கினவர்களுமாகிய சிவப்பிரியரென்றும, சுதர்மாவென்றும், இரண்டு பிராமணோ

த்தமர்களிருந்தார்கள். அவ்விருவரிற் சிவப்பிரியர், திருவை யாற்றில் காவேரியிலனுந்துவருஷம்ஸ்நானஞ்சொர்தமாக மாசத்திற்சூரியோதயகாலத்தில் நியமவிதிப்படிவிசேடஸ்நா ன தான ஜப ஹோம தர்ப்பணாதிகளுடன்மகாதவஞ்செய் ததுமன்றிக்,கங்கையையுஞ்-சந்திரனையுந் தரித்தசடையை யுடையவரும்- நீலகண்டத்தையுந் திரிநேத்திரத்தையுமுடை யவரும்-உமைகலந்த வாமபாகத்தையுடையவரும்-பக்தசம்ர க்ஷகருமாகியபரமசிவனைஅருச்சனைசெய்தும்-சிவாலயத்தி ற்றிருவிளக்கிட்டும்- ஏகாதசருத்திர சபத்துடன் நூறுபிரத க்ஷணமும் தாரகமந்திரமாகிய பிரணவத்துடன் முப்பதினா யிரம் பஞ்சாக்ஷரசபமும்- சாபாலஉபநிஷதத்திற் சொல்லி யவிதிப்படி விபூதியுத்தூளனத்துடன்- திரிபுண்டரமும்,உ ருத்திராக்ஷங்கோத்தஉபவீதமும், உருத்திராக்ஷமாலிகை யுமுடையவராய்ச் சிவபணிசெய்தும், பஞ்சாந நாதர்பிரீ தியாக அறுவகைச்சுவையுடன் பிராமண போசனமுஞ் செய்துவந்தார். சுதர்மரானவர், வேதத்திற் சொல்லியவி திப்படி சோமயாகமுதல் அனேகயாகங்கள்செய்து, யாக முடிவில் பிராமணருக்கு அளவில்லாத சொர்ன தானத் துடன், அன்னதானமுஞ்செய்து, தன்னாச்சிரமத்தில்வசித் தார். இவ்வாறுநெடுங்காலம்நடத்தி, அவ்விருவர்களும் ஏ ககாலத்தில் மரணமடைந்தார்கள். அப்பொழுது இந்திர னவன்தன்தூதரைநோக்கி,அநேகதர்மங்களைச் செய்தபு ண்ணியான்மாக்களாகிய சிவப்பிரியர், சுதர்மரென்பவரி ருவரையும்- என்னுடன் ஏகாசனத்தில்வீற்றிருக்க அழை த்துவாருங்களென்று உத்திரவுகொடுத்தான். அப்பொழு

தேதூதர்கள் நவரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டுத்தே வமாதர்களால் விளங்குகின்ற விமானத்துடன் பூமியில்வ ந்து அவ்விருவர்களையும் அழைத்துக் கொண்டுபோந் தரு ணத்திற், கைலாசபதியாகிய பரமசிவனானவர் நந்தியெம் பெருமானையழைத்து, நீ இப்பொழுதே சிவகணங்களு டன்சென்று இந்திரனுலகத்திற்குச் செல்கின்ற சிவப்பிரி யரென்னும் சிவபக்தரை நம்மிடத்திற்கழைத்துவா வென் று கட்டளையிட்டருளினர். அவ்வாறே நந்திகேசுவரா, சி வகணங்களுடன்சென்று, இந்திரலோகத்திற்கேகுஞ் சிவ ப்பிரியர்-சுதர்மா என்பவரிருவரிற் சிவப்பிரியரை மாத்தி ரம் அழைத்துக்கொண்டுவந்து திருவையாற்றிற்செம்பொ ற்சோதியார்மருங்குவிடுத்தனர். உடனேபரமபதியானவர் சிவப்பிரியருக்கு சாருப்பியமளித்தருகில் வைத்தனர். பின் பு-தேவ்தூதர்கள் சுதர்மாவொருவரை மாத்திரமழைத்து க்கொண்டுபோயமராவதிக்கிறைவனாகிய இந்திரன்முன்வி டுத்துச், சசிமணாளனாகிய சுரர்குலாதிபனே! தேவரீருத்தி ரவின்படி சிவப்பிரியர் சுதர்மாவிருவரையும் அழைத்துவ ருமாககமத்தியில், நந்திகேசுவரர் சிவகணங்களுடன் வ ந்து பலாத்காரமாகச சிவப்பிரியரைமாத்திரம் அழைத்துக் கொண்டுபோய்விட்டாரென்றுசொன்னாகள்.அதைக்கே ட்ட விந்திரனுடனேவச்சிராயுததரனாக ஐராவதத்தின் மே லாரோகணித்துப் பஞ்சநதத்தையடைந்து சிவகணததின் மததியில் வேத்திரபாணியாக வெழுந்தருளியிருந்த நந்தி தேவரைத்தரிசித்துச சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தெழுந் துவாய்பொத்திக் கைகட்டிநின்றான். பின்றவிந்திரனை நந்

திதேவர்பார்த்து இந்திரனே! சுகமாவென்று வினவி, இப்பொழுதிங்கு நீ வந்தகாரியமென்ன? அசுரர்களாலேதாவதிபக்கமுண்டோவென்றுகேட்டார். இந்திரன், சுவாமி சிலாதமுனிவர்புத்திரனே! எப்பொழுதுஞ் சிவபூஜா துரந்தரனாகிய வடியேனுக் கசுரரால் யாதொருதொந்தரவுமில்லை. ஆதிகாலத்திற்பரமசிவனாலெனக்குப்பட்டாபிஷேகஞ்செய்து, புண்ணியகருமத்திற்குள் ளுலகபதவியையளித்தவாவென்றுகொடுத்தவுத்திரவின்படியேசிவப்பிரியர்சுதாமாவிருவரையுந்தூதர்களென்றுலகத்திற்கழைத்துவருமார்க்கத்திற் றங்கள்சிவகணத்துடன்வந்து, சிவப்பிரியனைமாத்திரமிங்கழைத்துவந்த, காரணந்தெரிந்துகொள்ளவந்தேனென்றான். நந்திகேசுவரரிந்திரனைப்பார்த்து இந்திரனே! திருவையாற்றிலவசித்து, சசெம்பொற்சோதியாரைத்தியானித்துத்தெரிசித்தவர்களுக்கு மீண்டுமொன்றுலகத்திற் பிறக்குமுன்பதவிமுதற்பிரமவிஷ்ணுக்கள்பதவியுமருகமல்ல அன்றியுமவர்களுக்குக்கருப்பவாசம்- நரகம்- மகாபாதகம்- பலகாரணத்தாற் கொஞ்சம் கொஞ்சமாகச் சேரும பாதகம்- ஒருவனை அபாத்திரனாகச் செய்யும்பாதகம்-மலபாதகம்-பிரகீர்ணபாதகமுதலானதும்- கிடையாதாகையாலிந்தச்சிவப்பிரியரைந்து வருஷகாலம் புண்ணியநதியாகிய காவேரியில் ஸ்நானஞ்செய்ததோடு மாகஸ்நானமும்- சிவகைங்கரியமுஞ் செய்ததாற் சிவலோகத்திற் சிவரூபத்துடன் சிவசமீபவாசமடைந்தனர். சுதர்மாவானவர், சிவகைங்கரியமின்றிக் கேவலங்கர்மத்தைமாத்திர மனுஷ்டித்துவந்தவராகையா லதற்குப் பிரயோசனமான வுன்னு

லகமாகிய சுவர்க்கலோகவாசங்கிடைத்தது. நீ இனிமே
ல வரவர்கள்செய்யுங்கருமததைத் தெரிந்துநடத்துவதோ
டு இதை எமன்முதலானவர்கட்குந் தெரிவித்து அரசுசெ
ய்யக்கடவாயென்று கட்டளையிட்டருளினார். இந்திரனான
வன் மகாலிங்கதர்சனத்தோடு நந்திகேசுவரரை வுணங்கி
விடைபெற்றுக்கொண்டு தன்னுலகமாகியவிந்திரலோகத்
தையடைந்துசுதர்மா வோடாசானத்தில் வீற்றிருந்தான்.

இரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ௩-வது சுரதமகாராஜன்புத்திரனடைந்தவத்தியாயம்.

அஸ்தினாபுரியிலே சந்திரவம்சத்திலே பிறந்தவ
ரும் நான்குவருணாச்சிரம ரக்ஷகரும், சத்தியசந்தரும், யா
கசீலரும், சதாதர்மசிந்தையையுடையவருமாகியசுரதமகாரா
ஜனென்பவர்நெடுங்கால மரசுசெய்து வந்தார். அவர்தன
க்குப் பின்னரசு செய்வதற்குப் பிள்ளையில்லாமல், அசு
வமேதத்தோடு புத்திரகாமேஷ்டியாகமுஞ் செய்துஞ் சந்த
தியில்லாததினால் மிகுந்ததுக்க முடையவராய்க் கங்காதீர
மடைந்து அவ்விடத்திற் காயக்கிலேசஞ்செய்து மனால்
யத்தோடு பரமதருமமான தவசுசெய்துகொண்டிருக்கும்
நாரதர் முதலான மகரிஷிகளைக்கண்டு நமஸ்கரித்தெழுந்
து நின்று, சுவாமி முனிசிரேஷ்டர்களே! நான் அசுவமேதத்

தோடு புத்திரகாமேஷ்டி யாகமுஞ்செய்தும் புத்திரனில்லாதவனுனேன். இதைத்திருவுளங்கொண்டு எனக்குப்புத்திரனுண்டாவதற்குக் காரணமும் நான்பூர்வஞ்செய்த பாவமுஞ்சொல்லி யருளவேண்டுமென் றிரந்துநின்றார். கங்காதீரவாசிகளாகிய முனிவர்கள் அரசனைநோக்கி, அரசனே! நீ பூர்வ[illegible]றையும் பசுவையுந்தனியாகும்படி பிரித்துவிட்ட [illegible]ரலிந்தச் சன்மத்திற்பிள்ளை யில்லாதவனுய், அத[illegible]பிராயச்சித்தமாகக் கைலாய தரிசனஞ்செய்வாயேற் புத்திரனுண்டாவானென்றார்கள். சுபதராஜன் றன்னூருக்குவந்து மந்திரிவச மிராச்சியத்தையொப்பிவித்துத் தான் அசுவாரூடனுகக் கைலாசதெரிசனஞ்செய்வதற்குப்போனுர். அவர்போனபிறகு அவருக்குச்சத்துருக்களான அனேக அரசர்கள்வந்து பட்டணத்தை வளைந்து முற்றிகைபிட்டார்கள். அதைககண்டமந்திரி சுபதராஜனையழைத்துவரும்படிதூதர்களையனுப்பினுன். அத்தூதர்கள்காற்றிலுமதிகவேகமுள்ள, குதிரைகளிலேறி நெடுந்தூரஞ்சென்று, அரசனைக்கண்டு நடந்தசங்கதிகளைத் தெரிவித்தார்கள். அரசன் சற்றுநேரமாலோசித்து, க்ஷத்திரியர்களுக்கு இராச்சியபாலனஞ்செய்தல்தான் பரமதர்மமென்றெண்ணித்தன்பட்டணமாகிய ஹஸ்தினுபுரியையடைந்து சத்துருக்களாகியவரசர்களோடுஐந்துநாள் யுத்தம்பண்ணியுஞ்செயிக்கமுடியாமற் பின்னோர் பாணத்தையெடுத்து, அகோரஸ்திரத்தைச்செபித்து, வில்லிற்பூட்டிப்பிரயோகஞ்செய்தார். அவ்வஸ்திரமானது அக்கினிச்சுவாலாமாலைகளைக்கக்கிக்கொண்டுபோய்ச் சத்துருக்களை நாசமாகும்வண்

ணந்தமித்துவிட்டது. அதன்பின்னரசன், அனேகவருஷகாலமரசாக்ஷி செய்துகொண்டிருந்தும், புத்திரனில்லாமையால்மிகுந்தவிசனத்துடன் திக்குவிசயம்பண்ணப்போகிறவர் போற்றீர்த்தயாத்திரையை மனதிலுத்தேசித்து, அனேகதீர்த்தயாத்திரைசெய்து கடைசியாகக்காவேரிநதியையடைந்து, அந்நதியினிருகரையிலுமுள்ள திவ்வியக்ஷேத்திரங்களைத்தெரிசித்துக்கொண்டு, ஜீவன்முத்திக்ஷேத்திரமாகிய திருவையாற்றையடைந்தார்.

அடைந்தவரந்த க்ஷேத்திரதீர்த்தமாகிய பஞ்சநதகாவேரியிற்சங்கற்ப பூர்வமாக ஸ்நானஞ்செய்து அனேகதானங்களுடன் க்ஷேத்திர சிராத்தமுஞ்செய்து, சிவதெரிசனஞ்செய்யத்திருக்கோயிலினுழைந்து, அங்குபரமப்பிரகாசமாகவிளங்கிக்கொண் டிருக்குஞ்,செம்பொற்சோதியானரைக்கண்டு, பிரதக்ஷணநமஸ்காரத்துடன், அருச்சனைசெய்தபின், அவ்விடத்திற்சந்நியாசம் பெற்று இந்திரிய நிக்கிரகயோகத்துடன் ஜடாபஸ்ம ருத்ராக்ஷதாரியாகச் செம்பொற்சோதியானைத் தியானித்துக்கொண்டு நின்றதூர்வாசமகரிஷியைக்கண்டு, நமஸ்கரித்தெழுந்து நின்றார். நின்றஅரசனைத்தூர்வாசமகரிஷியானவர் பார்த்து,இராஜனே! உம்முடைய நாட்டிலும் நகரத்திலுமுள்ள ஜனங்களோடு நீருஞ்சுகமோவென்றனர். அதைக்கேட்ட சுரதமகாராஜா, தூர்வாசமகரிஷியைநோக்கி, சுவாமி! தேவரீருடைய அனுக்கிரகத்தால், அனேககாலமிராச்சிய பரிபாலனஞ்செய்துவந்து, அவ்வாறேயெனக்குப்பிறகு பாலனஞ்செய்யப்புத்திரனில்லாததுக்கத்தாற்கங்காநதியையடைந்து,அத்தீரவாசிகளாகிய நாரதர்முனிமுதலான மகரிஷிகளைக்கண்டு,

அடியேன்குறையை விண்ணப்பஞ்செய்து கொண்டேன் அவர்கள் நீ பூர்வத்திற்கன்றையுந் தாயையும் பிரித்ததோஷத்தாற்புத்திரனில்லாத வனானபதற்குப்பிராயச்சித்தமாக்கைலாயதரிசனஞ் செய்வாயேற் புத்திரனை யடைவாயென்றார்கள்.

அதைக்கேட்டபிறகென் பட்டணமாகிய அஸ்தினாபுரியையடைந்து, இராச்சியத்தை மந்திரி வசத்திலொப்புவித்து, நான்கைலாசயாத்திரை செய்யப்புறப்பட்டேன். அத்தருணத்திலென் சத்துருக்களனேகர் கோட்டையை வளைந்துமுற்றிக்கையிட்டதை மந்திரிமார்களனுப்பிய தூதர்களா லெடுந்தூரம்போன நான்றெரிந்து திரும்பியஸ்தினாபுரியையடைந்து, சத்துருக்களைச்செயித் தரசாக்ஷிசெய்துவருங்காலத்தில், புத்திரனில்லாத துக்கத்தாற் றிக்குவிஜயஞ்செய்யப் புறப்படுகிறவனைப் போற் றீர்த்தயாத்திரையை மனதிலுத்தேசித் தநேகதீர்த் தயாத்திரைபண்ணிக்கடைசியாக க்காவேரி நதிக்கரையை யடைந்தந்நதியினிருகரையிலுள்ள க்ஷேத்திரங்களைத் தெரிசனஞ்செய்திப்பொழுதிந்த க்ஷேத்திரமடைந் தேனென்றார். அதைக்கேட்டதூர்வாசமுனிவர் அரசனே! உன்பாவநிவர்த்தியின்பொருட்டுக் கைலாசதெரிசனஞ் செய்யவேண்டியது ஆவசிகமானதாற் கைலாசத்தையிந்தக்ஷேத்திரத்தில் வரவழைக்கிறேனென்று, பரமபதியாகிய சிவபெருமானைத் தியானித்துத்தினமொன்றுக்கு முப்பதினாயிரம்வீதம் நாற்பதுநாட்பஞ்சாக்ஷரஜபஞ்செபித்துக்கடைசியிற்பரமசிவனே - உமைபாகனே - ருத்திரனே - சங்கரனே - பிரமவிஷ்ணு தேவேந்திராதிகளாற் பூசிக்கப்பட்டவனே - சூலபா

ணியே- அடியார்களடையும் பாதபங்கயனே - பிர்மஞா னிகளடையுமாத்மசொரூபனே - ஸ்வானுபூதிப் பிரசித்த னே - சர்வசாக்ஷியனே - விசுவாதீதனே - மகரிஷி யுத்த மனே - முத்தொழின்முதல்வனே - சிவஞானத் தாற்சம்சா ரவாதைகளை நீக்கி மோக்ஷானந்தத்தை யளிப்பவனே - வே தவேதாந்த வுபநிடதத்தான் முறையிடப்பட்டவனே- அக ண்டபரிபூரண சச்சிதாநந்த பரப்பிரமமே-சந்திரசூடனே, பஞ்சநதீசனே! என்று ஸ்தோத்திரம் பண்ணினார். அப் பொழுது பரமசிவன்- அம்பாள்- விக்கினேசுவரர் குமாரர் சமேதராக நந்தி தேவர்முதலான சிவகணங்களுடன் சர்ப் பாபரண வலங்கிருதராயும், நகசிகை பரியந்தம் விபூதி உத் தூளநமும் அதன்மேல் உருத்திராக்ஷ மாலிகை பூண்டவ ராயும், ஒருகையிற் பிரமகபாலமும், ஒருகையிற்பிநாகமெ ன்னும்வில்லும், ஒருகையிற்சூலமும், ஒருகையில் மழுவாயு தமுந் தரித்துக் கைலையங் கிரியைபொருந்த ரிஷப வாகனரு டராய்ப்பிரசன்னமாகிததூர்வாசரருகில்வந்தார். வந்தவரை சங்கராவதாரமாகிய தூர்வாசமகரிஷியானவர்கண்டு ஆ னந்தமடைந் தெழுந்து பிரதக்ஷிண நமஸ்காரம் பண்ண பரமசிவனானவர் பக்தசிகாமணியாகிய தூர்வாசரே! உம் முடைய ஸ்தோத்திரத்தாலும் தவசாலும் பிரசன்னரானோ ம். உம்முடைய மனதினினைத்ததைக் கொடுக்கின்றோம். அதனைசசொல்லு மென்றார். அந்தத்திருவாக்கைக் கேட்டு ததூர்வாசர் சுவாமி - தயாமூர்த்தியே! சமஸ்தயோகிகளுக் குமுத்திகொடுக்கின்ற தேவரீர்தெரிசனத்தால் கிருதார்த்த

றுனேன், ஆனாலும் தேவரீரிடத்தில் யாசிக்கின்றேன்; மிகு ந்ததருமமுள்ளவனும் *புண்ணியகீர்த்திப் பிரதாபத்தை யு டையவனுமாகிய சுரத மகாராஜன் புத்திரனிமித்தமென் னைச்சரணமடைந்தான். அவனுக்குப்பூர்வத்தில்வந்த பாப விமோசனமாகக கைலாச தெரிசனத்தாற் புத்திரப்பிராப் தி நிச்சயிக்கப்பட்டது. இவனேகைலாசம் போலதற்கசக் தனாகவிருக்கின்றான்.அவனுக்குக்கைலாசத்தை யிந்தக்ஷே த்திரத்தில் வரவழைக்கின்றேனென்று பிரதிக்ஞைசெய்து விட்டேன்.ஆகையாலிவ்வரசனுக்குக் கைலாசதரிசநத்தோ டு புத்திரப்பேறு மளித்தருள வேண்டுமென்றார். பரமசிவ ன் நந்திகேசுவரரைப்பார்த்து நந்தியே! நீ அதிசீக்கிரமாகச் சென்று,கைலாசபர்வதத்தை யிவ்விடங்கொண்டு வாவெ ன்றுத்திரவுகொடுத்தருளினார்.அவ்வண்ணமேநந்திகேஸ்வ ரர் சென்றுகைலாசத்தைக்கொண்டுவந்து, ஆலயத்திற்கிரு மருங்கினுநிறுவிய பரமசிவனுக்குவிண்ணப்பஞ்செய்தார். உடனே பரமபதியானவர் தூர்வாசமுனிவரையழைத்து, தூர்வாசமுனிவரே! நம்முடைய வாலயத்தினிருபக்கத்திலு ங்கைலாசபருவதமானது ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. அ வைகளில் நாஞ்சிவலிங்கசொரூபமாக, வெழுந்தருளியிரு க்கின்றோம் புத்திரனில்லாதவர்கள் பக்திசிரத்தையாக அவ் விரண்டிடத்திலுநம்மை நதெரிசிப்பார்களானால்,புத்திரனை யடைவது நிச்சயம். அன்றியுமிந்தக்ஷேத்திரத்தில்,வாஸம்ப ண்ணப்பட்டசகலஜீவராசிகளுங் கைலாசவாசிகளேயாய

ன்று சொல்லியதோடு, அரசனுக்குத் தெரிசனஞ்செய்வியு மென்றுசொல்லி, மஹாலிங்கத்தில் மறைந்தருளினர். தூர்வாசர் அரசனையழைத்துவந்து, வடகைலாயத்தென்கைலாயமிரண்டிடத்துஞ்ஜோதிசொரூபமாகப் பிரகாசிக்கின்ற கருணாநிதியாகிய பரமபதியைக்காட்டினர். அரசன்கண்டு மனதிலானந்தமடைந்து, பரமசிவனை.த்தாவர்சங்கமசொரூபனே,விஷ்ணுவின்கண்ணிலங்கியபாதனே- பிரமன்சிரபங்கனே,சிவசொரூபனே,ஆலகாலவிஷபோசனனே, வேதவேதாந்தஆகமங்களாலறியப்படாதவனே,நாமரூபமற்றவனே• எல்லாவற்றிற்கு முதன்மையானவனே, நிர்த்தோஷகுணரூபனே• திரிபுராந்தகனே, கைலாசகிரிக்குப்பூஷணமாயுள்ளவனே-பஞ்சநதீசனே• ஜப்பியேசனே! என்று ஸ்தோத்திரம் பண்ணினர். பரமசிவன் அந்தோத்திரத்திற்குமனமுருகி இலிங்கத்தின்மேற் சோமாஸ்கந்த மூர்த்தியாக த்தோன்றிச்சுரதமகராசனே! எமதனுக்கிரகத்தாற்றீர்க்காயுளுள்ளவனுஞ்சிவகைங்கரியப்பிரியனும்வேதவேதாங்கபாரங்கதனுமான வோரபத்திரனைச்சீக்கிரத்திலடைவாயென்றுதிருவாய்மலர்ந்தருளிமகாலிங்கத்தினுள்ளே மறைந்தருளினர். அரசன் ஆனந்தமடைந்து, தூர்வாச முனிவரைநமஸ்கரித்து, ஷாட்குண்யபரிபூரணரே தேவரீரனுக்கிரகத்தாற் கைலாய தெரிசனத்துடன் பரமசிவதரிசனமும பெற்றேன். இனியிவ்வுலகததிலடையும் பலனொன்றுமில்லை. அடியேனுக்குவிடைதந்தருளவேண்டுமென்றார். அவ்வண்ணமே தூர்வாசமுனிவருத்திரவுகொடுககப்பின்புஅரசன் சதுரங்கசேனையுடன், தன்னகரம்போய்ச்சேர்ந்து,அரசாட்சியைக்கைககொண்டு, நான்கு வருணத்தாரும் தத்த

மக்குரியவொழுக்கத்தினின்றுந் தவறாது அரசாக்ஷிசெய்து
வந்தார். இவ்வண்ணநிகழுங்காலத்தில், அவ்வரசன்மனை
யாள்கர்ப்பவதியானாள். அப்பொழுதரசன் பும்சவனசீமந்த
முதலியகருமங்கள்செய்தான். பூரணமானபத்தாவது மாசத
தில்அவன்மனைவி இலக்கனபலம்- சந்திரபலம்-முதலான சுப
முகூர்த்தத்தில் நல்லபுத்திரனைப்பெற்றாள். உடனேஅரசன்;
அளவில்லாததனம்-தானியம். வஸ்திரம்-ஆபரணம்-கோ, பூ
மிமுதலியதானங்கள்மனப் பிரீதயுடன்வைதிகப்பிராமணோ
த்தமருக்குக்கொடுத்து, அக்குழந்தைக்குச்சிவதத்தனென்று
பெயரிட்டுஅதன்பின்சாதகர்மா- அன்னப்பிராசனம் கர்ண
வேதையென்கிறஆண்டுநிறைவு. சவுளம்-உபநயனமுதலிய
கிரியைகளைக்குறைவறநடத்தி, வேதவேதாங்கம்தனுர்வே
தம்-ஆயுள்வேதம் யானையேதங்குதிரையேதம்- இரதா
ரோகணம்- அஸ்வப்பரீட்சை, ரதநப்பரீட்சை, பாதசாஸ்
திரம்- இராஜநீதிமுதலியஅறுபத்துநான்கு கலைகளியானமுப
பதிநான்குவித்தையுங்கற்பித்து, யௌவராச்சிய பட்டாபி
ஷேகமுஞ்செய்வித்து, சிலகாலமானபின், இராசசியததி
ற்புத்திரனை வைத்துவிட்டு ச்சிலசேனையுடன் திருவையாற்
றையடைந்து. காவேரிநதியில்ஸ்நானஞ்செய்து, பரமசிவ
னெழுந்தருளியஆலயத்திற்குவந்து, தெரிசனஞ்செய்து அனே
கதிரவியத்துடனூறுகிராமங்களைதானஞ்செய்தான். அதன்
பின் வைகாசிமாதத்திற்பூர்வபக்ஷத்திற் றுசாரோகணமுத
ல்ரதோத்சவஞ்செய்து, உசசவத்தின் மத்தியகாலததிற்பக்தி
பூர்வமாகஷட்ரசத்துடன் பிராமணபோசனஞ் செய்வித்
துப்பத்தாநாள் துசாவரோகணஞ்செய்து, தன்னகரம்போ

ய்ச்சேர்ந்தான். சிலகாலஞ்சென்றபின் சிவபக்திசிகாமணி யாகிய-சுரதமகாராஜன் பரமகருணாநிதியாகிய, பரமசிவ ன்றிருவடியிற்கலந்தனன். சுரதமகாராஜன் சிவலோகமடைந்தபின் புத்திரனான சிவதத்தமகாராஜன் அரசாட்சி செய்துவருங்காலத்தில் தன்குலகுருவாகிய தௌம்ய மகரிஷியிடத்திற்பஞ்சநதீஸ்வரானுக்கிரகத்தாற் றன்பிறந்ததைக் கேட்டு, பஞ்சநதக்ஷேத்திரமவந்து, பங்குனிமாசஞ்சுக்கிலபக்ஷத்திற்றுசாரோகணமுதல் ரதோசவம்வரையிற செய்துமுடித்து, தத்திருமபத்தன்னகரத்தையடைந்து, தன் பிள்ளையாகியசங்கரமகாராஜனுக்குப்பட்டாபிஷேகஞ்செய்துவைத்துச் சிவலோகத்தையடைந்தான். அதனபின்சங்கரமகாராஜன் திருவையாற்றையடைந்து, சித்திரைமாசம் சுக்கிலபட்சத்தில் ரதோச்சவஞ்செய்துவைத்துத்தன்னகரத்தையடைந்தான.

௩-வது அத்தியாயம்.

முற்றிற்று.

---

## ௪-வது சுசரிதன் எமபயம்நீங்கிமுத்தி அடைந்த அத்தியாயம்.

கௌதமீதீரதேசத்திற்சுதவசென்னும்பிராமணன்- சுசீலையென்னுமனையாளோடு ஒழுக்கம் ஆசாரமுதலியனவைகளிற் குறைபாடின்றி இல்லறநடத்திவந்தனர்- அ

வர்செய்த நற்றவப்பேறாக மனையாளோராண் குழந்தையைப்பெற்றனள். அக்குழந்தைக்குச் சுசரிதனென்று நாமமிட்டு வளர்த்துவருங்காலத்தில அத்தேயத்தில் மிகுந்தபஞ்சகாலம்நேரிட்டது. அப்பஞ்சத்தில் மிகுவருத்தமடைந்து அவ்வூரைவிட்டுத்தன்மனையாளையும்புத்திரனையு மழைத்துக்கொண்டு அனேகதேசங்களைக்கடந்து வரும்போதுமார்க்கமத்தியிற் சுதவசியென்னும்பிராமணன் மரணமடைந்தார். உடனே அவர்மனையாள்-சுசீலையென்பவளும் அனுமரணமடைந்தாள். சுசரிதன்-தாய் தந்தை யிருவருக்குஞ்செய்யவேண்டியகிரியைகளை முடித்துவிட்டு மிகுந்த துக்கமுடையவனாயனேக நாடுநகரங்களெல்லாங்கடந்து சிவாலயங்களாலலங்கரிக்கப் பட்டவிருகரையையுமுடைய காவேரிநதியை யடைந்து அங்கங்குள்ள சிவாலயங்களையெல்லாந்தெரிசித்துக் கடைசியில் திருப்பழனம்வந்துகாவேரிஸ்நானஞ்செய்துநித்தியகருமங்களைமுடித்துஅங்குள்ள பிராமணாளில்லத் திலையமேற்றுண்டு வழிநடைசிரமத்தா லோர்விருக்ஷத்தினடியில் மிகுந்த துக்கமுடையவனாய் நித்திரைசெய்தான். அப்பொழுது-கோரரூபமும் வக்கிரதந்தங்களையுமுடைய வோர்புருஷன் கனவிற்றோன்றி இன்றைக்கைந்தாநாள் நீமரணத்தையடைவாயென்றுசொன்னதைக்கேட்டெழுந்து மரணபயத்தால் மெய்மறந்து அவசனாய்ப்புலம்பிக்கொண்டு காவேரியினோரமாக நடந்துதிருவையாற்றையடைந்து அங்குள்ளகாவேரியில் ஸ்நானஞ்செய்து வர்ணாச்சிரம தர்மத்தை முடித்துக்கொண்டுவருகையில் சிவாலயத்தின் றெற்குவாயலிலிருந்த கிருபாநோக்கத்தையுடையவரும் தன்பிரமகாந்தியான் மூன்றுலகங்களை விளங்கவை

த்தவரும்- ஜீவகோடிகளுடைய பயத்தைநீக்குபவரும்- வேதவேதாங்க த்தினிச்சயத்தை யையந்திரிபறவுணர்ந்தவரும்- விபூதிதரித்த திருமேனியரும்- நெற்றியிற்றிரிபுண்டரத்தையுடையவரும்- உருத்திராக்ஷமாலிகாபரணரும்- சடாமகுடத்தை யுடையவரும்- காமம்வெகுளிமயக்கமென்னுமுக்குற்றம் நீங்கினவரும்- பஞ்சேந்திரியநிக்கிரகரும்- ஜகத்குருவும்-சிவப்பிரஸாதத்தை யுடையவருமான வசிட்டமகாமுனிவரைக்கண்டு கண்ணீர் பெருகவிட்டுக் கோவென்றலறி அடியேனைரக்ஷித்தருளவேண்டுமென்று திருவடியில்விழுந்தான். உடனே யோகத்திலிருந்த மனதைத்திருப்பிக் காலில்விழுந்தவனை யிரண்டுகையாலுந்தூக்கி நீ யாவன்? எவ்விடத்திலிருந்து வருகிறாய் - உன்பேர் யாது? நீ யெவராற்பயமடைந்தாய்- அந்தப்பயத்தைப்பரமசிவப்பிரசாதத்தாற் போக்குகின்றோம்- நீ அஞ்சாது யாவற்றையுஞ் சொல்வாயென்று வசிஷ்டமகாமுனிவர் உரைக்கச் சுசரிதன் றைரியமடைந்து சுவாமி முனிசிரேஷ்டரே! யான் கௌதமிதீரதேசத்திலிருந்த சுதபசியின்புத்திரன்-அத்தேசத்தினேர்ந்த பஞ்சகாலத்தை நீக்கவேண்டி யென்றாய் தந்தை யிருவருடன்யானும்வந்தேன். மார்க்கமத்தியி லென்றாய்தந்தை யிருவருமரணமடைந்தார்கள். அதன்பின்யான்வெகுதேசங்களைக்கடந்து திருப்பழனத்தை யடைந்து- அங்குள்ள பிராமணருளில்லந்தோறுமையமேற்றுண்டு நெடுந்தூரஞ்சுற்றி வந்த இளைப்பாலோர்மரத்தினடியி னித்திரைசெய்தேன். அப்பொழுதுகோரரூபத்தையுடையவோர் புருஷனென் கனவிற்றோன்றி இன்றைக்கைந்தாநாள் நீ மரணத்தையடைவாயென்று சொன்னதைக்கேட்டுப் ப

யந்தெழுந்து வந்துதேவரீரைச் சரணமடைந்தேன டியே னைரக்ஷித்தருள வேண்டுமென்றான். வசிட்டமுனிவர்- ஞானதிருஷ்ட்டியா லவன்கருமத்தைத் தெரிந்து- சுசரித னே! நீ பூர்வசென்மத்திற் குருமுன்னிலையாற் றெரிந்து கொள்ளாம னீகற்றகல்விப் பலத்தால் வேதாந்தம் உபநி டதமுதலிய சாஸ்திரங்களைத் தெரிந்தமையால் ரௌரவம் கும்பீபாக முதலிய கொடிய நரகங்களில் மானிடவருஷ த்தி னூறுவருஷமதிகவாதையடைந்து பின்கர்மசேடத்தாற் கழுதையாகப் பத்துச்சென்மமும்- நாயாகப்பத்துச் சென் மமும்-அடைந்து பிறகு ஒருஜன்மம் கழுகு- ஒருஜன்மம் காகம்- ஒருஜன்மம் நீசன்- ஒருஜன்மம் சங்கரஜாதி- ஒரு ஜன்யம் சூத்திரன்- ஒருஜன்மம் வைசியன்- ஒருஜன்மம் க்ஷத்திரியனாகப் பிறந்து இந்தசென்மம் பிராமணனாகப் பி றந்தாய் இதுமுதல் பனிரெண்டு சென்மம் பிராமணனாகப் பிறந்து சென்றசென்மங்களி லடைந்த அற்பாயுள்போல் இந்தஜன்மத்திலும்இனிவருஞ் சென்மங்களிலு மற்பாயுளை யடைவாயென்று சொன்னார். சுசரிதன்-ஐயாயகரிஷியே! தங்களைப்பார்க்கிலும்என்னை இரக்ஷிக்க வேறொருவரையு ங்காணேன்- இப்போதுநானடைந்த பயத்தைப்போக்கிய டியேனை இரக்ஷித்தருளவேண்டுமென முனிவர்-உனை இ ரக்ஷிக்கிறேன் பயப்படாதேஎமனைஜெயிக்கும்மந்திரத்தை யுனக்குபதேசிக்கின்றேன்- இன்றுமுதல் காவேரியாற்றில் கலைஸ்நானமும் பகற்காலமுழுவதும் இந்தக்ஷேத்திரத்தி லுள்ளசிவாலயத்தை மௌனமாகப் பிரதக்ஷணமும் இரா த்திரி அஸ்தமனமுதல் உதயபரியந்தம் பஞ்சாக்ஷர செப

மும்- மௌனமாக ருத்திரபாராயணமுஞ் செய்தால் எமன் உன்னிடத்தில்வரமாட்டான்- ஒருகால் வந்தாலும் பஞ்சநதீசுவரர் அவனைசசம்மாரஞ்செய்வார் நானுமிங்குதானேயிருக்கிறேன் - நீ கொஞ்சமாயினும் பயமடையாதேயென்று சொல்லிததன்னுச்சிரமத்தையடைந்தார்.

சுசரிதன் வசிட்டமகாமுனிவர் சொல்லியவாறு ஸ்நானஜபமுதலானதுஞ்செய்து நான்குநாட்சென்றுஐந்தாநாள்மததியானம்ஸ்நானஞ்செய்து, திருக்கோயிலுக்குவரவுதத்தேசித்துப் புறப்படுகையில், காவேரியின்றெற்குக்கரையைப்பார்த்தான். அங்கொருமைக்கடாவிலேறிஅபமிருத்துவுகாலமிருத்துவு, சுரமுதலானரோகங்களுடனும், கருத்தபெருத்த,கோரதந்தங்களையுடையகிங்கரருடனும்,அடிகட்டு-பிடி,யென்று பயங்கரமானவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டுவந்தஎமதருமராஜனைக்கண்டு,பயந்து அந்தோ! நானென்செய்வேனென்று கதறிக்கொண்டு வசிஷ்டமகரிஷியினுச்சிரமததை நோக்கியோடினான். அந்தச்சத்ததைதக்கேட்டவசிட்ட.முனிவர் ஆச்சிரமத்தைவிட்டுவெளியில்வந்து எமன் வந்துவிட்டான் போலுமென்று தன் மனதினினைத்து, சுசரிதப்பிரமசாரியை ரக்ஷிக்கவேண்டுமென்றுகாவேரியைநோக்கி ப்போகையில்மத்தியிற்சுசரிதனைக்கண்டு, நீயலறிக்கொண்டுவருகின்ற, காரணமென்னவென்றுகேட்கச்சுசரிதன் சுவாமி!காவேரியின்றெற்குக்கரையிலெருமைக்கடாவின்மேலேறித் தன்சேனைகளுடன் எமன் வருகிறதைக்கண்டு பயந்து தேவரீரிடத்தில் வருகின்றேனென்றுசொல்ல, வசிஷ்டமுனிவர் தன்னிருகையாலுஞ் சுசரிதனைத் தடவிக்கொடுததுப் பயப்படாதேயென்

றுசொல்லி யவனுடன் தெற்குவாயிலில்வந்து பஞ்சாக்ஷர செபஞ்செய்யென்றுசொல்லித்தாறுஞ் சிவத்தியானத்துடன் பஞ்சாக்ஷர மந்திரஞ்செபித்துத் தெற்குவாயிலில் வதிந்தார். அக்காலையில் எமன் கடாவாகனாரூடனாகத் தெற்குவாயிலுக்கருகில் வரும்போது வசிஷ்டமுனிவர் தம்மைக் கேவலமாகவெண்ணி யிவனைப்பிடிப்பான் போலுமிருக்கின்றதென்று நிச்சயஞ்செய்துபரமசிவனை உமைபாகனே- மாயாதீதனே- அப்பிரமேயனே- மூவருக்குமுன்னோனே- சூலாயுதபாணியனே- அன்பர்களுடைய துன்பங்களையரிக்கப்பட்டவனே- அடியவர்க்கபயமளிப்பவனே- சத்தியமாக் கதைநிலைநிறுத்தப்பட்டவனே- சத்தியஞானாநந்தனே! என்றுஸ்தோத்திரம் பண்ணினார். அப்பொழுதுபரமசிவன் நந்திகேஸ்வரரை யழைத்து, நந்தியே! எமனிடத்திற்பயந்த வசிஷ்டமுனிவர்மாணாக்கனான சுசரிதனை இரக்ஷிக்கும்பொருட்டு எமனை நீ சம்மாரஞ்செய்வாயென்றாக்ஞாபிக்க, நந்திதேவர்கையிற் சூலாயுதங்கொண்டு சுசரிதன்காணும்படி முன்னாகவந்து சூலாயுதத்தைப் பூமியிலூன்றியதன்மேற் கையைவைத்துக்கொண்டு நின்றார். அக்காலையில் எமன்மகிஷாரூடனாகத் தன்சேனையுடன்வந்து நந்திதேவரையுந் திரணமாகவெண்ணிக் கையிலிருந்த பாசத்தைச்சுசரிதன்கழுத்திற் போட்டுத்தெண்டாயுதத்தாலடித்திழுக்க நந்திதேவர்எமனைப்பார்த்து, அடா எமனே! பரமசிவனுத்திரவாலிச்சுசரிதனை இரக்ஷிக்கநான்வந்திருக்கவதை நீசற்றுமெண்ணாமற் கையிலிருக்கப்பட்ட தெண்டாயுதத்

திரலடித்துப் பாசத்தைக்கழுத்தில் வீசியிழுக்கின்றதைநிறுத்தி உன்னுலகத்தை நீயடைவாயென்றுசொல்ல, அவ்வார்த்தையைச் சற்றுங்கவனியாமலிருந்ததை நந்திதேவர்தெரிந்து, ஊழித்தீயையொத்த கோபத்துடன் கையிலிருந்தசூலத்தாலவன்மார்பிற்குத்திப் பூமியிற்சாயத்தார். எமன்மரணமடைந்தான். பெரியோரிடத்திற்பகைத்தாற் "பிறங்கல் கல்லிய கோலொப்பா"னென்ற பழமொழிக்குச்சான்றாயினான். அதன்பின் சுசரிதன் மரணமடைந்தவெமனைக்கண்டு பரமசிவனைநோக்கி, யிந்திரன்முதலானதேவர்களாற்றெரிசிக்கப்பட்ட பாதபங்கயனே - விஷ்ணுமுதலான தேவர்களாலுஞ் செய்யக்கமுடியாத திரிபுரசம்மாரனே- உலகத்தைத்தகித்துக்கொண்டு வந்தஆலகாலத்தையுண்டவனே — புலியதளை யுடையாகவுடையவனே - சர்ப்பாபரணத்தையணிந்த மெய்யனே - என்மேல்வைத்த கருணைநோக்கத்தாற்காலசங்காரனே - பஞ்சநதீசனே! யென்றுஸ்தோத்திரம் பண்ணப் பரமசிவன் தெற்குவாயலின்மேல்பாகத்திலெழுந்தருளித் தன்னைத்துதிசெய்த சுசரிதனைப் பார்த்து, சுசரிதனே! யுனக் குப்பிராணதானஞ்செய்த வசிஷ்டமகரிஷியைப்பிதாவாகவும், ஞானசாரியராகவு, நீயெப்பொழுதுந்தியானி. எம்மாற்கோபிக்கப்பட்டா லாசாரியர்தீர்ப்பார் ஆசாரியராற்கோபிக கப்பட்டாலெம்மா லுந்தீர்த்தலரிது நற்குலத்திற் பிறந்தகன்னிகையை விவாகஞ்செய்துகொண்டுகிரகஸ்தாச்சிரமத்தை யடைந்துதருமத்தைசசெய். தேவப்பிரீதியாகிய பிரமசரியாச்சிரமத்தோடு தியானத்தையும், பிதிர்ப்பிரீதியாகிய புத்திரனையுமடைந்து மூன்றுகடமையு

ந்தீர்ந்தவுடன் உன் மனதை மோக்ஷத்திற் செலுத்தினாலெ யதார்த்தமான வெமது சொரூபத்தை யடைந்துபின னெம்மையடைவாயென்று சொல்லி, வசிஷ்ட மகரிஷியை நோக்கி, வசிஷ்டமுனிவரே! யிந்தச்சுசரிதனை உமது புத்திரனைப்போல வெப்பொழுதும் பாலநஞ்செய்து நற்குலத்திற்பிறந்தவோர் கன்னிகையை விவாகஞ்செய்வியுமென்று சொல்லி; மரணமடைந்து பூமியிற் கிடாத வெமனருகிற்சென்று தமது கிருபா நோக்கத்தாற் பார்த்துச் சிவிக்கும்படி செய்தார். நித்திரை தெளிந்தெழுந்தவன் போலெமனெழுந்து பரமசிவனை, மகாதேவனை - அநித்தியமாய், அசுத்தமாய், அநேகதுக்கசொரூபமாய், ஆச்சரியகரமாயுமுள்ள பிரபஞ்சநிர்மாணத்திற்குக் காரணபூதமாயும், அநாதியாயும், ஞானத்திற் கெட்டதாயுமுள்ள அவித்தையென்று சொல்லப்பட்ட மாயையாகிய நிர்த்தகிக்குச் சூத்திரதாரியனே! விஷ்ணுமுதலான தேவர்களாலசக்கியர்களாகவும், பிரமாவின்வரத்தாற் கருவமடைந்தவர்களாகவும், ஆகாயசாரியுள்ளதிரிபுரத்தில் வசிக்கப்பட்டவர்களாயுமுள்ள அநேககோடியசுரர்களைச் சங்கரித்து ஜெயகீர்த்திமங்களத்தாற் சோபிதமுள்ள மகாத்மியத்தையுடையவனே - சகலதேவர்களாலுமசுரர்களாலுந் தூக்கப்பட்ட மந்தரகிரியென்னு மத்தாற்கலக்குண்ட க்ஷீராப்தியிலுண்டான வூழித்தீக்குச் சமமான ஆலகாலவிஷச்சுவாலையாற் றகிக்கப்பட்ட விஷ்ணு, பிர்மா, இந்திரன்முதலான தேவர்களுக்கபயப் பிரதானங் கொடுக்கப்பட்ட கரகமலத்தில் அவ்விஷத்தைக் கருநெல்லிப்பிரமாணமாக எடுத்துக்கொண்ட கறுத்தகண்டனே. திர

ணத்தையும், வாயுவையுஞ், சருகையுஞ், ஜலத்தையும் பு
சித்துக்கொண்டு தவம்பண்ணப்பட்ட சனகாதிமுனிவர்க
ளுடைய மனத்தையுங் கலக்கும்புஷ்பபாணத்தைத்தரித்தமன்
மதனுடைய வழகுபொருந்திய சரீரத்தை நாசஞ்செய்த
அக்கினிக்கண்ணை நெற்றியிலுடையவனே - அதிகபயங்க
ரமானதும் பணிரெண்டுமணிகளைத் தரித்த கழுத்தையு
டையதும், விந்தபருவதங், கந்தமாதன பருவதமுதலான
பருவதங்களுக்குச் சமானமுமான மகிஷத்தின் மேலரோ
கணித்துத் தெண்டாயுதத்தைக் கையிற்றரித்துச் சித்திரகு
ப்தன், அபமிருத்து, காலமிருத்து, சுரமுதலான சேனைக
ளுடன்வந்த யமனைக்கண்டுபயந்த மிருகண்டுபுத்திரனென
மார்க்கண்டேயருக்குப் பிராணதானஞ்செய்தவனே-யாக
ராஜனே- சகலவேதகர்மா, ஸ்மிருதிகர்மா வினைகளுக்கத்
தியக்ஷனயிருக்கப்பட்டவனே - சக்கிதாநந்தவிக்கிரகனே
அவமதித்ததக்கன்யாகநாசஞ்செய்தவனே- அவன் சிரச்சேத
னே- பிருகுமகரிஷியினுடைய மீசையைக்கொய்தவனே-
பரியாசஞ்செய்தசூரியனுடையபற்களை யுதிர்த்தவனே- சர
ஸ்வதியின் மூக்கையறுத்தவனே- இலக்குமிநாயகனுகிய வி
ஷ்ணுவின் கண்ணுலருச்சிக்கப்பட்ட திருப்பாதனே- பகா
சுரனுடைய கண்ணைகெடுத்தவனே - அந்தகாசுரனுக்கந்
தகனே- விருபாக்ஷனே - பிஞகபாணியே- பர்வதத்தோ
த்போர்வையனே- சிரமாலையுடையவனே - பஞ்சநதீச
னே! யென்று ஸ்தோத்திரஞ்செய்து சுவாமி! எளியேன்
செய்தபிழை பொறுத்தருளவேண்டுமென்றான். பரமபதி
யானவர் காலனே! உன்பிழைகளைந்தும் பொறுத்தோ

தித்தின்னுலகத்தை யடைவாயென்று விடைகொடுத்ததிலி ங்கத்தின்மறைந்தருளினார். அதைக்கேட்டெமன்றன்னுல கமடைந்தான். அதன்பின் வசிட்டமுனிவா மாணுககனு ன சுசரிதனையழைத்துக்கொண்டு தன்னாசிரமததிற்சென் று சிலகாலஞ்செ ற்றபின் நற்குலத்திற் பிறந்ததோர்பெண் ணைசுசரிதனுக்கு விவாகஞ்செயவித்து, கௌதமிதீரதேச த்திறகனுப்பினார். சுசரிதன்றன் தேசத்திற்குப் போய் ம னையாளு டன்கூடிவாழ்ந்து, ஓர்புத்திரனைப்பெற் றவனுக் குபாயனத்தோடு வேதாப்பியாசமுஞ் செய்வித்து, அவனை கிரகததிலவைததுத தான் பஞ்சநதமடைந்து, சிலகாலமங் குவதிந்து பின் விதேகமுததியடைந்தான்.

ச—வது அததியாயம்

முற்றிற்று.

---

## ரு-வது இலக்குமிதேவிவரலாறு ரைத்தஅத்தியாயம்.

அனவததிபாதேவியானவள் தன்னுபகனுகியநா தசன்மாவை நமஸ்கரித்தொழுதுநின்று, சுவாமி! பஞ்சநத க்ஷேத்திரத்தில் சிவபெருமானுக்குத்தரபாகததிலில க்குமிசந்நிதானமிருப்பதற்குக் காரணஞ் சொல்லியருள வேண்டுமென்றுவினவ, நாதசன்மா பெண்ணே! இந்த க்ஷேத்திரததில், முததியடையவேண்டுமென்றனேகரிஷி

களுஞ்சந்நியாசிகளுங்கிரகஸ்தர்களும் பிரமசாரிகளுந்தவஞ் செய்துகொண்டனேகவருஷகாலமாகவிருந்தார்கள். அக்காலத்திற்பஞ்சகாலமுண்டாயிற்று. கௌதமரிஷியானவர் சகலஜனங்களுமன்ன தாரித்திரமடையாதிருக்கும்பொருட்டுப், பரமசிவனைச்சரணமடைந்து, ஆனந்தசொரூபனே-சுயம்பிரகாசனே- சித்ரூபனே - அவித்தியாதீதனே- மூன்றவஸ்தைக்கும் சாக்ஷியானவனே - காயத்திரிபிரம்மவயிவைகளின்றூர்ப்பரியபூதராயுள்ளபஞ்சநதீசனேயென்றுதுதிபண்ணினார். பரமசிவன் றன்னாலயத்திற்குத்தரபாகத்திலிலக்குமியை ஸ்தாபித்து, அந்த இலக்குமிதேவியைப் பார்த்துப் பஞ்சநதத்தில் வசிப்பவர்களுக்கன்னதனபானாதிவஸ்துக்களைக் குறைவின்றிக்கொடுத்து வரவேண்டுமென்றுசொல்லிக்கௌதமரிஷிக்குப் பிரத்தியக்ஷமாகிக்கௌதமரே! எமதாலயத்திற்குத்தரபாகத்திலுள்ள விலக்குமிதேவியை, நீராராதனைசெய்வதோடு மற்றரிஷிகளையுமாராதனைசெய்யும்படி, செய்யுமென்று சொல்லி மகாலிங்கத்தின் மறைந்தருளினார். அதன்பின கௌதமரிஷியானவர் ஷோடசோபசாரங்களாலும் வஸ்திராபரணங்கள் புஷ்ப தூபதீபநைவேத்தியத்துடன் நாடோறும் பூசித்துவந்தார். பிறகு அமராவதிப்பட்டணத்திலரசாக்ஷிசெய்கின்றவிந்திரன் அசுரருபத்திரவத்தைச் சகிக்கமுடியாமற்றன்குலகுருவாகியவியாழபகவானைநோக்கிச்சுவாமி! அசுரர்வாதையெப்பொழுதுநீங்குமெனவதற்குவியாழபகவான் சுரர்குலதீபனே நீ! பஞ்சநதக்ஷேத்திரமடைந்து, காவேரிநதியில் ஸ்நாநஞ்செய்து, பரமசிவனைத்தெரிசித்து, அவருக்குத்தர

பாகத்திலிருக்கும் கௌதமரிஷியாலாராதிக்கப்பட்டவில
க்குமிதேவியை, ப்பத்திசிரத்தையாகப் பூசித்தாலசுரர்வா
தையினின்றும் நீங்குவாயிதுசத்தியமென்றுசொல்ல, வி
ந்திரனுடனே பஞ்சநதக்ஷேத்திரமடைந்து,காவேரியில்ஸ்
நானஞ்செய்து, செம்பொற்சோதியாரைத்தெரிசித்து, த
துதிசெய்து,சுவாமி! என்சத்துருக்களை நாசஞ்செய்யவே
ண்டுமென்றுவேண்டிக்கொண்டான் அப்பொழுதுபரம
சிவன்பிரசன்னமாகி, இந்திரனே! யெமதனுக்கிரகத்தாலசு
ர்களுசமடைவார்கள். இந்தவாலயத்திலெமதுசொரூபமாக
வுள்ள விலக்குமிதேவியை யாராதனைசெய். செய்யாவிடி
லோஅபஜயமுஞ் செல்வநாசமுமுண்டாகும். உலகத்திற்
க்ஷத்திரியமில்லாவரசர்கள், யுத்தகாலத்தில்விஜயமடையமா
ட்டார்களாதலையாற்க்ஷத்திரிய மவசியம்வேண்டியது. தை
ரியமில்லாத நீ ஐசுவரியவிச்சையைமாத்திர முடையவனு
கையால இலக்குமிதேவியைப்பூசைசெய்வாய் பராக்கிரம
த்தைவிரும்பினவன்விஷ்ணுவையுஞ் சுத்தஞானத்தைவி
ரும்பினவன்பரமசிவனையும், ரோகமில்லாதிருக்கவிரும்பி
னவன்சூரியனையும், அழகைவிரும்பினவன்மன்மதனையும
பூசைசெய்யவேண்டியது தர்மசாஸ்திரவிதிரணகாற
செல்வத்திலிச்சையுடையநீசீதேவியைப் பூசைசெய்யவே
ண்டியது. அன்றியுமிவ்விடத்தில சத்தமாதர்களைப் பிரதிஷ்
டைசெய்துபூசைசெய்வாய். உன்னாற்பிரதிஷ்டைசெய்யப்
பட்டசத்தமாதர்களைப்பூசிப்பவர்கள்நமக்கிடையவர்கள்வி
யாதியாலுந்தரித்திரத்தாலுஞ் சத்துருக்களாலும் தீயமிருகங்
களாலுமரசர்களாலும் திருடர்களாலும் வாதையடையமா
ட்டார்களென்று சொல்லிப,பரமசிவன் மகாலிங்கத்தின்று

றைந்தருளினார். அதன்பின்பு, இந்திரனிலக்குமி தேவியால யதிற்குவந்து,ஸ்ரீதேவிசந்நிதியிற்பூஜைசககாக விசுவகர்மாவி னாற்கூபமொன்றுவெட்டு வித்து,அதிலுண்டாகிய ஜலத்தி ற்றேவாமிருததைக் கலந்துநிரப்பி, அந்த வமுதஜலத் தாலபிஷேகஞ்செய்து,வஸ்திரம்- ஆபரணம்-சந்தனம் -கு ங்குமம-புஷ்பம்- இவைகளாலலங்கரித்து, மதுரமுள்ள அ னனங்கள் தாமபூலம்முதலியநிவேதநங்களுஞ் செய்துடக திடமாறசகலலோகஜனனீ - க்ஷீராபதிபுத்திரி- விஷ்ணுமாா பிடங்கொண்டவளுக்ஷி-சமஸ்தஜனவித்திய சொரூபி ணி-அடியவர்களிசசைப்படியாவற்றையுமளிப்பவளே! நீஎ ன்பொக்கிஷத்தை விட்டொருகாலும் நீங்காதிருக்கவேண் டுமென்றுதுதிக்க இலக்குமிதேவி பிரசன்னமாகிஇந்திரனே !என்னுடையபிரசாதத்தால் நீவிரும்பிய யாவையுமடைவா யென்றுசொல்லிமறைந்தாள். பின்னர் இந்திரன்விஸ்வகர் மாவால் திருக்குறிமூலையிற் சத்தமாதர்களைப் பிரதிஷ்டை செயவித்து,பிரகஸபதிபகவானாலாவாகனமும் சுபமுகூர்த்த த்திறபூசைநிவேததிபாதிகளுஞ் செய்துதுதித்தவுடன் சதத மாதாகள் பிரசன்னமாகி, இந்திரனே! யுத்தததிலுனக்குவெ ற்றிதருகின்றோம். நீ இபபொழுதே தேவலோகஞ்சென று அசுரர்களையுததத் திற்கழை யென்று சொல்லிமறைந்தரு ளினார்கள்.அதன்பின்னிந்திரன்தேவலோகமடைந்து,முப்ப த்துமுக்கோடிதேவர்களை சககாயமாக வைத்துக்கொண்டு அசுரர்களையுத்தத்திற்கழைத்தான்.அசுரர்கள்மிகுந்தகோப ங்கொண்டு, பட்டணததிலொருவருமின்றி யுத்தத்திற்குவ ந்தார்கள். அப்பொழுது பரமசிவபிரசாதத்தாலு மிலக்கு

ஸ்ரீதேவியனுக்கிரகத்தாலுஞ் சத்தமாதர்கள் சகாயத்தாலும் அசுரர்களைவென்று, தன்பட்டணத்திலரசாக்ஷி செய்திருந்தான். ஆதலாலிலக்குமிதேவியைப்பூசித்து; அந்தவாலயத்திலிருக்கப்பட்டதீர்த்தத்தில்ஸ்நானஞ்செய்பவர்கள்வறுமையின்றிப்புத்திரனையடைவார்கள். சத்தமாதர்களைத்தெரிசித்தவர்கள் சத்துருபயமுதலானகொடிய துன்பமடையமாட்டார்கள்.

௫-வது அத்தியாயம்.
முற்றிற்று.

---

## ௬ - வது கௌதமர்வரமடைந்த அத்தியாயம்.

பூர்வத்திற்கௌதமரிஷியானவர் பஞ்சநதஸ்தலத்திற்றிரிகாலஸ்நானஞ்செய்து, சிவார்ச்சனைதினமொன்றுக்குப் பதினாயிரம்பஞ்சாக்ஷர ஜபம்ருத்திரஜபஞ்சிவாலயப்பிரதெக்ஷிணஞ்சோமவாரவிரதம் கிருத்திகைசசோமவாரத்தில்விசேஷமகாபிஷேகத்துடன் நிவேத்தியந்தீபமாலைமுதலான பணிவிடைகள் செய்து, ஆகாரமின்றி வாயுபக்ஷணஞ்செய்துகொண்டு, இந்திரியநிக்கிரகத்துடன் பஞ்சாக்கினிமத்தியிலொருவருஷகாலந் தவஞ்செய்துவந்தார். இவ்வண்ணமிகழுநாளிற் பஞ்சநதீஸ்வரர் விபூதிருத்திராக்ஷதாரியாய்நாகாபரணம்-சிரமாலை- இவைகளைத்தரித்து. விக்னேசுவரர்-குமரர். அம்பாள்சமேதராய் ரிஷபாரூடராய்நந்திமுதலான கணங்கள் புடைசூழ்ந்து, தோத்திரஞ்

செய்யக்காட்சிதந்தார். கௌதமர் பரமசிவனைத் தெரிசித்துச் சுயம்பிரகாசனும், தன்னைப்பார்க்கிலும் வேறொன்றில்லாதவனும், பிரசத்திசடசத்திக்குக் காரணமானவனும், அத்துவித[illegible]பனும், தன்சத்துஜெகமாயும் ஜெகத்துசத்து தாருமுள்ளவனும், சூரியன், சந்திரன் - அக்கினி யிம்மூவர்களையுந்தனகாந்தியால் விளங்கப்பண்ணுகிறவனும். சர்வசாக்ஷியாயுள்ளவனும் ஆனந்தசொரூபனுமான வுன்னைப்பிரத்தியக்ஷமாகப் பார்த்தேன். அடியேனை ரட்சித்தருளவேணுமென்று நமஸ்கரித்து ஸ்தோத்திரஞ்செய்தார். அப்பொழுது பரமபதியானவர் கௌதமரே! உம்முடைய தவசாலும ஸ்தோத்திரத்தாலும் ஆனந்தமடைந்தோம். உமக்குவேண [illegible] ளைப்பெற்றுக்கொள்ளலாமென்றார். கௌதமர [illegible] முள்ளவர்களு மாச்சரியமில்லாதவர்களுமான யோகிகள[illegible]ங் காண்பதற்கரிய தேவரீரைக்கண்டவெனக்குவேறென்னவிச்சையிருக்கின்றது என்று சொல்லப்பரமசிவன்மிகுந்தவானந்தமடைந்து, மனவிஷ்டத்தைச் சொல்லுமென்றார். அதைக்கேட்ட கௌதமர் சுவாமி! எனக்குத்தேவரீருடைய திருவடியைவிட்டு நீங்காத பத்தியுஞ் சமஸ்தவிஷயங்களில் வைராக்கியமும் உண்டாகவும், என்னாச்சிரமமாகிய அன்னுவதார ஸ்தலத்தில் அதிதிபூஜை பண்ணக்குறைவின்றி வயல்களில் விளைகின்ற நெல்லெல்லாம் அரிசியாக விளையவும், மலமூத்திராதி விசர்க்கஞ்செய்ய இந்தப் பஞ்சநத்தத்திலுள்ள மண்ணெல்லாம் சிவலிங்க சொரூபமாகத் தோன்றுவதாலும், காவேரியிற்செய்தால் மகாபாதகமென்று சாஸ்திரங்களெல்லா முறையிடுவதாலும் அச்சமா யிருப்பதனாற் சோற்றுத்துறையில் யான் வசித்துத் தினமொருதரம்வர

து, உங்கள்தெரிசனஞ் செய்துகொண்டுபோகவும் வரந்த ரவேண்டுமென்றார். பரமசிவனீர் கேட்டவாறே தந்தோ மென்றுசொல்லிமறைந்தருளினார். கௌதமர்காவேரிஸ்நா னந்தீர்த்தாடுசிவதெரிசனமுஞ்செய்து, திருச்சோற்றுத்துறை யையடைந்து, அவ்விடத்தில்விளைகின்ற நெல்லெல்லாமரிசி யாகவிளையப் பஞ்சகாலத்தில்வருந்திய நான்குவருணத்தா ருக்குங்குறைவின்றியன்னதானஞ் செய்தலோடு அவரவ ர்கள்சுபாசுபங்கட்குஞ் சொர்னதானமுஞ் செய்துவந்தார். இவ்வண்ணம் பனிரெண்டு வருஷகாலம் குறை வின் றிகௌதமர்நடத்திய அன்னதானத்திற்புசித்துப்பஞ்சகா லநீங்கித்தத்தங்கள்தங்களூருக்குத் திரும்பினபிராமணர்களிற் சிலஅயோக்கியர்கள் கௌதமரடைந்தவாத்திப்பெருமை கொண்டு, கௌதமர் கோவதை செய்தாரென்று பொய்ச் சங்கதைசொன்னார்கள்; அதைக்கேட்ட கௌதமர் அதிகோப ங்கொண்டுபொய்ச்சங்கதைசொல்லியநீங்கள் வேதங்கெட்டுச் சங்குசக்கரங்களாற்சுடுபட்டுச்சாதிகெட்டுச்சூத்திரசம்பிர தாயத்தையடைந்து, வடகலை தென்கலையென்று மயக்குற் றுமகாபாபிகளாகக் கடவீர்களென்று சபித்தார். அச்சாபமு மடைந்தவர்க ளின்றுமிவ்வுலகத்தில் ஐயங்காரென்று திரி கின்றார்கள்.

௬-வது அத்தியாயம்
முற்றிற்று.

---

## ௭-வது சதாநந்தர்தவசித்தியடைந்தவத்தியாயம்.

பூர்வத்தில் சதாநந்த முனிவர் தன்றந்தைபாதிய

கௌதமரிஷியை நோக்கி ஐயர்! உலகத்திலனேக க்ஷேத்திரங்களிருக்கின்றனவே அவைகளிலெந்த க்ஷேத்திரத்திற்காலதாமதமின்றிப் புண்ணியவிருத்தியோடு பஞ்சாக்ஷரசித்தி கிடைக்குமதனை யடியேனுக்குத் தெரிவிக்கவேண்டுமென்று கேட்கத், தவசிரேஷ்டராகிய கௌதமர் உத்தமமாவுள்ள க்ஷேத்திரஞ் ஜப்பியேசுவரம்; எல்லாநதிகளிலுமுத்தமநதிகாவேரி; அந்த ஸ்தலத்தில்வாசமாத்திரத்தான்மறுஜனனமில்லாது முத்திகிடைக்கின்றது. பரமசிவன் மரணகாலத்தில்வலதுசெவியிற் ருரகமந்திரமாகியபிரணவத்துடன்பஞ்சாக்ஷரமந்திரத்தையும்உபதேசிக்கின்றார். அந்தஸ்தலத்திற்றனுர்மாதம்ஆருத்திராநக்ஷத்திரத்திலுமற்றமாசப்பருவங்களிலுஞ் சங்கராந்திமுதலிய புண்ணியகாலங்களிலும் ஜப்பியேசுவரராகிய பரமசிவனைத்தெரிசித்தால் கைலாயமடைவது நிச்சயம். ஆகையாலநீயந்த ஸ்தலத்தையடைந்துதவசுசெய்வாயென்றுத்திரவுதந்தார். சதாநந்தர் திருவையாற்றையடைந்து, காவேரிஸ்நானஞ்செய்து நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு பரமசிவதெரிசனஞ்செய்து, அநுஷ்டானுதி காலங்களுஞ் சிவதெரிசன காலங்களுநீங்கலாக மற்றக்காலத்தில் காவேரியின்வடகரையில் இடதுகாலைக் கீழேயூன்றிக் கைகளையாகாயத்திற்றூக்கி, நாவிற்பஞ் சாக்ஷரமந்திரத்தையுச்சரித்து ஒருவருஷகாலம்வரையிலுந்தவசுசெய்தார். அக்காலையிற் பரமசிவன்இந்திரனைப்போல வேடம்பூண்டு வெள்ளையானைமேலாரோகணித்துச் சதாநந்தரிஷியினருகில்வந்தார். சதாநந்தரெதிர்கொண்டு வணங்கி ஆசனம், அர்க்கியபாத்தியம், ஆசமநீயமுதலானவுபசாரங்கள்செய்தார்-இந்திரவே

டங்கொண்ட பரமசிவன் கௌதமநந்தநரோ! நீர் இச்சித்தவ
ரங்களைக்கேளுந்தருகின்றோமென்றார் சதாநந்தர்நகைத்து
இந்திரனே! தேவோத்தமரானமகாதேவனிடத்திற்டத்தியா
ல்முத்தியடைய விரும்பியநான் அநித்தியமாகிய வுன்பதவி
யைவிரும்பவில்லை; இஃதன்றிப்பிரமவிஷ்ணுவையுமொரு
பொருளாகவெண்ணவில்லை, யெக்காலத்திலுமெனதுள்ள
ங்குடிகொண்டபரமசிவனிழிந்த வெப்பிறவிதரினுமதில்வி
ருப்பமுடையனென்றார். அதைக்கேட்டிந்திரவேடங்கொ
ண்டபரமசிவனுள்ளத்திலானந்தமடைந்து வெளியிற்கோ
பங்கொண்டவர்போற்சதாநந்தரே! திரிலோகாதிபதியாக
வுஞ்சகலதேவர்களாலும்வணங்கப்பட்டவனாகவுமுள்ளநா
ன் உனக்குஎன்னுலகத்திலமிர்தபானம், பஞ்சதருநிழலில்வீ
ற்றிருத்தல், கிருதாசி, மேனகை, ரம்பை, ஊர்வசி, திலோ
த்தமைமுதலான தேவமாதர்களாற்போகங்கிடைத்தல்முத
லியவைகளைக் கொடுக்கவந்திருக்க; அதைவிட்டுப் பூதபி
ரேத பிசாசகணங்கள்சூழமயானத்தில்வசிப்பவனும், திகம
பரனும், மண்டையோட்டிலிரந்துண்பவனும்; உன்மத்த
னும், நிர்க்குணனுமானபரமசிவனைமூடனாகியநீ தியானிக்
கின்றாய். அவனைவிட்டினிமேலாகினு மென்னைத்தியானி
யென்றுசொன்ன செவிசுடும்வார்த்தைகளைக்கேட்டு, அதி
கோபத்துடன் தேவர்களிலதமனான விந்திரனே! சிவபத்தசி
ரேஷ்டனான அளகாபுரிக்கிறைவனுக்குஎண்ணிறந்தசெல்
வத்தைக்கொடுத்தவரும், க்ஷீராப்தியில்மந்திரபருவதத்தை
மத்தாகநாட்டியமிர்தமதனம் பண்ணுங் காலத்திலதிலிரு
ந்துண்டாகியஆலகாலவிஷத்தையமிர்தம்போலுண்டெங்க

ளையிர க்ஷித்தநீலக்ண்டரும்,தக்ஷப்பிரஜாபதியாகஞ்செய்த காலத்தில் வீரபத்திரரால் அதைநாசஞ்செய்தவரும், விந்தபருவதத்தைப் பூமியிலழுத்தி, இல்வலன் வாதாபியைக்கொன்று சமுத்திரத்தைக் குடங்கையிலடக்கி யாசமனம்பண்ணிய கும்பமுனிக்கு அநுக்கிரகம் பண்ணினவரும், அற்பாயுளையடைந்து எமனாற் பீடிக்கப்பட்ட மார்க்கண்டேயருக்குச் சிரஞ்சீவிகொடுத்துக் காலனைச் சம்மாரஞ்செயதவரும், திரிபுராதிகளால் வருந்திய மூவுலகத்தையுங்காத்துத் திரிபுர ஸம்மாரஞ் செய்தவரும், சிவாவென்றொருதர நாவிலுச்சரிப்பவர்களுக்குச் சகல்சம்பத்தையுமளிப்பவருமான பரமகருணாநிதி யுன்னாற்கேவலமென்றுநிந்திக்கத்தக்கவரோ? அப்பரமசிவன்நிர்க்குணனென்றும்,நிர்த்தேகியென்றும், நாமரூபமற்றவனென்றும், மற்றவிஷ்ணுவாதிதேவர்கள் சகுணர்களென்றும், உன்வார்த்தையாலறிந்தேன். அசுரர்களினின்றுமுன்னை ரக்ஷித்துக்கொள்ளச்சத்தியில்லாத நீயெனக்கென்னவர மளிக்கப்போகிறாய். நீ யிங்குவந்தது அசுரர்களறிந்தாலுன் மனையாளைக்கவர்ந்துகொண்டுபோய்விடுவார்களாதலால்இந்தக்ஷணமேயிவ்விடம்விட்டுன்னுலகஞ் சேரென்றுசொல்லி யந்தோ!சிவநிந்தைசெய்யப்பட்டவர்கள் நாவை யறுப்பவர்களுக்கிருபத்தொருதலைமுறை சிவலோகமும்- சிவநிந்தைசெய்யப்பட்டவிடத்திலிருப் பவர்களுக்கு நரகமுங்காணியாகுமேயென்று இருகரத்தாலும் செவிகளைப்பொத்திய வ்விடம் விட்டகன்றார். இந்திரவேடம்பூண்டுவந்த கருணாநிதியாகிய பரமசிவன் - இந்திரரூபத்தைவிடுத்து,மான், மழு,தமரு

கமிலைகளைக்யககளிலுஞ்,சந்திரன்,கங்கை, உமாமத்தைமல
ர்களிவைகளைச்சிரசிலும், நாகாபரணத்தை மெய்யிலுந்த
ரித்து,உமாசமேதராய்ரிஷபவாகனத்தின்மேல்சதாநந்தர்
முன்புதோன்றினர். சதாநந்தர்-மிகுந்தவாநந்தத்துடன்சி
ரசிற்கைகூப்பிநின்றுதேசகாலந் திக்கு பேதத்தாற்பேத
த்தையடையாதபரமபதியே!அஞ்ஞாநிகளாலறியப்படா
தவரே, சர்வசாட்சியென்றுஞ், சுத்தனென்று,மாயையா
ற்கட்டுப்பட்டவனைப்போலநடிக்கின்றவனேயென்றும்,
தன்வித்தையால் அவித்தையைநசிக்கச்செய்கின்றவனே
யென்றும்,சின்மயமாகியதன்னிடத்தின்மாயைகற்பிதமெ
ன்றும், அவித்தைக்காரியமாகியபிரபஞ்சத்தைவித்தையால்
நாசஞ்செய்ய ப்பட்டவனே யென்றும்,சகலத்திற்குமிருப்
பான தனக்குநாசமில்லாதவனேயென்றும்,வேதவேதாந்
தங்களால் முறையிடப்பட்டவனே!சுவாமிபரமசிவா!தே
வரீர்கிருபாகடாக்ஷத்தாற் சம்சாரமாகியபெருங்கடலினி
ன்றுமடியேனைக் கரையேற்றியென்னெனவினைதனைஇ
னிமுளைக்காதுசெய்தருளவேண்டு மென்றடியற்ற மரம்
போற் பூமியில்விழுந்தார்,விழுந்தவரை பரமபதியானவர்
இருகரங்களாலும் தூக்கிச்சதாநந்தரே!உம்முடையதவசா
லுந்தோத்திரத்தாலுமானந்த மடைந்தோம். வேண்டியவ
ரங்களைத் தருவோமென்றார். சதாநந்தர்சுவாமி! எப்போ
துந்தேவரீர் பாதபங்கயத்திலென்சிந்தை இருத்தலும்,தேவ
ரீர் சொரூபத்தியானத் தன்றிவேறோர் தியானமில்லாமை
யும்தங்கள் நாமசங்கீர்த்தனத்தில்விசுவாசமும், தங்கள்கதா
சிரவணத்தி லென்னறிவுபிறழா திருத்தலும், தங்கள் மூர்த்
திபேதத்தைத் தெரிசிப்பதிலென்கண்ணிருத் தலுந்தூர்ச்ச

ளுள்சேர்க் கையின்றியிருத்தலும் உள்ளிந்திரியவெளியிந் திரிய நிக் கிரகம்,வைராக் கியம்நித்தியகர்மானுஷ்டானம் வேதாத்யயனம் காமக் குரோதாதிநீங்கல்முதலானசற்கு ணங்களை யுடையபெரியோரிடத்திற் சேர்க் கையுந் தந்த ருளவேண்டுமென்று பிரார்த்திக்கப்பரமபதியானவர் சதா நந்தரே! நீர்வேண்டியவாறே யாந்தந்தோமென்றுசொ ல்லி ப்பிரமகத்தி முதலானகொடிய்பாவங்களை யெல்லா நாசஞ்செய்யப்பட்ட இந்தப்பஞ்சநதக்ஷேத்திரத்தில் நீரெ ப்பொழுதும் வசியும் இந்தஸ்தலத்திலிருக்கப் பட்டவரு டையயோகக்ஷேமத்தை யாம்வகிக்கின்ரும். புண்ணிய காலங்களில்காவேரிஸ்நானஞ்செய்து எம்மைத்தரிசிக்கின் றவர்களுக்கு சிவலோகங்கிடைப்பது நிச்சயம் இந்தஸ்தல த்திலுற்பவித்த சகலஜீராசிகளுமெம்முடையசொரூபமே யன்றி வேறல்ல மரணகாலத்திற்றாரகமந்திரமாகிய பிர ணவத்துடன் பஞ்சாக்ஷரமந்திரத்தை வலதுசெவியிலுப தேசிக்கின்ரும்.

இந்தஸ்தலத்திற் சிவராத்திரி புண்யகாலத் திலியாரா யினுமு பவாசங் கண் விழிப்புசிவாலயப்பிரதெக்ஷணம் பஞ்சாக்ஷரஜெபத்துடன் ருத்திரஜெபம்முதலியவைகளை ச்செய்துஇரவைப்போக்கியருணோதயத்திற்காவேரியில்ஸ் நாநஞ்செய்துஅநுஷ்டானமுதலியநித்தியகருமத்தைமுடித் தெம்மைதெரிசித்துச்சிவராத் திரிவிருதாங்கமாகப்பிராம ணபோசநமும்சொர்னதானமுஞ்செய்பவர்களுக்குமாதா வின்கெர்ப்பவாச ங்கிடையாது. ஜீவர்கள்கடைத்தேறும் பொருட் டெமதாராதனைக் குவேண்டியசாமக் கிரியைக

னையளித் தாற்சிவலோகங்காணியாகும். இதற்குச்சான்று கவோர்கதை சொல்கின்றோம். பூர்வத்தில் மகாபாதகரு கக் காஞ்சிதேயத்திற்பிறந்து அநேகவேசைமாதர்களுக்கு நாயகனுயிருந்ததூர்ப போதனென்னுமோர்பிராமணனி ருந்தான். அவனந்தத் தேயத்திலுள்ள பிராமணரைப்பொய வழக் குப்பொய்ச்சாக்ஷிகளால வருத்தப்படுத தியவர்கள் திரவியத்தைக் ;கிரகித்து, அதைவேசியருக்குபயோகப்படுத திக கொண்டுவந்தான். அச்சங்கதியை யவ்வூரிலுள்ளஅரச னறிந்து, அத்தூர்ப் போதனைதன்றேயத் தைவிட்டுரீக்கி னான். அதன்பின் அத்தூர்ப்போதன் அனேகதேசங்களிற்சஞ் சரிதது, அங்கங்குதிருடி யவ்வூரிலுள்ளவர்களா லவமான மடைந்து பின்திருவையாற்றை யடைந்தான். அவனடை ந்தவன்று சிவராத்திரியாகையாற் பகற்கால முழுதும்போ சனமில்லாமல் இரவுபோசன வபேக்ஷையாற் சிவாலய த்திற்றிரிந்துகொண்டிருக் கும்போது சிவாம்சமடைந்த தூர்வாசர் அவனைக்கண்டு ஞானதிருஷ்டியால் மகாபா தகனென்றறிந்து யருகழைதது.பிராமணாதமனே! நீஅ னேகபாதகங்கள்செய்திருக கிறாய உன்னைப் பிடித துக கொண்டுபோவதற்கு எமதூதாகளுன்னருகில் வந்திரு க கிறார்கள். அவர்களைப்பாரென்று அவனகண்ணுக்குத தெ ரியுமபடியனுக்கிரகம்பண்ணினார். அததூர்ட்போதனெம தூதர்களைக் கண்டுபயந்து, சுவாமி யடியேனைரக்ஷித த ருளவேண்டுமென்று தூர்வாசர்பாதத்தில்வீழ்ந்தான். தூ ர்வாசமகாரிஷியானவா பயப்படாதேயென்று சொல்லி யவனைக காவேரியில்மூழ்'குப்படிசெய்து பாபநாசஞ்செ ய்யும் பஞ்சாக்ஷரமந்திரததை யுபதேசித்துத்தன்னருகிலி

ருந்து செபிக்கும்படியிருத்தினார். அவ்வாறேமகரிஷியின ருகிலிருந்து மந்திரஜெபஞ்செய்தான். இரவுநீங்கினவுடன் தூர்வாசர்துர்ப்போதனைப்பார்த்துத்துர்ப்போதனே!யுன க்கு நூறுவயதென்றுகற்பிதமாயிருந்த ஆயுள்பாவத்தால சித்துப்போயிருந்தது. இப்பொழுதுஈஸ்வர தெரிசனத தாலும், பஞ்சாக்ஷரமந்திரமகிமையாலும், காவேரிஸ்நா னபுண்ணியத்தாலு,மென்னை தெரிசித்தபலத்தினாலுமபூர ணாயுளுண்டாயிற்று. இதைக்கண்டயமதூதர்களோடி பபோயவிட்டார்கள். என்னுடன் ஸ்நாத்திற்குவாவென் றவனையழைத்துக,கொண்டுபோய்க காவேரிஸ்நானமுஞ சிவதெரிசனமுஞ்செய்துவைத்துத, தன்னாசிரமஞ்சென று,பாரணைமுடித்துத் தன்னுச்சிட்டான்னத்தை யவனுண ணும்படிசெய்து, உன்மரணபரியந்தம் பஞ்சநதத்திலவதிய க்கடவாயென்றுத்திரவுபண்ணினார். அவ்வாறேதுர்ப்போ தனபஞ்சநதத்தில்வசித்து, மரணமடைந்தான். அவனை நந தியினாற்சிவலோகத்துக்கழைப்பித்து, சசாரூபியமளித்து சசிவகணங்களுக்கதிபதியாக்கி ப்பிருங்கிரிஷிகணநாதரெ ன்னும்பெயர்தந்தனம். ஆகையாற்சதாநந்தரே! நீர் இந்தப பஞ்சநதத்திற்றனே, வசியுமென்று மகாலிங்கத்திலமறை ந்தருளினார். அதன்பின்சதாநந்தர் ஜீவன்முத்தநிலையைய டைந்து, தன்னாத்தாரத்மாவில மாயாகற்பிதமானஜகமனை த்தும்பொய்யெனறுகண்டு, பிரமஞானியானார்.

எ வ து அ த தி ய ா ய ம்.

ற ற றி ற் று.

# அ - வது ஜப்பியேசுவரமென்று பெயர் வந்ததற்கு காரணமுரைத்தவத்தியாயம்.

அனவத்தியாதேவியானவள் தன்காதலனாகிய நாத சன்மாவைவணங்கிநின்று, சுவாமிபஞ்சநதத்திற்குஜெப்பி யேச்சுரமெனறுபெயர்வந்தகாரணஞ் சொல்லியருளவே ண்டுமென்றுகேட்க நாதசன்மா பெண்ணே! பூர்வத்திலி மோர்க்கிரிபருவதச் சாரலிற்றவஞ்செய்த கோரதபசிசிவ த்தியானத்துடன், தினமொன்றுக்குப்பதினாயிரம் பஞ்சா க்ஷரமந்திரஞ்செபித்து, மந்திரசித்தியாகாமல்இமயமலைச் சாரலைவிட்டு,ச்சிவக்ஷேத்திரங்களையடைந்து, ஒவ்வொரு க்ஷேத்திரத்திலும் நூறு நூறுவருஷமிருந்து,தவஞ்செய்து மந்திரசித்தியாகாமல் மிகுந்ததுக்கத்துடன்மந்தரபருவதஞ் சென்று, அவ்விடத்தினூறுவருஷமிருந்து, ஜெபஞ்செய்து ஞ்சித்தியாகாமல் அதிசோகத்துடன்பரமசிவனை நோக்கித் துக்கமடையுங்காலத்திற் கோரதவசியே! காவேரியினுத் திரபாகத்திற் புண்ணியக்ஷேத்திரமாயும், பாபநாசமாயு ஞ் சித்திக்ஷேத்திரமாயுமுள்ள திருவையாற்றையடைந், துஅந்தக்ஷேத்திரத்திலிருக்கின்ற வாலயத்தில்மூலஸ்தான த்திற்குமேற்கில் ஆதிவிநாயகருக்குஞ் சத்தமாதர்களுக்கும த்தியபாகத்திலிருந்து, தவஞ்செய்தால்மந்திரசித்தியாகு மெ ன்று ஆகாயத்திலோரசரீரியுண்டாயிற்று. அந்தவசரீரிக் கோர்நமஸ்காரஞ்செய்து,மந்தரபருவதத்தைவிட்டுத் திரு வையாற்றையடைந்து,காவேரிஸ்நானஞ்செய்து,ஆலயத்தி னுள்வந்து, சிவதெரிசனஞ்செய்து, கௌதமர்முதலானம காரிஷிகளையுந்தெரிசித்து, அங்கெழுந்தருளிய தூர்வாசம

கரிஷியைக்கண்டு, நமஸ்கரித்தெழுந்துபயபக்தி விசுவாசத்துடனின்று, ஐயாமகரிஷியே! மறுபிறவியைப்போக்கத்தக்கசிவப்பிரசாத மெவ்விதமுண்டாகு மென்றுகேட்க அதற்குஅத்திரிமகரிஷியினந்தனராகிய, தூர்வாசர்கோரதவசியே!கற்பொடிகளையாகாரஞ் செய்துகொண்டுபரமசிவனாற்சொல்லப்பட்ட இடத்திலிருந்து தவசுசெய்தாற்சீக்கிரத்தில்மந்திரசித்தியடையலாமென்றார். கோரதவசியவ்விடஞ்சென்று, கற்பொடிகளையாகாரஞ்செய்துகொண்டாறுமாதகாலந்தவசுசெய்கையில், பரமசிவன்பிரசன்னமாகிக்கோரதவசியே! உன்னுடைய அரியதவத்தாலானந்தமடைந்தோம். உனக்கிஷ்டமானவரத்தைக்கேட்பாயாகவெனக்கோரதவசிபரமகருணாநிதியே!தேவரீரிடத்தில்பத்தியுந்தேவரீர்பிரசாதமுமடியேனுக்கு வேண்டுமென்றார். பரமபதியானவர் நீவிரும்பியவாறேதந்தனம். எமதம்சமாகியதூர்வாசரிடத்திலெப்பொழுதும் விசுவாசமுள்ளவனாக விருவென்றுசொல்லிமறைந்தருளினார். கோரதவசிஜெபசித்தியடைந்தமையாற்ஜெப்பியேச்சுரமென்று பெயருண்டாயிற்று.

௮-வது அத்தியாயம்
முற்றிற்று.

---

## ௯-வது பஞ்சநதமென்று பெயர்வந்த தற்குக்காரணமுரைத்த அத்தியாயம்.

அனவத்தியாமீதேவி நாதசென்மாவைவணங்கிநின்

று சுவாமி! ஜெப்பியேச்சுரத்துக்குப் பஞ்சநதமென்று பெயர்வந்தகாரணமுரைத்தருளவேண்டுமென்றுகேட்க, நாதசன்மா பெண்ணே! கோரதவசியானவர் கற்பொடிகளையுண்டு,தவஞ்செய்தகாரணத்தாற்சிலாதமுனிவரென்ற பெயரையும்பரமசிவனால் வேண்டியவரத்தையும் பெற்றுத்தூர்வாசமுனிவரிடத்திற்சென்று, தான் பரமபதியாலனுக்கிரகம்பெற்றதைச்சொன்னார். தூர்வாசர்சிலாத முனிவரையாலிங்கனஞ்செய்து, கோரதவசியே!பவித்திரமாயும், பாபநாசமாயுந்துர்ச்சொப்பன தோஷஹரமாயும், அசுவமேதமுதலானயாகங்களா லுண்டாகும்புண்ணியபலத்தையும், நான்குவேதாத்யயனபலத்தையும், கங்கைமுதலாகஅறுபத்தாறுகோடிதீர்த்த ஸ்நானபலத்தையும், கொடுப்பதாயுமுள்ள இந்தக்ஷேத்திரத்தில் வாசஞ்செய்து ஜெப்பியேச்சுரமென்கின்ற நாமசங்கீர்த்தனஞ்செய்தாற்பரமபதியானவர்பாவத்தைப்போக்கி நித்தியானந்தத்தையளிப்பார். ஆதலாலிந்தக்ஷேத்திரத்திற்றுனேவசிப்பாயென்றுசொல்லஅவரைப்பார்த்துக் கோரதவசி சுவாமி!பாபநாசஞ் செய்துநரகத்தைப்போக்கி, முத்தியளிப்பாரென்றீரேபாபமெது?நரகமெவ்வளவினது,அவைகளையடியேனுக்குத்தெரிவித்தருளவேண்டுமென்றார்.தூர்வாசமகரிஷி பிரமகத்தி,சுராபானம்,பிராம்மணத்திரவியங்கவர்தல், மாதுர்கமனம்பண்ணப்பட்டவர்களுடன்சேர்தல், இவைமகாபாதகம்தாயையொத்தமாதர்களுடன்புணர்தல், தன்பெண், உடன்பிறந்தவள்,புத்திரன்மனையாள். இவர்களுடன்புணர்தல், இராஜவம்சத்தாருக்கும் வைசியவம்சத்தாருக்குந் தன்பம்விளைத்

தல்,யாகத்திற்குக்கெடுதிசெய்தல், விழுப்புமாதர்கொப்பயா தரைப்புணர்தல்,ஆத்திரேயகோத்திரத்திற் பிறந்தபிராமண னைக்கொலைசெய்தல்,பிரமவிஷ்ணுருத்திர மூர்த்திவிக்கிரக ங்களையுடைத்தல், இவைகளதிபாதகம்.பிறர்வினை பூமியை யபகரித்தல், சிறியதகப்பன்மனையாள், அம்மான்மனையா ள், இராஜன்மனையாள் மாதாமகர்பாரியை இவர்களைப்பு ணர்தல்,பிறர்மனையாளிடத்தில் அவர்கள்நாயகன் போல வேடம்பூண்டுபுணர்தல், இவைகள்பிராசங்கிகபாவம்.வே தத்தைவிடுதல்மாதாவின்றங்கை,பிதாவின்றங்கை,அத்தைம கள் இவர்களைப்புணர்தல், நெற்றியிற்றிரிபுண்டரமும்சரீர த்தில்விபூதியுத்தூளனமு மில்லாதிருத்தல், அன்னியபுண்ட ரங்களிலாசைப்படுதல், சங்குசக்கரத்தாற்சூடுபடுதல் இ வைகள்சமபாதகம். ரித்விக் அத்தியாபகன்,சோத்திரியப்பிரா மணன்,சினேகன் இவர்கள்மனையாளைப்புணர்தல், தன்ம னையாளுடன்சேராதிருத்தல், தன்மனையாளுக்குப் பாங்கி யர்,சகோத்திரமாதர், பிராயணகன்னிகை, நாலாமாச்சிர மமடைந்தமாதர், தன்னையடைக்கலமடைந்தமாதர், இவ ர்களைப்புணர்தல்,துர்க்கா தி தேவதைகள்விக்கிரகங்களைப் பேர்த்தல், யாவரையுநிந்தித்தல், பாசண்டமதஸ்தருடனே சேர்தல், இவைகள்முக்கியோபபாதகம். கிராமத்திற்றீயிடு தல், அசத்தியஞ்சொல்லுதல், கோட்சொல்லல், குருவுக்கு த்துன்பம்விளைத்தல், வேதத்தைமறத்தல், பரான்னம்புசித் தல், தாய்,தந்தை,தங்கை, மனையாளைத்தள்ளுதல், உண்ண க்கூடாதபதார்த்தங்களையுண்ணல், பிறர்பொருள்கவர்தல் பரதாரகமனஞ்செய்தல், குலகோத்திரவீனனுக்குயாக ஞ்

செயதுவைத்தல், திரவியங்கொடுத்துவேதங்கற்றல், திரவியம்வாங்கிக்கொண்டுவேதம்சொல்லிவைத்தல், வேதத்திற்சொல்லிய கருமங்களை விடுத்தல், யாவராலுநிந்திக்கப்பட்டவனுக்குக் கருமஞ்செய்துவைத்தல், விருக்ஷங்களை வெட்டிவிற்றுச் சீவனஞ்செய்தல், ஆபிசாரயாகஞ்செய்தல், தனக்குமாத்திர மன்னஞ்சமைக்கச்செய்தல், பிரமசரியவாசிரமத்தைவிடுத்தல், பஞ்சமகாவெக்கியத்தைவிடுத்தல், சோமயாகமுதலிய யாகங்களைவிடுத்தல், புத்திரவுற்பத்திசெயயாதிருததல், நாஸ்திக சாஸ்திரங்களைக்கற்றல், கெட்டநடவடிக்கை யிலிருததல், மத்தியபானஞ்செய்யுமாதருடன் சேர்தல், இவைகள் கௌணோபபாதகம். பிராமணர்களுக்கு ரோகமுண்டாகும்படிசெய்தல், கஞ்சா- கள் முதலானவைகளைமுகர்தல், உலகத்தாருக்கு மாறுபடநடத்தல், மிருகத்துடன் புணர்தல், பூமியில் இந்திரியத்தைவிடுதல், ஏகாதசி- இருபருவங்கள்- விதிபாதம்- நாயிற்றுக்கிழமை- சிரார்ததினம் - மாசப்பிறப்பு- இவைகளிற்புணர்தல், இவைகள் சாதிப்பிரம்ச கரபாதகம். கிராமக்கலகஞ்செய்தல், ஆரணியத்தையழித்தல், மிருகங்களைவதைப்படுத்தல், கிராமதிற்றீயிடுதல், பொதுத்திரவியத்தைநாசஞ்செய்தல், இவைகள் சங்கீர்ணகரண பாதகம். சாதியீனர்களிடத்தி ற்றிரவியம்- அன்னம் வாங்குதல், யாவருநிந்திக்கின்ற சீவனஞ்செய்தல், வியாபாரஞ்செய்தல், பொய்சொல்லல், சூத்திரனுக்கு யாகஞ்செய்து வைத்தல் இவைகள் அபாத்திரிகரண பாதகம். பக்ஷிமிருகங்களுக்கு கண்ணி வலை யிடுதல், சூதாடுதல், கள்ளுடன் அன்னங்கலந்துண்ணல் இவைகள் ம

[illegible]பாதகம். சுருதி- ஸ்மிருதி- புராணம்- இதிகாசம் இவைகளிற்சொல்லிய சந்தியாவந்தனத்தைக் குறித்தகாலத்திற்செய்யாமல் அகாலத்திற்செய்தல், ஔபாசனம்- வைசுவதேவம்- பிரமயெக்கியம்- அதிதிபூசை- தேவார்ச்சனை முதலானபஞ்சமகாயெக்கியத்தை விடுதல், சிவ விஷ்ணு நாமசங்கீர்த்தனஞ்செய்யாதிருத்தல், மேற்சொல்லியவைகள் நீங்கலாக மற்றப்பாபங்களைச்செய்தல், இவைகள் பிராமணபாதகம்; தெண்டனைக்குரியவரைவிடுதல், தெண்டனைக்குரியரல்லாதவரைத் தெண்டித்தல், பிராமணக்கிராமத்திலிறைவாங்கல், யுத்தத்திற் புறங்காட்டிப் பயந்தோடல், அரசர்களுக்குரிய விசேஷமகாபாதகம். குறைபடிக்கல்லால்விற்றல், வைசியருக்குரிய பாதகம், மாமசம், கள், விற்றல், பிராமண மாதரைப்புணர்தல, காராம்பசுப் பாலுண்ணல்சூத்திரர்க்குரிய பாதகம், நீசனைச்சேர்தல, நாயகனுடைய பணிவிடைக்காரனை ப்புணர்தல், கொப்பக்கெடுதிசெய்தல், நாயகனுக்குக் கெடுதிவிளைத்தல், மருமகன்- குலகுரு, இவர்களைபுணர்தல், மாமன்மாமியைநிந்தித்தெதிர்த்துப்பேசுதல், கொழுந்தன்மார்களை டலக்ஷியஞ்செய்தல், மாதர்களுக்குரியபாதகம். இப்பாவங்கட்குப் பிராயச்சித்தமாகப் பாநகம், தரணம், கராளம், உக்கிரம், பயோத்தரம், சந்திராகுவம், மகாசந்திராபிதம், பதுமம், பதுமவதி, மாயாவீதம், பீஷணம், விகாராளம், வச்சிரதீச்சநகம், வசீரகேரணம், சுதீர்க்கம், வர்த்துலம், இரும்புவாய்களையுடையனாகங்கள்கொத்தல், கிருமிபோசனம், சத்தபௌமம், அஷ்டபௌமம், ரௌரவம், இந்திரியபானம், [illegible]

[illegible]. நானைந்நிசாகனம். கப்சசங்கம்சவிம்மை. [illegible]

வாய்க்கால், நாய்மாம்சபக்ஷணம், புன்னும், வன்னிச்சு வாலாப்பிரவேசம், கும்பீபாகம், தாமிசுரம், சல்மலீவிருக்ஷம், நெருப்பாறு, அசிபத்திரவனம், இக்கெந்திரம், செக்கு, அமேதத்தியமடு,முதலான நரகங்களில், முதலாவதாகிய மகாபாதகத்துக்கு நூறுகற்பகாலமும், இரண்டாவதாகிய அதிபாதகத்திற்குத் தொண்ணூறுகற்பமும், மூன்றுவதாகிய பிராசங்கிகபாவத்திற்கு எண்பதுகற்பமும், நான்காவதாகிய சமபாதகத்திற்கு எழுபதுகற்பமும், ஐந்தாவதாகிய மூக்கியோபபாதகத்திற்கு அறுபதுகற்பமும், ஆறுவதாகிய கௌணோபபாதகத்திற்கு ஐம்பதுகற்பமும், எழாவதாகிய சாதிப்பிரும்சகரபாதகத்திற்கு நாற்பதுகற்பமும், எட்டாவதாகிய சங்கீர்ணகரணபாதகததிற்கு முப்பதுகற்பமும், ஒன்பதாவதாகிய அபாத்திரீகரணபாதகத்திற்கு இருபதுகற்பமும், பத்தாவதாகிய மலாவகபாதகத்திற்கும் பதினொன்றாவதாகியபிரகீர்ண பாதகத்திற்கும்பத்துக்கற்பமும்கிடந்து, எமதூதர்களால் காச்சியவிரும்புச் சங்கிலிகளாற்கால்கைகளைக்கட்டி, உருண்டையாக்கி அக்கினிமடுவிற்போடப்பட்டும் இருப்புலக்கை-பிண்டிபாலம்-தோமரமுதலான வாயுதங்களால் வாதைப்பட்டும், கொதித்த வெண்ணெய்க் கொப்பரையிற் போடப்பட்டும், உருக்கிய தாம்பரத்தையு மீயத்தையும் வாயில்விட்டுக், கத்திபாற்சதையைக்கழிதது,அக்கினியில்வாட்டிச் சூரணமாக்கிமறுபடியுமுயிருண்டுபண்ணப்பட்டும், புழுத்தமாம்சக்கின்றுதிற்றன்னுண்டும், கரும்பாலையிலுஞ் செக்கிலுமரைபட்டும், உரலிலுலக்கையாலிடிபட்டும், கத்தியால்வெட்டுண்டும்

வெட்டுக்காயத்தில் உப்புச்சலத்தைவார்க்கப்பட்டும், நெருப்புமணலிற் புரட்டப்பட்டும், மலையுச்சியினின்றுங்கீழேதள்ளப்பட்டும், இந்திரியம்-பித்தநீர்- கோழை - மலம் இவைகளைப்போசநஞ் செய்விக்கப்பட்டும், பாவசேஷத்திற்குப் பூமியிற் ஜெனனத்துக் கனுப்பப்படுவார்கள்.

பூமியில்வந்து கொடி-செடி-பக்ஷி-மிருகம்-சண்டாளன்-சங்கரஜாதி-குண்டகோளகன்-சற்சூத்திரன்-வைசியன்-க்ஷத்திரியன்-பின்புஅங்கவீனத்தரித்திரப் பிராமணனாகவும்-பின்னுத்தமப்பிராமணனாகவும்பிறந்து, மோக்ஷத்தை யடைகின்றார்களென்று சென்னார். அதைக்கேட்ட கோரதவசி ஐயாமுனிசிரேஷ்டரே! இந்தப்பாவங்கட்கு வேறு பிராயச்சித்த முண்டோவில்லையோ அதனைச்சொல்லவேண்டுமென. த்தூர்வாசர் சிவக்ஷேத்திரங்களிற்பனிரெண்டு வருஷம்வசித்துப்பிராயச்சித்தஞ் செய்துகொள்ளவேண்டும். இந்தப்பஞ்சநதக்ஷேத்திரத்தில் ஆறுவருஷம்வசித்துப்பிராயச்சித்தஞ்செய்துகொண்டால்மகாபாதகமுதற்சகலபாவமும்நிவர்த்தியாகும். பிராயச்சித்தமாவது, திரிகாலகாவேரிஸ்நாநம்நூற்றெட்டுவீதிப்பிரதக்ஷணத்துடன்சந்நிதியினூற்றெட்டுநமஸ்காரம், பிச்சையேற்றொருவேளையுண்ணல் இராப்பகல் சோம்பனித்திரையின்றித்தினமொன்றுக்குப்பதினாயிரம்பஞ்சாக்ஷரமந்திரஞ்செபித்தலாம். இவைசெய்யச்சத்தியில்லாதவர்கள்தன் மரணபரியந்தம்இந்தக்ஷேத்திரத்தில்வசித்தல்வேண்டுமென்று, சொல்லியருளினார்.

கோரதவசி ஐயாமகாமுனிவரே! புன்னும நரகத்தின் விபரத்தை யின்னமொருதரம் அடியேனுக்கு விரித்துரைக்

கவேண்டுமென, த்துர்வர்சர்அதுகீழுமேலுமுருக்கிய தா
ம்பரச்சுவாலையையுடையது. புத்திரனில்லாதவர்கள் தே
வவருஷத்தி னூறுவருஷமதிலிருந்து வாதையடையவே
ண்டியது. புத்திரனையடைந்தவர்க ளந்தப்புன்னுமத்திற்கு
ப்போவதில்லையென்றார். சிலாதமுனிவர் சுவாமி! தேவரீர
னுக்கிரகத்தால் வேறோர்நரகத்தையு நானடையமாட்டே
ன். புன்னுமநரகத்தை மாத்திரமடையாதிருக்க வனுக்கிர
கஞ்செய்யவேண்டுமென,த் துர்வாசர் சிலாதமுனிவரே!
நீர் புன்னுமநரகத்திற்குப் பயப்படுவீராகில் நற்குலத்திற்பி
றந்தவோர்பெண்ணை விவாகஞ்செய்துகொண்டு, கிரகஸ்
தாச்சிரமத்தையடைந்து தர்மத்தைச்செய்யுமென்றார், சி
லாதமுனிவர் துர்வாசரைநோக்கி சுவாமி! யெனக்குத்தா
ய்தந்தையுறவினர் யாவருந்தேவரீரே- யாதலாற்றாங்களே
யெனக்கு விவாகஞ்செய்து வைக்கவேண்டுமென, த் துர்
வாசருடனேபுறப்பட்டு வசிஷ்டாச்சிரமத்தை யடைந்து
வசிஷ்டமுனிவரே! யுமதுதங்கையை யெமதுமாணுக்கனு
கிய சிலாதமுனிவருக்கு விவாகஞ்செய்துதரல் வேண்டுமெ
ன, அதற்கு வசிஷ்டமுனிவர் சம்மதித்துத்தன் றங்கையாகி
ய சாருலக்ஷணையைக் கன்னிகாதானவிதிப்படி விவாகஞ்
செய்துகொடுக்க,த்துர்வாசர் சிலாதமுனிவரையும் அவர்ம
னையாளையும் இல்லறநடத்தும்படிக்கிரகத்துக்கனுப்பித்தன்
னுச்சிரமஞ்சென்றார்.பின்னர் சிலாதமுனிவர்மனையாளோ
டு இல்லறநடத்துநாளில் அவர்மனையாளாகிய சாருலக்ஷ
ணை யோராண்குழந்தையைப் பெற்றனள், அக்குழந்தைக்
குச்சைலாதியென்றுபெயரிட்டு, மூன்றுவதுவயதிற் சென

ள்ளும், எழுவதுவயதி லுபநயனத்தோடு வேதாத்யயனமுதல் சாஸ்திராப்பியாசமுஞ் செய்துவைத்தார். அச்சைலாதி ஐப்பியேச்சுவரமடைந்து ஓர்காலைப்பூமியிலூன்றி யிருகரங்களையுமாகாயத்திற்றூக்கிச் சூரியனைநோக்கி அத்துவிதரும், சுயம்பிரகாசரும், பரிபூரணசச்சிதாநந்த சொரூபரும், முத்தொழின்முதல்வரும், சாக்கிரசொப்பன சுழுத்தியாகிய மூன்றவஸ்தைக்கும் சாக்ஷியாயுள்ளவருமானபரமசிவனைத் தியானித்த நெஞ்சத்துடனின்று தவஞ்செய்தார். அப்பொழுது பரமசிவன் ரிஷபாரூடராகப் பிரசன்னமாகிச்சிலாதமுநிவர் வரப்புத்திரரேயென்றுவிளித்தார். அதைக்கேட்டுக் கண்களைவிழித்துப்பார்த்து ஸ்தோத்திரத்துடன் நமஸ்கரித்தெழுந்துநிற்க, பரமசிவன் சைலாதியே! நுமக்குவேண்டியவரங்களைக் கேட்பீராகவென்றார். சைலாதி சுவாமி! தேவரீருடைய சந்நிதானத்தைவிட்டெப்போதுநீங்காதிருக்கும் வரந்தரவேண்டுமெனப் பரமசிவன் ஆனந்தமடைந்து சூரியபுஷ்கரணித்தீர்த்தம், கெங்காதீர்த்தம், சந்திரகிரணத்திலுண்டான அமிர்தநதி, கௌரியம்மையின் ஸ்தனத்தினின்றுமுண்டான பாலாறு, நந்திவாயுநுரைத்தீர்த்தமாகிய ஐந்துதீர்த்தங்களா லபிஷேகஞ்செய்வித்துத்தனக்குச்சமானமான சொரூபத்தைக்கொடுத்துக் கணங்களுக்காதிபத்தியஞ்செய்யும்படி நந்திகேசுவரரென்னுநாமமிட்டுத்தன்னையுநந்திகேசுவரரையுமுமையாளவன் வேறுபாடறிவதற்கு முகத்தைவானரரூபமாக அமைத்து இரத்தினவேத்திரங்கொடுத்து, நந்திகேசுவரரோடு அங்கர்க்கான்மாளர், நந்திகேசுவரர் பட்டாபிஷேகத்துக்கு

ஐந்துநதிகளுண்டானமையாற் பஞ்சநதமென்று பெயருண்டாயிற்று. அவ்வைந்து நதிகளும் பின்வரப்பட்ட காவேரிநதியில் மறைந்து விட்டன.

௯ - வது அத்தியாயம்.

முற்றிற்று.

---

## ௰ - வது காவேரிவரலாறுரைத்த அத்தியாயம்.

பூர்வத்தில் அகஸ்தியமுனிவர் தன்மாணுக்கருடன் பரமசிவனைத்தெரிசனஞ்செய்வதற்குத் திருவெண்காட்டிற்சிலகாலம்வசித்திருந்தார். அவர் அங்குவசிப்பதைச் சமுத்திரராஜன்கேள்வியுற்று, அவரிடம்வந்துநமஸ்கரித்தெழுந்து, சுவாமி! தங்களைத்தெரிசித்து மிகுந்த சிலாக்கியமடைந்தேனென, அகஸ்தியமுனிவர் சமுத்திரராஜனைப்பார்த்து, உனக்கு நம்மாலாகவேண்டிய விஷயத்தைச் சொல்வாயென்றார். வருணராஜன் ஐயா முனிசிரேஷ்டரே! உலகத்திலிருக்கின்ற கங்கைமுதலனேக நதிகளுக்கு யான்நாயகனாகவிருந்தும், சிவப்பிரசாதத்தாற் கவேரராஜரிஷிக்குப்புத்திரியாகப்பிறந்து, சையபருவதத்தில் வசிக்கின்ற காவேரியை விவாகஞ்செய்துகொள்ள விச்சையுடையவனாகவிருக்கின்றேன். அது தங்களனுக்கிரகத்தாலன்றிநிறைவேறுமென்றெண்ணி நானிவ்விடம் வந்தேனென்றான். கும்பமுனிவர் உன்னிச்சைப்படிசெய்வோமென்று சொல்லி, கவேரராஜரிஷி ஆச்சிரமம்வந்தார். அவரைக்கவேரராஜரி

ஷிகண்டு, அனேகவுபசாரத்துடன் அதிதிபூஜைசெய்வித்துத்தங்கள்வரவைத் தெரிவித்தருளவேண்டுமென, அகஸ்தியமுனிவர்; தங்கள் பெண்ணைச் சமுத்திர ராஜனுக்கு விவாகஞ்செய்விக்கவந்தேன். அதைமறுக்காமற்செய்விக்கவேண்டுமெனக் கவேரராஜரிஷி மனமிசைந்து தன்புத்திரியாகியகாவேரியை யழைத்துக்கொண்டு அகஸ்தியரோடு பஞ்சநதக்ஷேத்திரமடைந்து மூவரும்பஞ்சநதியிலு மூழ்கிச்சிவதெரிசனஞ்செய்துகொண்டு பிரயாணப்பட்டார்கள். அப்பொழுது காவேரி அவ்விடத்தைவிட்டுவரச சம்மதமில்லாதவளாகவிருக்க, அதைத்தெரிந்த அகஸ்தியர் கவேரராஜனிவ்விருவர்களுங் காவேரியைக் கையைப்பிடித் திழுக்கக் காவேரி பரமசிவனைத் தியானித்தழுதாள். அந்தச்சத்தத்தைக்கேட்டுப் பரமகருணாநிதியாகிய சிவபெருமான் பிரசன்னமாக, அச்சிவபெருமானைக் காவேரிதெரிசித்து, சுவாமி! நான்அநாதை, உம்மையே சரணமென்றடைந்தவள் என்னை யிருவருங் கையைப் பிடித்திழுக்கிறார்கள்; நான் போவதற்குமனமில்லாமல் நதிரூபமாகஇவ்விடத்திலிருக்கவிச்சிக்கின்றேனென்றுசொன்னாள். பரமசிவன்காவேரியே! நீஅஞ்சாதேயென்றுசொல்லி, அகஸ்தியரைநோக்கிஅகஸ்தியரே! காவேரியையழைத்துக் கொண்டுபோம் விஷயங்கள்யாவுந்தெரிந்தோம். உம்முடைய கோரிக்கையைநாம் நிறைவேற்றுகின்றோம், பலாத்காரஞ் செய்யவேண்டாமென்றுசொல்லிக் காவேரியே! ஒருவருக்குப்பெண்பிறப்பதால்மிகுந்ததுக்கமாகும், அந்தத்துக்கம்பெண்ணைவிவாகஞ்செய்து கொடுத்தாற்று னிவர்த்தியாகும்; ஆகையால் விவாகஞ்செய்து கொடுக்கவேண்டியது பிதாவின்கடமை.

நீயோ எவ்வனப்பருவத்தை யடைந்திருக்கின்றாய்; பிதுர் குலத்துக்குப் பழிவாராமல்நீயெமது வார்த்தையைக்கேட்க வேண்டியது. சமுத்திரராஜன் ரத்நாகரனாகவுங்கங்கை முதலானநதிகளுக்கு நாயகனாகவுமுள்ளவன், அந்தச்சம்மந் தஞ்சிலாக்கியமுடையது; ஆகையால்உனக்குள்ளநூற்றொ ருகலைகளில்நூறுகலையோடு இந்தக்ஷேத்திரத்திலிருக்கின் றபஞ்சநதியையுங்கலந்து, பஞ்சநதத்தில்வசித்து, ஒருகலை யுடன் அகஸ்தியரோடு திருவெண்காட்டை யடைவாயெ ன்றுசொல்லி அகஸ்திடமுனிவருக்கும் விடைகொடுத்தும றைந்தருளினார். அதன்பின் அகஸ்தியர், கவேரராஜன், இ வ்விருவருடன் காவேரி யேகாம்சத்துடன்திருவெண்காட் டையடைந்தாள்.

இந்தச்சங்கதியைச் சமுத்திரராஜனறிந்து திருவெ ண்காட்டிற்குவந்து, நல்லமுகூர்த்தத்தில் சாஸ்திரவிதிப்ப டிவிவாகஞ்செய்துகொண்டு சுகமாகவாழ்ந்தான். கவேர ராஜரிஷி தன்னிடமாகிய சையபருவதத்திற்குப்போனார். சமுத்திரராஜன் அகஸ்தியமுனிவரைவணங்கிச் சுவாமி! தங் களனுக்கிரகத்தாலென்னிச்சைநிறைவேறியது. இவ்வள வுகாலந்தாமதமானது இன்னதென்றடியேனுக்குத்தெரிவி த்தருளவேண்டுமென, அகஸ்தியர்நடந்த சங்கதியைத்தெ ரிவித்து நூறம்சத்துடன்காவேரி பஞ்சநதத்தில்வசிப்பதை யுஞ்சொன்னார். சமுத்திரராஜன்மறுபடியும்அகஸ்தியரை வணங்கிப்பஞ்சநதத்திற் காவேரியுடன் சேர்ந்திருப்பதற்கு த்தரவுதந்தருளவேண்டுமென அகஸ்தியர் அவ்வண்ணமேவி டைகொடுத்தார். சமுத்திரராஜன்தேவரூபமாகப்பஞ்சந தத்தையடைந்துபரமசிவனுத்திரவால் ஆலயத்திற்குவாயு

மூலையிற்குளருபமாகவிருந்து காவேரியுடன்கூடிவாழ்கின்றான். காவேரியானவள் பஞ்சநதியையுந்தன்னுட்கலந்துநாடம்சத்துடன் திருவையாற்றில் வசிக்கின்றமையால், அந்தஸ்தலத்திற் காவேரிஸ்நானஞ் செய்பவர்கள் மோக்ஷமடைவது சத்தியம்.

௰—வது அத்தியாயம்.

முற்றிற்று.

## ௰௧-வது சிவதாசப்பிராமணன் முத்தியடைந்த அத்தியாயம்.

முன்னொர் காலத்தில்மகாயோகியாகிய சிவதாசனென்னுமோர் பிராமணன்தீர்த்தயாத்திரையுடன் சிவக்ஷேத்திரங்களையுந்தெரிசித்து ச்சித்தர்களாலுந்தேவர்களாலும்ரிஷிகளாலும் பூசிக்கப்பட்டியாவருக் குமாரந்த த்தையளிக்கத்தக்கசிவன்முத்திக்ஷேத்திரமாகிய பஞ்சநதத்தையுடைந்துகாவேரிஸ்நானஞ்செய்து விபூதிருத்திராக்ஷந்தரித்துநித்தியகருமங்களைமுடித்து க்ஷேத்திரசிராத்தஞ்செய்து ஆலயத்தியல்வந்துகணேசர், சுப்பிரமணியர், காலபைரவர், லக்ஷுமிதேவி, சத்தமாதர்கள், பரமசிவன், உமையம்மை முதலானவர்களைத்தெரிசித்துக்கொண்டு, ஐந்து வருஷகாலம்வரையில் ஜெப்பியேச்சுர மண்டபத்திலிருந்துதினமொன்றுக்குப்பதினாயிரம் பஞ்சாக்ஷரமந்திரஞ்செபித்துக்கொண்டிருந்தார். இருந்தவர்காசியில்மரணமடைந்தால் முத்திகிடைக்குமென்று வேதாகமங்கள்சொல்வதையறிந்து, காசிக்குப்போகப்புறப்பட்டு அனேககாடுமலைகளைக்க

டந்து, விந்தமலைச்சாரலிற் போகும்பொழுது யானைகளை
விழுங்கும் ஏரண்டபக்ஷி சிவதாசப்பிராமணனையெடுத்
துவிழுங்குங்காலையில், சிவதாசன் பரமசிவா, சங்கரா, ம
ஹாதேவா! என்னைரக்ஷித்தருளவேண்டுமென்றுதோத்தி
ரம்பண்ணப்பரமசிவன் கிருபைகூர்ந்து தான் இராஜவே
டந்தரித்துத்தன்னுடைய ரிஷபத்தை அசுவமாகவமைத்து
அதன்மேலாரோகணித்துக் கையிற்குந்தாயுதத்துடன் வந்
து, சிவதாசப்பிராமணனே! பயப்படாதேயென்றுசொல்
லி, யேரண்டபக்ஷியைக் கழுத்தில்வெட்டித்தள்ளினார்.
பக்ஷியால் விழுங்கப்பட்டுவோதையடைந்த பிராமணன்மூர்
ச்சையாகிக்கீழே வீழ்ந்தான். விழுந்தவனை யிராஜவேட
ங்கொண்ட பரமசிவன் தட்டிக்கொடுக்க அப்பிராமணன்
மூர்ச்சைதெளிந்து, ஆபத்துக்காலத்திற் பந்துவாகவந்த அ
ரசனே! உனக்குச்சகலசம்பத்து முண்டாகக்கடவதென்
று ஆசிர்வதித்து நான்பரமசிவனைத் தியானித்துக்கூப்பிட
வந்தநீயாவனென்று திரும்பவும் அவரைப்பார்க்க முன்னி
ராஜனாகக் காணப்பட்டவர் பரமசிவனாகத்தோன்ற அவ
ரைஸ்துதிசெய்தார். அப்பொழுது பரமசிவன் சிவதாச
னே! நீஆபத்துகாலத்திலென்னை நினைத்தமையா லுன்னை
ரக்ஷிக்கவந்தேன், நீயெங்கேபோகின்றாயென்றார்.

சிவதாசன் காசியில்மரணமடைந்தால் முத்தியென்
று அவ்விடம்போகின்றேனெனப் பரமசிவன்கேட்டுத் து
ஷ்டமிருகங்களாலும், ஏரண்டப் பக்ஷிகளாலுஞ் சங்கட
மாகிய இந்தமார்க்கமாகக் காசிக்குப்போவது மிகவுமரிது.
காவேரியின்வடகரையிற் சிவக்ஷேத்திரங் களிலெல்லாம்
உத்தமமான பஞ்சநதக்ஷேத்திரத்தில் ஜெனனத்தாலுமர

ணத்தாலும், கீர்த்தனத்தாலும், தெரிசனத்தாலும், ஸ்மரணத்தாலும், வாசத்தாலும் பாவத்தைநீக்கி முத்திகொடுக்கின்றோம். ஆகையானீதிரும்பிப் பஞ்சநதத்தையடைந்து அவ்விடத்திற்றானே வாசஞ்செய் யென்றுசொல்லச், சிவதாசன் சுவாமி! எரண்டப்பக்ஷியால்வாதையடைந்துசக்தியில்லாதநானெவ்வாறு பஞ்சநதம்சேருவேனென்றான். பரமசிவன் அவ்விடத்திலிருந்த ஓர்மடுவில் சிவதாசப்பிராமணனைமூழுகென்றுசொல்ல அவ்வண்ணமே யந்தமடுவிற் சிவதாசப்பிராமணன் மூழ்கிக் காவேரியின் மத்தியிலெழுந்தார். எழுந்தவர்தெற்குவாயிலிற் பரமசிவனைக்கண்டு ஸ்தோத்திரஞ்செய்யப் பரமசிவன் சிவதாசா! காசிக்குச்சமானமான பஞ்சநதக்ஷேத்திரமிதுதான். இந்தவிடத்தில் உன்மரணபரியந்தம் வசித்தால்முத்தி கொடுப்போமென்றுசொல்லி மறைந்தருளினார். சிவதாசன்மரணமளவும் பஞ்சநதத்திலிருந்து முத்தியடைந்தான்.

௰க-வது அத்தியாயம்.

முற்றிற்று

---

## ௰உ-வது துர்த்தமன்முத்தியடைந்த அத்தியாயம்.

பூர்வத்தில் தாய்தந்தைகளால் நன்னெறிக்கு வாரதவனும், எல்லாவுயிர்க்கும்வஞ்சனைசெய்தவனும், சூதாடுகிறவனும், பொய்சொல்லுகிறவனும், நின்றநிலையில்மூத்திரம்பெய்கிறவனும், பிறரைக்கண்டு நாணமற் காட்டெருமைக்கடாவைப்போற்றாசிகளுடன்புணர்பவனும், காமா

தூரனுகப்பாடுகிறவனும், கையிற்கத்திமுதலான ஆயுதம்பிடித்தவனும், போசனத்தின்பிறகு வமனஞ்செய்துகொள்பவனும், சமயத்துக்குத்தக்க வேடந்தரித்துத்திருடுகிறவனும், வைதிகப்பிராமணன்போனடித்து மோசஞ்செய்பவனும், வழிப்பறிசெய்கிறவனுமான துர்த்தமனென்னுமோர் பிராமணனிருந்தான். அவன் அனேகபிராமணர்கள் கூட்டமாகக்கூடித்தங்களுக்குவேண்டிய திரவியங்களை யெடுத்துகொண்டு பஞ்சநதத்தில் துலாக்காவேரிஸ்நானஞ் செயயபோவதைக்கண்டு, வீபூதிருத்திராக்ஷமும் கையிற்பவித்திரமுமமேலேயோகவேஷ்டி யுந்தரித்துமந்திரஞ்செபிக்கின்றவன்போல் வாயின்முணுமுணென்று செபித்துக்கொண்டு பிராமணர்கள்கூட்டத்துடன் சேர்ந்துவந்தான். அவனை அவர்கள் நீயார்? எங்கிருந்தெங்கே போகின்றாயென்றுகேட்க, துர்த்தமன் பிராமணோத்தமர்களே! நானோ தாயதந்தை பந்துமுதலானவொருவருமில்லாதவன், அனேகதேசசஞ்சாரஞ்செய்துவருகையில் மகாயோகியொருவர் எனக்கோர் மந்திரோபதேசஞ்செய்து, பஞ்சநததிலிருந்துசெபித்தால் மந்திரசித்தியுஞ்சம்சாரதுக்கநாசமுங் கிடைக்குமென்று சொன்னபிரகாரம் பஞ்சநதத்திற்குப் போகிறேனென்று மிகவுமணக்கத்துடன்சொல்ல அவ்வார்த்தையை யவர்கள்கேட்டு மகாயோக்கியனென்றுநினைத்து, ஐயா நீர்துக்கப்படவேண்டாம், நாங்களும் பஞ்சநதத்திற்றானோர்மாதம் வசிக்கப்போகிறோம், எங்களுடன் தாங்களும் வசித்திருக்கலாமென்றுசொல்லி யழைத்துக்கொண்டு பஞ்சநதத்திற்கு வந்தார்கள்.

அவர்கள் மது[illegible]மாசா ரம்யமாசையா

ற்குடிக்கூலிக்கோர்வீடுவாங்கி யதிலன்றிராத்திரி வசித்து விடியற்காலம் துர்த்தமனை க்காவலாகவைத்துவிட்டு ஸ்நானத்திற்குப்போனார்கள். அத்தருணத்திலவர்கள் வைத்திருந்தபொன்முடிப்பை யெடுத்துக்கொண்டோடினான். ஓடும்பொழுதிவனிடத்தி லோரானுமானந்தோன்றி யிராஜசேவகர்கள் பின்றொடர்வதை யிவன்கண்டு காவேரியிற் சனக் கூட்டதுடன்போய்மூழ்கினான். சேவகர்களும்போய் மூழ்கி, அவனைப்பிடித்து க்கரையிற் கொண்டுவந்துபரிசோதித்துப் பொன்முடிப்பைக்கண்டு, அத்துடன் அரசனிடத்திற் கொண்டுபோய விடுத்தார்கள். அரசன் விசாரணை செய்து திருடனென்றறிந்தும், பிராமணனென்கின்றமானத்தால் அவனிடத்திலிருந்த பொன்முடிப்பைமாத்திரம் வாங்கிக் கொண்டுவிட்டுவிட்டான். விடவே துர்த்தமன்பஞ்சநதித் தைவிட்டு மறுதேயம்போய்விட்டான். அதன்பின் ஸ்நாநத்திற்குப் போன பிராமணர்கள் வீட்டிற்குவந்துதுர்த்தமனைக்காணாமல்தங்கள் தங்கள்மூட்டையைப்பரிசோதித்துப் பொன்முடிப்பில்லா திருக்கக் கண்டுமிகுந்த துக்கததுடன் அரசனிடத் தில்வந்து முறையிட்டார்கள். அரசனவர்கள் சொல்லியதைக்கேட்டுநடந்தசங்கதிமுழுதுந்தெரிவித்து,ப் பொன்முடிப்பையவர்களிடங்கொடுக்க அதை வாங்கிக் கொண்டுபிராமணர்கள் அரசனையாசிர்வதித்துத் தங்களிடம்போய்ச் சேர்ந்தார்கள். இது நிற்க, அன்னிய தேசசஞ்சாரஞ்செய்து திருடித்திரிந்த துர்த்தமன் சிலகாலஞ்சென்று மரணமடைந்தான். அவனையமதூதர்கள் அழைத்துக் கொண்டுபோகும் பொழுது; பரமசிவன் காவேரியிற்பயத்தால் முழுகினவனாலும் துலாமாசத்திற்பிராதக்காலத்திற் காவேரிஸ்நாநம் பண்ணிய புண்ணியத்தாற்

சிவலோக மடையவேண்டியதென்றெண்ணி, நந்திதேவ ர்முதலான சிவகணங்களையழைத்து ப்பாபமில்லாததுர்த் தமனை யெமதூதர்களழைத்துப் போகிறார்கள்;அவர்களை விலக்கித்துர்த்தமனை யெமதிடமழைத்துவரக்கடவீர் களெ ன்றுகட்டளையிட, அவ்வண்ணமேயழைத் துவந்துவிடுத்தா ர்கள்.அவனுக்குக்கணுதிபத்தி யந்தந்துதன்னுலகத்திலிவை த்தருளினார். இந்தச்சங்கதியை யெமன்றெரிந்து பரமசிவ னிடத் திலவந்துசுவாமி! பஞ்சநதத்திலவசிப்பவர்களை மாத் திரம்என்னுலகத்திற்கழைத்துப்போகக்கூடாது. மகாபா பியாயன்னியதேசத்திற்றங்கிய துர்த்தமனையென்னுலகத் திற்குத் தூதர்கள்பிடித்துக்கொண்டுவருகையிற் சிவகண ங்கள்வந்தழைத்துக்கொண்டுவந்த காரணத்தையடியேனு க்குத்தெரிவித்தருளவேண்டுமென, ப்பரமசிவன் எமனே! யொருவனெவ்வித காரணத்தினலாவது காவேரிஸ்நானஞ் செய்வானேல் முக்தியடைவது நிச்சயம். இந்தத் துர்த்தம ன் துலாமாசாரம்பகாலத்திற் காவேரிஸ்நானஞ்செய்தவ னுகையாற் கணுதிபத்தியங்கொடுத்துச் சிவலோகத்திலிரு த்தினோம். காவேரிஜலசம்பந்தமான காற்றொருவன் மே ல்வீசினும் அவன்பாவியல்ல: இதைநீயறியக்கடவாயெ ன்றார். எமனதைக்கேட்டுத் தன்னுலகம் போய்ச்சேர்ந் தான்.

௰உ-வது அத்தியாயம்.

முற்றிற்று

---

# ௰௩-வது துஷ்பிரக்ஞப்பிராமணன் முத்தியடைந்த அத்தியாயம்.

பூர்வத்தில்; அதர்மனும், விடனும், வேசிகள்கூட்டுறவுள்ளவனும், மாதாபிதா குருமுதலானவர்கள் வார்த்தையைக்கேளாதவனுமான துஷ்பிரக்ஞனென்னுமோர்பிராமணனிருந்தான். அவன்றன் மனையாளைத்தள்ளிப்போட்டு, ஓர்வலைச்சியை வைப்பாட்டியாக வைத்துக்கொண்டு, அவள்வீட்டில் மாம்சபக்ஷணத்தோடு சாப்பாடுஞ்செய்துகொண்டு வெகுகாலமவ்வலைச்சியுடன் சேர்ந்திருந்தான். இப்படியிருக்குங்காலத்திற் பஞ்சநதத்திலடக்குஞ் சித்திரைமாசோச்சவம் பார்க்க வனேகஜனங்கள் போவதைக்கண்டு, அந்தவலைச்சியுடன் துஷ்பிரக்ஞனும் பஞ்சநதத்துக்குப்போனான். அவன்போன அன்றைத்தினம் ரதோச்சவமாகையால் ரதாரூடராகவந்த பரமசிவனைத் தெரிசித்து அன்றிராத்திரி பலசனங்கள் நித்திரைசெய்தவீதியில் வலைச்சியுடன் அவனும்நித்திரைசெய்தான். பாதிராத்திரியில் அனேகந்திருடர்கள்கத்திமுதலான ஆயுதங்களுடன்வந்துவீதியினித்திரைசெய்தசனங்களைக் கொலைசெய்ததோடு இவர்களையுங்கொன்று, திரவியங்களைக் கொள்ளையடிக்கிற செய்தியையரசன்கேள்வியுற்றுப் படையுடன்வந்து சண்டைசெய்துஇறந்தவர்கள்நீங்க மற்றத்திருடர்களைப் பிடித்துச்சிறைச்சாலையிலடைத்துத் திரவியங்களையவரவர்கள்கையிற்கொடுத்துப் போனான். இறந்தவர்கட்கெல்லாஞ் சிவலோகங்கிடைத்ததோடு துஷ்பிரக்ஞனுக்கும், வலைச்சிக்கு

ஞ்சிவலோகங்கிடைத்தது. ஆகையாற் பஞ்சநதத்திற் பக்தியில்லாமல் வசித்தவர்களு முக்தியடைவார்கள்.

௰௬-வது அத்தியாயம்.
முற்றிற்று

---

## ௰௭-வது பாவிகள்ஜென்மமடைவதையுரைத்த அத்தியாயம்.

அனவத்தியாதேவிநாதசன்மாவைவணங்கிச்சுவாமி! ஜீவர்கள்பாவசேஷத்தானரகத்தினின்று நீங்கிப்பூமியில்வந்து என்னசென்ம மடைகின்றார்க ளதைச் சொல்லவேண்டுமென்றுகேட்க; நாதசன்மா:- பெண்ணே! பிர்மகத்தி செய்தவன், கழுதை-பன்றி- ஒட்டகம்-யானை- பக்ஷி- மான்-நாய் மாம்சந்தின்னுஞ்சண்டாளனாகவும், குருதார கமனஞ்செய்தவன் மலத்தையுண்ணும் பன்றி-நரி-காகம்-கழுதை-திருடனாகவும், சுராபானஞ்செய்தவன் கோட்டான்-எறும்பு-ஈ-கொசு-மூட்டைப்பூச்சி- பிணஞ்சுடும் வெட்டியானாகவும். பொன்றிருடினவனும் அவனுடன்சினேகித்தவனும்-எலி-குரங்கு-தவளை-ஆமை-புழு-புறா-அன்னம் கொக்கு-எருமை-கோமாம்சந்தின்னும் பறையனாகவும், பிராமணன்சொத்தை யபகரித்தவன் பிரமராக்ஷதனாகவும், தானியங்களைத் திருடினவன் பெருச்சாளியாகவும், தண்ணீர்திருடினவன் நீர்க்காகமாகவும், வெண்கலந்திருடினவன் தேவவருஷத்தி லாயிரவருஷம் அன்னமாகவும், நெய்திருடினவன் தாவரப்பொருளாகவுங் கீரியாகவும், இ

லைகாய் கறிகள்திருடினவன் மயிலாகவும், வாழை-நாரத்தை-பலா-தேங்காய் திருடினவன் சிறுகுருவியாகவும், மாம்சந்திருடினவன் கழுகாகவும், எண்ணெய் திருடினவன் சிரிவாகமாகவும், பட்டுவஸ்திரந்திருடினவன் சிச்சிலியாகவும், வெண்பட்டுத்திருடினவன் தவளையாகவும், குதிரை-பூ, திருடினவன் குரங்காகவும், பயிர்திருடினவன் ஊர்க்குருவியாகவும், வைக்கோல்-புல் திருடினவன் புல்லட்டையாகவும், பாய்-கட்டில்-தலையணை- வாகனம்- பல்லக்கு இவைகள்திருடினவன் ப்ரஹ்மக்கும் ஒட்டகமாகவும், தேவாலயங்களிற் சேவகத்துக்கிருந்து நஷ்டம்விளைத்தவன் பிசாசாகவும், வீபூதி- ருத்திராக்ஷம்- வஸ்திரந் திருடினவன் குஷ்டரோகியாகவும், பொய்சொன்னவன் மழைகாலத்தவளையாகவும், தாய்தந்தை- தமையன்- குரு-வேதியர்-வேதாந்தி- சந்நியாசி-சந்திரசூரியர்கள் - பிரம - விஷ்ணு- ருத்திரர்கள் இவர்களை நிந்தித்தவனும், வேதம்- இதிகாசம்- புராணம்- யாகம் இவைகளை நிந்தித்தவனும், தேள்,பாம்பாகவும்; பிராமணதானத்தைத் தடுத்தவனும்- சந்நியாசிகளுக்குப்பிச்சை செய்யாதவனும்- அன்னங்கிடைக்காத தரித்திரனுகவும்,பிராமணனுக்குத்தருகிறேனென்றுசொல்லிப்பின் தராதவன் துர்மாம்சநாற்றமுள்ள மூக்கையுடையவனுகவும், விதியைவிட்டு விலக்கையனுசரிப்பவன் மரம்-கல்-கொடி-செடி- முள்ளாகவும், தேவாலயம்-சாவடி,குளம்-கிணறு இவைகளைக் கெடுதிசெய்தவனும், சிலம்பம்பழகல்- அழுக்குருட்டல் - காலமல்லாத காலத்திற்புணர்தல்- எண்ணெய்தேய்த்துக்கொள்ளல்-தூங்குதல்-சவரஞ்செய்துகொள்ளல்- அதிகஅன்னமுண்ணல்- சூதாடுதல்

மூதலானவைசெய்தவனும் நீர்ப்பாம்பாகவும், வேதியர்-பி ரம விஷ்ணுவை நிந்திப்பதைக்கேட்பவன் மண்ணுழிப் பாம்பாகவும், அத்துவிதத்தைநிந்திப்பவன் முகத்திற்சீயொ ழுகும் ரோகமுடையவனாகவும், அத்துவிதத்தை நிந்திப்ப தைக்கேட்பவன் காதிற்சீயொழுகும் ரோகமுடையவனாக வும், சூத்திரமாதருடன் புணர்ந்தபிராமணன் முதலை-மீ ன்-நீர்க்காகம்-ஆமையாகவும் பிறப்பார்.

இப்பாதகங்களைநிவர்த்திசெய்துகொள்ள வேண்டின் இப் பஞ்சநதஸ்தலத்திற் பத்துவருஷந்தங்கி துலாமாசத்திலு ம், மகரமாசத்திலும், காவேரிஸ்நானஞ்செய்து கோமூத்தி ரத்தாற் சமைத்தஅன்னத்தை யொருவேளைபுசித்து வந்தா ல்விமோசனமாகுமென்றார். அதைக்கேட்ட அனவத்தியர் தேவி சுவாமி! பிரமகத்தி- குருதாரகமனம்- சுராபானம்- பொன்திருடுதல்- சேர்க்கையால்வருதல் ஆகியவிவ்வைந்து பாவங்கட்குச்சமானமானபாவங்களையும், அவைகளுக்குவி மோசனத்தையுஞ் சொல்லவேண்டுமென, நாதசன்மா வழிநடையைப்பேதிக்கின்றவன், தனக்குமாத்திரம்சமைய ல்செய்யச்சொல்கிறவன், பிராமணநிந்தை செய்கிறவன், அதிகபோசனன், வேதம்விற்கிறவன், பிராமணர்களையிச சைகாட்டியழைத்துவந்து பின்னில்லையென்பவன், ஒருவ ரிடத்திற் றருமசாஸ்திரங்கற்றுக்கொண்டு அவர்களுடன் றுவேஷித்து அவமதிக்கின்றவன் ஆகியவிவர்கள் பிரமகத் திசெய்தவரோ டொப்பாவர். அவுபாசனம் விடுத்தவுஞ் சூனாவிலன்னமுண்பவன், கட்குடிக்குமாதருடன்சேர்ப வ ன், வேசியான்னம்புசிப்பவன், கூட்டாஞ்சோறுதின்பவன் சதிப்பிரஷ்டனன்னமுண்பவன், வைசுவதேவம்-ஸந்தியா

வந்தனம்-சௌசம்-காயத்திரிசெபம் விட்டவன், சாஸ்திரவி ரோதமாகப் பற்கொம்பிட்டுப்பல்தேய்ப்பவன் ஆகியவி வர்கள் சுராபானஞ்செய்தவரோடொப்பாவர், கந்தமூலபல ம்-கஸ்தூரி-கெந்தபொடி-வெல்லம்- சர்க்கரை-தானியம்- எள்-அரிசி திருடினவன், வேதாத்தியானம்பண்ணுதவன், தருமம்- வேதம்- தீர்த்தம் விற்றவன், பசு-அக்கினி விக்கின ம்பண்ணினவன், சிராத்தம்விட்டவன்; அதிதிபூசைபண் ணுதவன், அனுதைதிரவியத்தை யபகரித்தவன், கோ-அசு வம்-பிறர்விளைநிலம்-பயிர் இவைகளையபகரித்தவன்வெண் கலப்பாத்திரம்-தேன்-நெய்-ருத்திராக்ஷம் திருடினவன இ வர்கள்பொன்றிருடரோடொப்பாவார்கள். சகோதரி-புத் திரன்பாரியை-சிநேகன்பாரியை-பரமாதர்-மத்தியபானஞ் செய்பவள்-சாதிகெட்டவள்-கைம்பெண் இவர்களுடன் பு ணர்ந்தவர், குருதாரகமனஞ் செய்தவரோடொப்பாவர். இந்நான்குபேர்களுடன் சேர்ந்தவர் அவர்களோடொப பாவர். இந்தப்பாவங்களை யறியாமற்செயதாற் காவேரியி ல் மாகமாசமுழுதும் ஸ்நானஞ்செய்து பஞ்சநதீசுரைத்தெ ரிசித்தாற் பாவப்பிராயச்சித்தமாகும். தெரிந்துசெய்தாலத ற்குப்பிராயச்சித்தம் ஸ்மிருதிகளிலில்லை.

ஆனாலும் மூன்றுவருஷகாலம் பஞ்சநதத்தில் வசித்து சாத்திர விதிப்படி காவேரியில் ஸ்நானஞ்செய்து, நூற் றெட்டுவீதிப்பிரதக்ஷணம்லகவாரபோசநஞ்செய்து, பஞ் சநதீசுவாருக்கு நூற்றெட்டுப்பொன்னும், பிராமணருக் குநூற்றெட்டுப்பொன்னுங் கொடுத்துவந்தாற் பிராயச்சி த்தமாகும், இல்லாவிடினரகவாதனை யடையவேண்டுமெ ன்றார். அதைக்கேட்டு அனவத்தியாதேவி சுவாமி! பாவஞ்

செய்தவர்களெவ்வித அடையாள முடையவர்களாக விருப் பார்கள்.அதையுஞ்சொல்லவேண்டுமென, நாதசன்மா பி ரமகத்திசெய்தவன் க்ஷயரோகியாகவும், சுராபானஞ்செய்த வன் சொத்தைப்பல்லனுகவும், சொர்னந்திருடினவன் கை விரல் கால்விரல்களில் ரோகியாகவும், குருதாரகமனஞ்செ ய்தவன் சருமரோகியாகவும், பரதாரகமனஞ் செய்தவன் நொண்டி-செவிடன்-வாயு ரோக முள்ளவனுகவும், ஆசா ரியரைநிந்தித்தவன் காக்காவலிப்புரோகியாகவும்,குருமொ ழிகடந்தவன் நீரிழிவுரோகியாகவும், புழுவாகவும், வாயு ரோகமுள்ளகழுதையாகவும், சிவத்துரோகம் குருத்துரோ கஞ்செய்தவன்,துர்புத்தியுடையவன், அரணை- பல்லி- கோ ழியாகவும், விஷ்ணுத்துரோகம் - விஷ்ணுநிந்தைசெய்தவ ன் சித்திரக்குள்ளன், ஓணன், நாவில்ரோகமுள்ளசண்டாள னுகவும், வேதாந்தநிந்தனைசெய்தவன் மேகரோகமுள்ளமத பேதப்பறையனுகவும்,வேதாசாரநிந்தகன் உன்மத்தனுகவும், மாதவிடாய்மாதருடன்புணர்ந்தவன்மகோதரரோகமுள்ள வனுகவும், நீசனுகவும், விஷமூட்டினவன் தீமூட்டினவன் குஷ்டரோகியாகவும், ஆயுதம்பிடித்தவன் தவளையாகவும், இரத்திநந்திருடினவன் ஒருதலைவலியனுவகம்,வஞ்சனை செ ய்தவன்பொய்ச்சாக்ஷிசொன்னவன் இவ்விருவர்க்குமுடந் தையாகவிருந்தவன் குய்யரோகியாகவும்,தாய்-தந்தை-சிறு வயதுடையதன்புத்திரன்-மனையாள் இவர்களைத்தள்ளினவ ன்நேத்திரரோகியாகவும்.குளம்-தோட்டம்-கிணறு-சாவடி இவைகளைப்பேதித்தவன் அங்கயீனனுகியடிமைத்தொழில் செய்பவனுகவும், எசமான் துரோகஞ்செய்தவன் குன்ம ரோகியாகவும், ஒட்டை-மாடு-கழுதை இவைகளிற்சவாரி

செய்தவன் மேகரோகியாகவும், பதிவிரதையைக் கற்பழித்தவன் லிங்கப்புத்துரோகியாகவும், பன்றியாகவும், பிறரையபவாதஞ் சொன்னவன்நரம்பில் வாயுரோகமுள்ளவனாகவும் பிறந்திருப்பார்கள்.

௧௪-வது அத்தியாயம்,

முற்றிற்று.



## ௧௫-வது மரணக்குறியுரைத்த அத்தியாயம்

அனவத்தியாதேவி தன் காதலனாகிய நாதசன்மாவை வணங்கிச்சுவாமி! மரணக்குறியையுமதற்குப்பிராயச்சித்தத்தையும் சொல்லியருளவேண்டுமென்றுகேட்க நாதசன்மா பெண்ணே! இராக்காலத்திற் சந்திரனைச் சூரியனைப்போல்உஷ்ணமாகக் கண்டாலும், சூரியகிரணங்கள் கண்ணுக்குத்தோன்றாதிருந்தாலும், ஆகாசஞ்சிவப்பாகவிடைவிட்டுத்தோன்றினாலும், எலிவளைபோலாசனத்துவாரமிருந்தாலும், காகக்கூடுபோற்றூர்க்கந்தந்தலையில் வீசினாலும், சீக்கிரத்தில் மரணமுண்டாகும் சூரியனிற்றுவாரமாகக்கண்டாலுந்தன்னிழலிற்றுவாரமாகக்கண்டாலும், ஒருமாசத்தில்மரணமுண்டாகும். ஜலத்திலாவது கண்ணாடியிலாவது, தன்சிரம்வக்கிரமாகவுமற்றதாகவுங் கண்டால், எமன்றன்வீட்டில்வந்திருக்கிறான். கண்ணை மூடித்திறக்குங்காலத்திற்பூச்சிபறந்ததுபோலிருந்தால், உடனேமரணம்.கா

தைப்பொத்திச்சத்தங்கேளாதிருந்தால்' எமன்சமீபத்திலி ருக்கிறான், நெருப்பு,மயிலின் கழுத்துப்போற்றோன்றினு லும், மேகமில்லாதகாலத்தில் மின்னற்றோன்றினும், மி ன்னற்காலத்திலொளிதோன்றாதிருந்தாலும், மேகத்திற்சூ ரியகாந்திதோன்றினும், பதினைந்துநாளில்மரணம், பூமி யிற்சுவாலைதோன்றினல், எழுநாளையில்மரணம். சந்திரகா ந்தி- துருவநக்ஷத்திரம்- அருந்ததிநக்ஷத்திரம் -கண்ணுக்கு த்தோன்றாதிருந்தால், ஒருவருஷத்தில்மரணம். கிரணமி ல்லாமற்சூரியனையும், காந்தியில்லாமல் அக்கினியையுங்கண் டால், பதினொருமாசத்தில்மரணம். அகாரணமாகத்தன்னு டம்புபருமனாகவும், இளைப்பாகவும், கறுப்பாகவுங்கண்டால் எட்டுமாசத்தில்மரணம். புறா-கழுகு-பருந்து-காகம், தலையி ற்பட்டாலாறுமாசத்தில்மரணம், சலத்திலிந்திரதனுசுகண் டால்; இரண்டல்லதுமூன்றுமாசத்தில்மரணம், தேகத்தில் வெம்புவாசம்பிணவாசங்கண்டால், ஒருமாசத்திற்குமேல் மரணம். இருதயம்வரக்ஷியாகவிருந்தாலும், தலையிற்புகை ச்சற்கண்டாலும், சரீரமுழுதுநடுக்கமுற்றாலும், பத்துநாளை யில்மரணம். பிராணவாயுவேகமாக அறுந்தது போலிருந்தா லும், பகற்காலத்தில்நக்ஷத்திரத்தைக்கண்டாலும் இராத்தி ரியிலிந்திரதனுசைக்கண்டாலும், சிவப்பு-கருப்புவர்ணமா கச்சந்திரசூரியர்களைக்கண்டாலும், சூரிய வுதையகாலத்தில் எதிர்நின்றுநரிஊளையிட்டாலுஞ்சீக்கிரத்தில்மரணம். நா, அ திகக்கறுப்பாகவும், முகம் அவலக்ஷணமாகவும், கன்னஞ்சி வப்புடன்கலந்த கருப்புவர்ணமாகவுங்கண்டாலும், மேற் பார்வைசிவப்பாகவுங்கருப்பாகவுமிருந்தாலும், சரீரத்தில் உஷ்ணமின்றியிருந்தாலும், எமன்வீட்டில்வந்திருக்கிறான்,

நாபியிலும், மார்பிலும் ஓட்டையாகக்கண்டாலு,ந் தணல் போரல்லூத்திரமிருந்தாலும், பல்கறுத்தநிறமாக, இருந்தா லுஞ்சீக்கிரத்தில்மரணம்.

சித்திரையில் பன்றியாற்றுனடிபடுவதாகவும், குரங்குத ன்றலையயைசப்பதாகவும். சுருக்குவாயுவீசுவதாகவும், பொன்வாங்குவெடுப்பதாகவும், தேனைக்கடித்துத்தின்பதா கவும், தாமரைக்கிழங்கைத்தின்பதாகவும் வெண்டாம ரைப்பூவைத்தரிப்பதாகவும் கழுதை,பன்றிகட்டினவண் டியிலேறிச்சவாரிபண்ணுவதாகவும்,கறுத்தபசுவின் மேலே றுவதாகவும் விளாமிச்சம்வேர்மாலைதரித்துத் தென்றிசை போவதாகவும் பூதப்பிரேதப்பிசாசங்களைக் கண்டதாகவும் ஆகாயத்திற்கந்தர்வபட்டணத்தைக்கண்டதாகவும்விருக்ஷ ங்களைச் சிவப்புநிறமாகவும்தன்கால் வெட்டுப்பட்டதாகவும் சேற்றிலாவது புழுதியிலாவது தன்கா லகப்பட்டிருந்ததா கவும்,தன்வஸ்திரஞ்சிததிரவர்ணங்கறுப் புவர்ணமாகஇருப் பதாகவும்கருநிறமுடைய மொட்டை மனிதன்றன்னைவாது ப்பதாகவும், கற்களாலடிபட்டதாகவும்,தன்றலையை விரித் துச்சிரித்து ஆடிக்கொண்டுதென்றிசையி லோடுவதாக வும்,கோமயமடுவில் விழுந்ததாகவும்,எண்ணெய்க்கொப்ப ரையில் விழுந்ததாகவுஞ் சொர்ப்பனங்கண்டாற்சீக்கிரத் தில்மரணமுண்டாகும். அதற்குப்பிராயச்சித்தமாகப்பஞ் சதேக்ஷத் திரத்தையடைந்து காவேரிஸ்நானம்பண்ணிச் செப்பீயேசுவரரைத்தெரிசித்து மரணபரியந்த மங்குவசித் தால் யமலோகமடையாமற் சிவலோகமடைவார்களென் று சொன்னார்.

௫ரு - வ து அ த் தி யா ய ம்

மு ற் றி ற் று

## ௰சு-வது ஆலயவரலாறுரைத்த அத்தியாயம்

சூரியவம்சத்திற்பிறந்து அயோத்தியிலரசுசெய்த மனுசக்கரவர்த்தி புதல்வனும் சத்ததீவுக்கு அரசனுமானபிரியவிரதராஜன் தன்புத்திரரெழுவரையும் ஏழுதீவுக்குமரசராகவைத்து வாழுங்காலத்திலோர்நாள் கிழக்கேயிருந்துமேற்கேபோகையில் மனுபுத்திரனாகிய பிரியவிரதனே! நீ யின்னங்கொஞ்சதூரம்போனாலோர் அற்புதத்தைக்காண்பாயென்று ஆகாயத்திலசரீரி யுண்டாயிற்று. அரசனதைக்கேட் டானந்தமடைந்து மேற்கேபோகையிற் பதினான்குலகத்தையுமூடுருவிய சோதியையுடைய மகாலிங்கத்தினின்றும் பரமசிவப்பெருமானெழுந்தருளிப் பிரியவிரதராஜனே! கற்பகாலத்திலுநாசமில்லாத வெம்மாலிவ்விடத்திற்கற்ப சிருஷ்டிகர்த்தாவாகிய அனேகங்கோடி பிரம்மாக்களுங் கற்பபாலர்களாகியஅனேகங்கோடி விஷ்ணுக்களுங்காணப்பட்டார்கள். எம்முடையமாயாசக்திவிசேஷத்தாற்செய்யப்பட்ட தாவர ஜங்கம சொரூப ஜகத்காரணனாயாமிவ்விடத்திற் பஞ்சநதீஸ்வரர் ஜெப்பியேஸ்வரரென்னு நாமதேயத்தோடுவசிக்கின்றோம். எமதாலயம் ஜீரணமாகவிருக்கின்றது. அதனை நீ ஜீரணோத்தாரஞ்செய்யவேண்டியதென்றுசொல்லிமறைந்தருளினார். ஆச்சரியமடைந்துஜோதிலிங்கத்தினருகுபோயினான். போனவுடனேபதினான்குலகத்தையு மூடுருவிநின்ற வொளியையடக்கிச்சிறுத்துமூன்றிரேகை யுடனும் அனேகத்துவாரங்களுடனும்உருக்கியதங்கம்போலொளி யடைந்து தோன்றியசிவலி

ங்கப்பெருமானையும், அச்சிவலிங்கத்தின்றுவாரத்தில்தூர்வாசர், கௌதமர், சதாநந்தர், ததீசி, வசிட்டர்முதலான்சிவபத்தசிகாமணிகளாகியமகரிஷிகளையுங்கண்டு, மனதிலாநந்தமடைந்து, ஆலயத்தைப்பொன்னினாற்சமைத்து, ஆபரணம்-கொடி-கொடை- விசித்திரவஸ்திரம்-சமரை, சாந்தாற்றி-சுவர்னதண்டம்-உபசாரச்சாமரன்கள் -அனேகக்கிராமங்கள்திரவியங்களுங்கொடுத்து, ஆலயத்திலும்வீதிகளிலுந்திருவிளக்கிட்டு, வேதபாராயணத்துடன் உச்சவ நடத்தி, வேதத்திலுருத்திராத்தியாயத்திற் சொல்லியபடி ஸ்தோத்திரம்பண்ணினான். அப்பொழுது பரமசிவன்பிரசன்னமாகிப்பிரியவிரதனே! நீவிரும்பியதைக்கேட்பாயாகவென்று திருவாய்மலர்ந்தருளினார். பிரியவிரதன், சுவாமி! நிரதிசயாநந்தசுகத்தையடியேனுக்களித்தருளவேண்டுமென அவ்வாறேதந்தனமென்றுபரமசிவன்மறைந்தருளினார்.

கசு-வது அத்தியாயம்.
முற்றிற்று.

---

## ௰எ-வது நாதசன்மாவுக்குப்பரமசிவன பிரசன்னமான அத்தியாயம்.

நாதசன்மாவரனவர்கலியுகத்தில்வருணாச்சிரம தருமம், ஆசாரம், அநுட்டானம், சந்தியோபாசனம், காயத்திரிஜெபம், ஏகாதசிவிரதம், பாநுவாரவிரதம்விட்டவர்களும், சூரியசங்கிராந்திகளிற்கர்மாநுஷ்டானஞ்செய்யாதவர்களும், அவுபாசனம்விட்டவர்களும், ஸ்மிருதிகளிற் சொல்லியபடி காலங்களில் உபநயனஞ் செய்யாதவர்களும், கெடுங்கால

மாகக்காயத்திரிஜெபம் விட்டவர்களும், விடியற்காலத்தி
லெழுந்து சவுசஞ்செய்யாதவர்களும், சுத்தாசமனஞ்செய்
யாதவர்களும், திக்கறிந்துமலமூத்திரவிசர்க்கஞ் செய்யாத
வர்களும், விதிப்படி வாய்கொப்பளியாத வர்களுமான மா
னிடர்கள், சம்சாரமாகியகோட்டானுக்குச் சூரியனாகவும்,
பாவங்களாகிய விதரங்களுக்கு அக்கினியாகவும், நரகங்க
ளாகிய சர்ப்பங்களுக்குக் கருடனாகவுமிருக்கின்ற இந்தப்ப
ஞ்சநதஸ்தலத்தையுத்தேசித்துச்சங்கற்பஞ்செய்து கொண்
டு சிவஸ்துதிசெய்து, வீபூதிதூளிதராக உருத்திராக்ஷந்தரி
த்து வீட்டைவிட்டுப்புறப்பட்டு மௌனவிரதத்துடன் திரு
வையாற்றையடைந்து, கால்கைசுத்தம்பண்ணி, ஆசமன
ஞ்செய்து தர்ப்பாசனத்திலுட்கார்ந்து சங்கற்பஞ்செய்து
கொண்டு காவேரிஸ்நானஞ்செய்து பவித்திரபாணியராக
நித்தியகருமங்களைமுடித்துக்ஷேத்திரசிராத்தமும்பிதிர்தர்ப்
பணமுஞ்செய்து திருக்கோவிலுள்வந்து, பஞ்சாக்ஷரசெப
த்தோடு பரமசிவனைத்தெரிசித்துப் பிரதக்ஷணநமஸ்கார
ஸ்தோத்திரங்கள்செய்து, பஞ்சநதத்தில்வாசஞ்செய்வார்க
ளேயாகில் பாவங்களெல்லாநசித்து மோக்ஷாநந்தத்தைய
டைவதுசத்தியம். இதுபொய்யானாலென்சிரம் வெடித்து
ப்போகக்கடவது. மெய்யாகிற் பரமசிவன் இப்பொழுதே
பிரசன்னமாகக்கடவதென்றார். அப்பொழுது பரமசிவன்
பிரசன்னமாகி நாதசன்மாவே! நீசொல்லியயாவு மெய்யே
யன்றிப்பொய்யல்ல; நீ,யெமதவதாரமே; நீ சொல்லியவெ
ல்லாம் நாம்சொல்லியவையேயென்று மறைந்தருளினார்.
நாதசன்மா ஈசுவரவாக்கியத்தைக்கேட் டானந்தமடைந்

து, பஞ்சநதத்திலெழுந்தருளி யிருந்தார்.

௰எ-வது அத்தியாயம்.

முற்றிற்று.



## ௰அ-வது உண்ணத்தகாதபதார்த்தங்களை உண்டதால்வந்த பாவவிமோசனமுரைத்தவத்தியாயம்.

உள்ளிப்பூண்டு.ஈரவெங்காயம்-கத்தரிக்காய்-முருங்கக்காய்-சுரைக்காய்-பீர்க்கங்காய்-முள்ளங்கி.அத்திக்காய-மண்ணுப்பு-பன்றி-கழுதை-ஒட்டை.பூனை-காகம் இவைகளினுச்சிஷ்டம், மாதர்முலைப்பால்-கழுதைப்பால்-பழஞ்சோறு-கள்சம்பந்தமான அன்னம்-எலிப்புழுக்கைவிழுந்த அன்னம்-நகத்தாற்கிள்ளிய பதார்த்தம்-வேர்வைவிழுந்தஅன்னம்-புனற்பாக அன்னம்-தேங்காய்நீர்-கன்றுபோட்டுப்பத்துநாளைக்குட் கறந்தபால்-கன்றில்லாத பசுவின்பால்-ஒட்டைப்பால்-காராம்பசுவின்பால்-ஆட்டுப்பால்-யானை குதிரையால்முகர்ந்துதொட்ட பதார்த்தம்-சாதியீனன்தொட்டபதார்த்தம்-செனனமரண ஆசூசர்கள் அன்னம்-மாதவிடாயமாதர்கள் அநுமதிகொடுத்துச் சமைக்கப்பட்ட அன்னம்-உபநயனமில்லாதவர்களன்னம்-சந்நியாசியன்னம்-அந்தீகனன்னம்-சாதியீனன் அன்னம்-வேதாத்தியானஞ்செய்யாதவனன்னம்-வேதங்கெட்டவர்களன்னம்-வேதநிந்தகனன்னம்-வருணாச்சிரமம் ஆசாரம்விட்டவனன்னம்-ந

ன்றிமறந்தவனன்னம்- பெருவியாதியாள னன்னம்-விபசா
ரஞ்செய்பவ னன்னம்- கோட்சொல்லுகிறவனன்னம்- சிரா
த்தஞ்செய்யாதவனன்னம்-மாமனார்சொத்தாற் சாப்பிடப்
பட்டவனன்னம்-தரித்திரனன்னம்-பெரியோர்களைநிந்திப்ப
வனன்னம்-தூஷகனன்னம்- கொடியபாவிகளன்னம்-மூர்
க்கனன்னம்-மரியாதையில்லாதவனன்னம்- புரோகிதனன்
னம்- தூர்த்தனன்னம்- சாந்தகுணமில்லாதவனன்னம்-பா
ஷண்டர்களன்னம்-சூத்திரனன்னம்-பகைவனன்னம்-நாட்
கரன்னம்-தச்சனன்னம்-வைத்தியனன்னம்- உழுகிறவனன்
னம்- கூட்டாஞ்சோறு-தாசிஅன்னம்- வண்ணானன்னம்-க
த்திபிடித்துச்சேவிப்பவனன்னம்-குஷ்டரோகி அன்னம்-பா
டகனன்னம்-கொல்லனன்னம்-தட்டானன்னம்- தகாத்வர்க
ளுக்குயாகஞ்செய்துவைத்தவனன்னம்-வட்டிவாங்குகிறவ
னன்னம், அனாதைகளன்னம், பாலரன்னம், சித்திரககாரன
ன்னம்-வேடர்களன்னம்,தேவதூஷகனன்னம்,உச்சிஷ்டா
னனம்-பயந்தவனன்னம்-அழுகிறவனன்னம்- பசிதாகமுள்
ளவனன்னம்-உலோபரன்னம்-தேவதுரோகனன்னம்-வீபூ
திருத்திராக்ஷ த்வேஷியன்னம் - பாகஸ்தர்களை மோசஞ்
செய்தவன்ன்னம்-ஊர்த்துவபுண்டரம்போட்டவனன்னம-
வெட்டுப்பட்டவனன்னம்-அம்பட்டனன்னம்-குயவனன்ன
ம-ஊழியக்காரனன்னம்- மாதவிடாய்மாதர், சண்டாளன்,
ஆசாரமில்லாதவன் பார்த்தஅன்னம்- வேசிகளன்னம்-பா
ங்கியரன்னம் இவைகளையுண்டதால் வந்தபாவம்பஞ்சநதத்
தையடைந்து, காவேரிஸ்நானஞ்செய்து,பஞ்சநதீசுவரரை
த்தெரிசித்து,ஜெப்பியேசுவரமண்டபத்திலிருந்து ருத்திரா
த்தியாயத்திற்சொல்லியமந்திரங்களை-ரிஷி-சந்தசு-தேவதை

அங்கதியாசம் - கரதியாசத்தோடுசெபித்து மரணபரியந்தம் நகுலசித்தால் நீங்கிமுத்திடைடயலாகும்.

௰அ-வது அத்தியாயம்.
முற்றிற்று.



## ௰கூ-வது வீரசப்பிராமணன்முத்தி யடைந்தஅத்தியாயம்.

பூர்வதத்தில காஞ்சிதேசத்திற்பிறந்தவீரசனென்னும்பி ராமணன் தீர்த்தயாத்திரைசெய்யப்புறப்பட்டு அனேகதீர் த்தங்களில்ஸ்நானஞ்செய்து பின்காவேரிதீரமடைந்து, ஸ் நானஞ்செய்து, ஆங்காங்குள்ள சிவாலயதரிசனஞ் செய்து திருவையாற்றையடைந்து, தேவோத்தமனாகிய பிரணதா ர்த்திஹரரை ஸ்தோத்திரஞ்செய்து, திருக்கோவிலைவலம வந்து நமஸ்கரித்துப் பூசைசெய்து, தெற்குவாயலுக்குமே லபுறம் பன்னசாலையொன்றமைத்துத் தன்மனையாளை வ ரவழைத்ததிலிருந்து இல்லறநடத் திவருகையில்தனுர்மாச மபிறந்தது. பிறந்தவுடன் காவேரியிற் றிரிகால ஸ்நானஞ் செய்து,முப்பதுநாளு முபவாசமிருந்து, உருத்திரஜபத்து டன் பஞ்சாக்ஷர மந்திரத்தையுஞ்செபித்துத் தினநூறுபிர தக்ஷணஞ்செய்து, மாசாந்தத்திற்காவேரிஸ்நானஞ்செ யது, சந்தியாவந்தனங் காயத்திரிஜபம்- ஔபாசனம்-பிரம யக்ஞம்- சூரியோபாசனஞ்செய்து, சிவாலயமடைந்து, பிரதக்ஷணநமஸ்காரஞ்செய்து,சந்நிதியிலுட்கார்ந்துசுவாமி யைநோக்கி, த்திரிலோசன- தேவதேவா,மதனாந்தகா-சங்க

ர-அந்தகாந்தகா- ஓங்காராதிமந்திரசொரூபா-அம்பிகா பதே,ஈசானா-ஜபசித்திகரா-திரிசியாதிரிசிய பிரபஞ்சசொரூபா,ஞேயஞான ஞாதுருசொரூபா- கருணைக்கடலே-சிவலோகத்தியாகா-பிரணதார்த்திஹரா- சத்தியோசாதாதி பஞ்சமுகா! என்றுஸ்தோத்திரம்பண்ணி, யடியேனை நரகலோகங்காணாதவண்ணங் காத்தருளவேண்டுமென்று தியானஞ்செய்தார்.

செய்தவுடன் பரமசிவன் நந்திப்பிருங்கியாதி சிவகணங்களுடன் ரிஷபாரூடராய்ப் பிரசன்னமாகி விரசனே! உன்னுடையதோத்திரத்தாலுஞ் ஜபத்தாலும் ஆனந்தமடைந்தோம்; உன்னபீஷ்டத்தைச்சொல்வாயென்றார். அதைக்கேட்டு விரசன்சுவாமி! காஞ்சிதேயத்தனாகியநான் தீர்த்தயாத்திரையாக இவ்விடம்வந்தேன்; வந்தயான் திரும்ப அங்கேபோவதற்கு மனமில்லாதவன்; காஞ்சிதேயத்திலிருக்கின்ற கம்பாநதியை இவ்விடத்திலழைப்பதோடு புத்திரசந்தானமுமளித்து, மரணபரியந்த மிங்குவசித்து, மரித்தபின் முத்தியடையக் கிருபைசெய்யவேண்டுமென்றான். அதைப்பரமபதியானவர்கேட்டுப் பூமியினுள்வழியாகக் கம்பாநதியையழைத்துத் தர்மஸம்வர்த்தனியம்பாள் ஆலயத்தின் வடக்கில் நிலைபெறச்செய்து, விரசனுக்குத் தெரிவித்துமறைந்தருளினார். விரசன் கம்பாநதியில்ஸ்நானஞ்செய்து புத்திரனடைந்துஅப்புத்திரனுக்குப் பிரணதார்த்திகரனென்னுநாமம்வைத்துச் சிலநாளிருந்துமரணமடைந்து சிவலோகமடைந்தான்.பின்பிரணதார்த்திகரன் பஞ்சநதத்திலேயே வசித்து, ஓர்புத்திரனைப்பெற்று, அப்புத்திரனுக்குப் பஞ்ச

தேசானனென்று பெயர்வைத்துச் சிலகாலமிருந்து சிவ லோகபதவியையடைந்தான்.

௰கூ-வது அத்தியாயம்.

முற்றிற்று.

---

## உ௰-வது ததீசிமுதலானமகரிஷிக ள்முத்தியடைந்தஅத்தியாயம்.

சிவபத்தசிகாமணிகளும், வீபூதிருத்திராக்ஷதாரும், வேதவேதாந்தபாரங்கதரும், பஞ்சாக்ஷரஜபமுள்ளவரும், ருத்திரபாராயணஞ்செய்பவருமானததீசிமுதலானமகரிஷி கள் இமயமலைச்சாரலிலிருந்து முத்திஸ்தலந் தெரியத் தபசு செய்தார்கள்; அப்பொழுது பரமசிவன்பிரசன்னமானார். ஆனவுடன் மகரிஷிகளெழுந்து நமஸ்காரஞ்செய்து, தேவதேவா! முத்திசாதனமாயுள்ள சிவஸ்தலத்தைத்திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்றார்கள். அதற்குப்பரமசிவன் ஏ தாசத்தி தன தானத்தால்சம்சாரநாசஞ்செய்யத்தக்கதும்,யா கம்-தபசுஜபம் சித்திக்கத்தக்கதும், கௌதமர்-தூர்வாசர்-சுதாகந்தர்முதலானமகரிஷிகளும், பிரமவிஷ்ணுக்களும், யக்ஷகின்னர-கிம்புருட-வித்தியாதர-கந்தர்வ-சித்தசாத்திய சாரண-அப்சரசுமுதலானவர்களுந்தவசித்தியடைந்த பஞ் சநதஸ்தலத்தையடைவீர்களாயின்தவசித்தியடைந்து முத்தி யடையலாமென்றுசொல்லி மறைந்தருளினார். உடனேம கரிஷிகள் இமயபருவதச்சாரலைவிட்டுப் பஞ்சநதத்தைய டைந்து, காவேரிநதியில் ஸ்நானஞ்செய்து,ஜாபாலஉப

க்ஷேத்திற்சொல்லியபடி வீபூதிருத்திராக்ஷந் தரித்து ஆலயம் வந்துஜப்பியேசுவர மண்டபத்தில் நூறுவருஷகாலமிருந்து, சிவபூஜாதுரந்தரர்களாகத்தவம்செய்தார்கள். அப பொழுதுபரமசிவன் பிரசன்னமாகிவந்தார். வந்தவரைமகரிஷிகள்நமஸ்கரித்துப் பரமபதியைநோக்கித் தோத்திரம பண்ணினார்கள். சிவபெருமான் மகரிஷிகளே! யுங்கள்தவத்தாலானந்தமடைந்தோம். மற்றஸ்தலத்திலனேககோடிகற்பகாலமிருந்துதவஞ்செய்தாலுஞ்சித்தியாவதில்லை; இந்தஸ்தலத்திற்கணப்பொழுது தவஞ்செய்தாற் போதுமானது, அப்படிக்கில்லாமல் நூறுவருஷகாலமிருந்து தவஞ்செய்தமையால் நீங்கள்மோக்ஷ மடைவதற்கையமில்லையென்று சொல்லிமறைந்தருளினார். அதன்பின் மகரிஷிகள் அனேககாலமவசித்துச் சித்திமுத்தி யடைந்தார்கள்.

உ௰-வது அத்தியாயம்

முற்றிற்று.



## உக-வது பரமசிவனுக்குப்பிரணதார்த்திஹரரென்றுபேர்வந்ததற்குக் காரணமுரைத்த அத்தியாயம்.

கிருதயுகத்தில் எல்லாச்சாஸ்திரங்களையுங் கற்றவனுஞ்சகலமந்திரார்த்தங்களுந் தெரிந்தவனும், வேதாத்யஷ்டானந்தவனுந்தவனுமான சிவசன்மனென்ற பிராமணன் க்ஷயரோகத்தாற்பீடிக்கப்பட்டுக் கர்மகாண்ட விதிப்படிஅனேகதருமங்களைச்செய்தும், நிவர்த்தியாகாமல் மிருத்திசனத்

துடன் பஞ்சநதஸ்தலமடைந்து,கௌதமகந்தனரான சநா கந்தரைக்கண்டு, நமஸ்கரித்துச் சுவாமி! நான் வெகுநானா தவியாதியால்வாதனையடைந்து, கர்மகாண்டவிதிப்படிய னேகதர்மங்கள்செயதும், நிவர்த்தியாகவில்லை. தேவரீரெ ன்மேற்கிருபைசெயது, இதற்கோர்நிவர்த்திசொல்லவே ண்டுமென்றான்.சநாநந்தர் ஞானதிருஷ்டியாலிவன் பூர்வ கர்மத்தைத்தெரிந்து,சிவசன்மனே! நீ பூர்வசென்மத்திற்கு ரியகிரகணபுண்ணியகாலத்தில் ஒருவண்டிதானியந்தான ஞ்செய்கிறேனென்றோர் பிராமணனுக்குச் சொல்லிப்பி ன்கொடாததனாற் பிர்மகத்திபாவத்தோடொப்பான இந்த க்ஷயரோகம்வந்தது. இதுமூன்றுசென்மம்விடாது ஆகை யாலிப்பொழுதே சிவாராதனமும்,தினமொன்றுக்குப்பிர ணவத்துடன்பதினாயிரம் பஞ்சாக்ஷரசெபமும், வீதிப்பிர தக்ஷிணநூறும், ஆயிரநமஸ்காரமும், இந்தக்ஷேத்திரதரி னிசெய்தால், வியாதிநீங்குமென்றுசொல்லியருளினர். சி வசன்மன்தன்குருவாகிய சநாநந்தர்சொல்லியவாறேயோ ர்மாதஞ்செய்து, கடைசிநாளிராத்திரி நித்திரைசெய்கின்ற சிவசன்மனருகிற்சிவபெருமான் சந்நியாசியாகவந்து, கை யில்விபூதியெடுத்து சிரசுமுதற்கால்வரையிலுந்தடவி தி ருவடிதீக்ஷைசெய்து, மறைந்தருளினர். சிவசன்மாவிபூ திதடவுங்காலத்திலறியாமல் தீக்ஷைசெய்யுங்காலத்தில் வி ழித்தெழுந்து, தன்றேகம்ரோகமில்லாமற் றங்கம்போலி ருப்பதைக்கண்டு, ஆச்சரியமடைந்துவந்தவர்பரமசிவனே யென்றுதெளிந்து, ஆலயமடைந்து, வேதங்களாலும்ஸ்மிரு திபுராணங்களாலுந்தோத்திரஞ்செய்து, பிரணதார்த்திகர னே! யென்முன்வரவேண்டுமென்றான். உடனேபரமசி

ஸன்பிரசன்னமாகிச் சிவசன்மனே! சென்றஇரவுச் சந்தியா
சியேடமாகவந்து, விபூதிதட்வித்திருவடிதீக்ஷைசெய்தது
நாமே; உன்றுற்பிரணதார்த்திகரனென்றழைத்த பெயரை
யிந்தஸ்தலத்தில் யாந்தரித்துஅந்தநாமத்தினால்நம்மையழை
க்கின்றவர்கள்பாபநாசஞ்செய்வோம். நீ யிந்தஸ்தலத்திற்று
னேவசிப்பாயென்று சொல்லிமறைந்தருளினர். அதன்பி
ன்சிவசன்மாதிருவையாற்றிலேயே நெடுங்காலமிருந்து, ம
ரணமடைந்து, சிவலோகமடைந்தான்.

உக-வது அத்தியாயம்.

முற்றிற்று.



## உஉ-வது சர்வவிஜயனேவதைத்த அத்தியாயம்.

இரணியாசுரன் பேரனும், பிரகலாதன்புத்திரனுமா
ன சர்வவிஜயனென்னுமசுரன்தான் எல்லாவுலகத்திற்குமதி
பதியாகவேண்டுமென்று, இமயபருவதச்சாரலிலிருந்துபிர
மதேவனைநோக்கித்தவஞ்செய்தான். பிரமதேவன் அவன்
றவத்திற்கிரங்கி அம்சாரூடனாகப்பிரசன்னமானார். உட
னேயவ்வசுரனெழுந்து நமஸ்கரித்துநின்று சுவாமி! பதினா
ன்குலகங்களிலுமுள்ளவர்களாலும்மரணபஜயமடையாதவரந்
தரவேண்டுமென்றான். அவ்வாறேதந்தோமென்று சொல்
லிப்பிரமதேவன் மறைந்தார். உடனே யிமயபருவதத்தை
விட்டுத்தன்னகரத்தையடைந்து, சொர்க்கலோகத்தை நெ

பிக்கவேண்டுமென்று தன்மந்திரிகளுடனாலோசித்துப்பதி னாயிரலக்ஷம்யானை, கோடிலக்ஷங்குதிரை, கோடிலக்ஷந் தேர், கோடிலக்ஷம்பதாதியுடன் புறப்பட்டு இந்திரலோகம டைந்து நான்குவாயிலும்வளைந்துகொண்டார்கள். அதை யிந்திரனறிந்து தன்சேனைகளுடன் யுத்தத்திற்குவந்திருதி றச்சேனையுங்கலந்து போர்செய்யும்போது, சர்வவிஜயன் குந்தாயுதமெடுத்துத் தேவர்கூட்டத்திற்குட்புகுந்து, அடி த்தான். அதற்காற்றுமற்றேவர்கள் இந்திரனைநோக்கி மு றையிட்டார்கள். இந்திரன்அக்கினியைநோக்கி அக்னி தேவா! நீ சீக்கிரங்கவசம்பூண்டு, இரதமேறிச்சென்று, சர் வவிஜயனைவிஜயஞ்செய்து, வருவாயென்றுசொல்லினன். உடனே அக்கினிதேவன் இரதமேறியுத்தகளத்திற்சென்று சூலாயுதத்தையெடுத்துப் பதினாயிரமசுரர்களைக்கொன்று சர்வவிஜயனுக்கெதிர்போகும்பொழுது, சர்வவிஜயன் க ண்டு ஒருகதாயுதத்தையெடுத்து, அக்கினிதேவன்றலையிற் றாக்கினன். தாக்கினவுடன்அக்கினிதேவன் வாயால்ரத்தத் தைக்கக்கிக்கொண்டு, பூமியில்விழுந்து மரணமூர்ச்சைய டைந்தான். உடனேயசுரன் தேவர்கூட்டத்துட்புகுந்துதா க்கினன்; அதைச்சகிக்கமுடியாமற் றேவர்கள்முறையிட் டார்கள். அதையிந்திரன்கேட்டுவாயுவைநோக்கிநீஅசுரனை ச்சம்மாரஞ்செய்துவாவென்றான். வாயுதேவன்ஊழிக்காற் றைப்போற்போர்க்களத்தினுட்புகுந்து, ஐயாயிரம்அசுரர்க ளைக்கொன்றுதிரிகின்றசமயத்தில் அசுரன்வாயுவைச்சத்தி யாயுதத்தாலடிக்க, வாயுதேவன்மறைந்தோடிப்போய்விட் டான்; அதன்பின்எமனையனுப்பினன்.

எமன்புகுந்துயுத்தம்பண்ணுங்காலே அசுரன் இருப்பு லக்கையைச் சுழற்றியடிக்க அதற்காற்ருமல் எமனேடி யொளித்தான். அதன்பின் வருணனையனுப்பினன்.

வருணன்வந்துயுத்தஞ் செய்யும்பொழுது அசுரனபரி காயுதத்தாலடிக்க அதற்காற்ருமற் சமுத்திரத்துளோடி யொளித்தான். அதன்பின் இந்திரன். குபேரன், அஷ்டவ சுக்கள், சததமருதத்துக்கள், கெந்தருவர் முதலானஅனேகா களைக்கூட்டமாகவனுப்ப அவர்கள்வந்து யுத்ததத்திலுட்புகு ந்து யுத்தம்பண்ணுகையில் அசுரன் தன்சேனைகுறைவதை ககண்டு, அதிககோபததுடன்உலக்கையைகையிலெடுத துக்கிறுகிறென்று சுழற்றியடித்தான். அதைபபொறுகக முடியாமல் வந்தவாகள் திசைகள்தோறு மோடியொளித தார்கள்; பின்தேவேந்திரன் ஏகனுகநிற்பதை யசுரன்கண டு இந்திரன்சமீபத்திற்போயினன். போனவுடன் இந்திரன் வச்சிரபாணியாக அயிராவதத்திலேறியனேகமசுரர்களைக கொன்று, தன்கையிலிருந்த வச்சிராயுததததாலஅசுரன்றலை யிலடித்தான். அந்தஅடியினுற் சர்வவிஜயன் இரண்டுநா ழிகைபளவு மூர்சசையடைந்து பூமியிற்கிடந்து பின்னெ ழுந்துகையைமடிதது இந்திரன்மார்பிற்குத்தினன். குத்தி னவுடன் இந்திரன்யானையினின்றுங் கீழேவிழுந்து காயம டைந்து மூர்சசையையடைந்தான். அத்தருணத்தில் மாத லி மாயையால்மறைத்து இந்திரனைத்தூக்கிக்கொண்டு அ மராவதியடைந்தான். அப்பொழுதே சர்வவிஜயன் அம ராவதிப்பட்டணத்துட்புகுந்து, தேவமாதர்களைச்சிறைபி டிப்பதோடு காமதேனு கற்பகவிருக்ஷமுதலான இந்திர ன்செல்வங்களையெல்லாங் கொள்ளையடித்துக்கொண்டு

தன்னகரமாகிய இரணியபுரத்தையடைந்தான். இந்திரன் இறந்தவர்கள்போக இருந்தவர்களோடுசத்தியவுலகத்தையடையத்தேவருலகம்பாவருலகமாயிற்று. சத்தியலோகத்தையடைந்தஇந்திரன், தக்ஷப்பிரசாபதி-நாரதர்- சனகர்-சனந்தனர்-சனற்குமாரர்-சனச்சுசாதர் முதலானயோகிகள் சூழச்சரஸ்வதி சமேதராகவீற்றிருந்த சகலலோக சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமதேவரைக்கண்டு நமஸ்கரித்தெழுந்து நின்று சுவாமிகமலயோனியே! பிரகலாதன்புத்திரனான சர்வவிஜயன் தாங்கள்கொடுத்த வரத்தின்பலத்தால் மிகுந்த கருவங்கொண்டு, தேவர்கள்-பிராமணர்கள்- மகரிஷிகள்முதலான பெரியோர்களுக்குச்சகிக்கமுடியாதவிடுக்கண் செய்வதுந்தவிர என்னையும் அமராவதிப்பட்டணத்தைவிட்டுத்துரத்திவிட்டான; நான்வசிப்பதற்கோவிடமில்லை, யடியேனையிரக்ஷித்தருள வேண்டுமென்றான். அதைக்கேட்டபிரமதேவர் இந்திரன்முதலான தேவர்களைப்பார்த்து பூமியிற் பஞ்சநதமென்கின்ற சிவக்ஷேத்திரமிருக்கின்றது. அதில்வசிப்பவர்களுக்குச்சர்வசத்துருநாசமும், சகலரோகநிவாரணமும், சம்சாரநிவர்த்தியும், செனனமரண பயக்கிலேசநாசமுமுண்டாகும். அன்றியும்பரமசிவன்காலபைரவரற்றுஷ்டநிக்கிரகஞ்செய்கின்றார். அசுரர், இராக்ஷதர், பிசாசு, துஷ்டக்கிரகங்களும், அந்தவிடத்திலணுகக்கூடாது. ஆகையால, அந்தக்ஷேத்திரத்திலதேவரோடு நீ வசிப்பாயேல் அதையறிந்துசர்வவிஜயன் அங்குவந்து அனுசாரஞ்செய்வான். அப்பொழுது காலபைரவரால் மரணத்தையடைவானென்றுசொல்லினார். சொன்னவுடன் இந்திரன்றேவரோடு திருவையாற்றையடைந்து, சிவபூஜாது

ந்திரனாகஸ்ரீருத்திரத்தால் ஸ்தோத்திரம் பண்ணினான். பரமசிவன்பிரசன்னமாகி இந்திரனே! நீ பயமடையாதே இந்தஸ்தலத்தில் பாவிகளாகியவிருக்ஷங்களுக்குக் கோடேறியாகநமதுகிங்கரனாகியகாலபைரவரிருக்கிறார். அவரால் சர்வவிஜயன் மரணமடைவான். என்றுசொல்லிமறைந்தருளினார். பிரமதேவர்-இந்திரன், பஞ்சநதத்தையடைந்தபின் நாரதரைநோக்கி நாரதரே! நீர்தீர்த்தயாத்திரைக்குப்போவதுபோற்பூமியையடைந்து, சர்வவிஜயனைக்கண்டு, இந்திரன்பஞ்சநதத்திலிருக்கிறானென்றுசொல்லி, அந்தவிடத்திற்குசர்வவிஜயன்போகும்படிசெய்துவாருமென்றார். அவ்வண்ணமேநாரதர்பூமியில்வந்து, அனேகதெய்வநதிகளில்ஸ்நானஞ்செய்து, திருவையாற்றையடைந்து, காவேரிஸ்நானஞ்செய்து, ஆலயத்துட்புகுந்து, பரமசிவனைத்தெரிசித்து, ஸ்தோத்திரம்பண்ணினார். அப்பொழுதுபரமசிவன்பிரசன்னமாகி நாரதரே!உமக்குவேண்டியவரங்களைப் பெற்றுக்கொள்ளுமென்றார். நாரதர் ஐயனே!தேவரீர்பரத்தெரிசனத்தையன்றி படியேனுக்குவேறொன்றும்வேண்டுவதில்லையென ப் பரமசிவன்மறைந்தருளினார். நாரதர்திருக்கோயிலைவிட்டு வெளியில்வந்து, திருப்பழனத்தையுத்தேசித்துப்போகுந்தருணத்தில் இந்திரன்நாரதரைக்கண்டு நாரதரே!அசுரராற்சொர்க்கத்தைவிட்டுப் பூமியில்வாசஞ்செய்வதெப்பொழுது நீங்குமென்று கேட்க நாரதர் பயப்படாதேவிரைவில் அசுரர்கள் நாசமடைவார்களென்று சொல்லித்திருப்பழனத்தையடைந்து, ஆபத்சகாயரைத் தெரிசித்து' த்திருச்சோற்றுத்துறையையடைந்து, ஓதனேஸ்வரரைத்தெரிசித்து, த்திருவேதிகுடியடைந்து' ஆதிவே

தேசுவரரைத்தெரிசித்து, திருக்கண்டியூரையடைந்து, ண்டீஸ்வரரைத்தெரிசித்து, த்திருப்பூந்துருத்தியையடைந்து. புஷ்பவனேசுவரரைத் தெரிசித்து, த்திருநெய்த்தானமடைந்து, கிருததாரணேஸ்வரரைத் தெரிசித்து, த்திருவானைக்காவையடைந்து, செம்புநாதரைத்தெரிசித்து, த்திருசிராமலையையடைந்து, தாயுமானவரைத்தெரிசித்து, க்கிழக்கேதிரும்பிச்சுவாமிமலையையடைந்து, ஸ்வாமிநாதரைத் தெரிசித்து, கும்பகோணமடைந்து,கும்பேஸ்வரரையும்உமாபாகேசுவரரையுஞ்சோமநாதரையுந்தெரிசித்து, மத்தியார்ச்சுனத்தையடைந்து, மகாலிங்கேஸ்வரரைத்தெரிசித்து,இராமேஸ்வரந்தெரிசிக்கவேண்டுமென்று, இராமேஸ்வரத்துக்குச்சமீபத்தில்போகையில் சர்வவிஜயனைக் கண்டு நான்அவனருகுபோய்,ச்சர்வவிஜயனே! நீ எங்குபோகின்றுயென்றுகேட்டார். கேட்டவுடன் நாரதரைநமஸ்கரித்து, என்சத்துருவாகிய இந்திரனோடு தேவர்களையுந்தேடிப் போகின்றேனென்று சொல்லினன். அதைக்கேட்டுநாரதர்சிரித்துத்தேவர்கள் திருவையாற்றிற் காலபைரவர்காவலால் நிர்ப்பயங்கராக வசிக்கின்றார்கள். நீயவ்விடம்போனாலுன்னைக்கண்டு, காலபைரவர் ஓடிப்போவார். நீசீக்கிரமங்குபோவாயென்று சொல்லிவிராமநாதரைத்தெரிசித்து, அசுரன்பஞ்சநதத்தை யடைவதற்குமுன் நான்பஞ்சநதத்தையடைந்து, பரமசிவனைஸ்தோத்திரத்தாற் பிரத்தியக்ஷமாகவரவழைத்து, ஸ்வாமி!சர்வவிஜயன் இவ்விடத்திற்றேவர்களிருக்கிறார்களென்று மிகுந்தகோபத்துடன் வருகிறான். அவனைக்கொன்று தேவர்களைக்காத்தருளவேண்டுமென்றார். பரமசிவன்நாரதரே! உம்முடையவேண்டுதலின்படியவனைக் கொன்று, தேவர்களைக்காத்தருள்வோமெ

று சொல்லி, க்காலபைரவரையழைத்து, பைரவரே! சர்வவிஜயனென்னுமசுரன் தேவர்களைக் கொல்லவிருக்குவருகின்றான். அவனைக்கொன்று தேவர்களைக்காத்தருளவேண்டுமென்று சொல்லிமறைந்தார். அதன்பின், சர்வவிஜயன் இலக்ஷங்கோடி சேனையுடன் திருவையாற்றை யடைந்து நாலுபக்கமும் வளைந்து, அனேக பாணங்களை யெடுத்துத் தேவர்கள்மேலும் பிராமணாள்மேலும் ரிஷிகள்மேலும் வருஷித்தான். அதைப்பொறுக்கமுடியாமற் காலபைரவரை நோக்கிமுறையிட்டார்கள். காலபைரவர்சூலாயுதத்தைக் கையிலெடுத்துச் சுழற்றியசுரர்சேனைமேல்வீசினார். சூலமானது அசுரர்சேனையுட்புகுந்து இரண்டுகடிகைக்குள் சர்வவிஜயனோடுசேனைகளையுங் கொன்றுதிரும்பியது. அதன்பின் இந்திரன் பரமசிவனைவணங்கி விடைபெற்றுத் தேவர்களோடு அமராவதிப்பட்டணமடைந்து, வாழ்ந்திருந்தான்

உ௰-வது அத்தியாயம்

முற்றிற்று.



## உ௰-வது சுசிகரப்பிராமணனுக்குக்கலிநீங்கியதையுரைத்த அத்தியாயம்.

அனவதகியாதேவி நாதசன்மாவை வணங்கிச் சுவாமி! கலியின்சுபாவத்தையும் அதைநாசஞ்செய்யும் விதத்தையுஞ்சொல்லியருள வேண்டுமென்றுகேட்க, நாதசன்மாபெண்ணே! நாலாவது யுகமாகியகலியுகத்திற்கோடி ஜனங்களி

லொருவன் தருமவானாகி, ஆபாச தருமங்களைச் செய்தல், ஆயிரத்திலொருவன் அவுபாசனம் சந்தியாவந்தனம் வேதாத்தியயனஞ்செய்தல், தருமவானைக் கண்டசூயைப்படுதல், விரதம், ஆசாரம் எக்கியம், குளம்வெட்டல் இவைகள்விடுத்தல், பொருமை, டம்பமித்தமாசாரமாயிருத்தல், கொஞ்சம்வேதசாஸ்திரங்கற்றகருவத்தாற்பாவஞ்செய்தல், கோட்சொல்லல், காரியமுடியுமளவுஞ்சினேகனாகவும் பந்துவாகவுமிருந்தல்மாதர்முயக்கிலாசை, சிராத்தம்விடுதல், பிதுர்துரோகம், புத்திர துரோகம், மனையாள்துரோகம், நாயகன்துரோகம், குருத்துரோகம், சிவத்துரோகம், நம்பிக்கைத்துரோகம், இரண்டாசௌசம்விடுதல். பிராமணர்சூத்திராகட்குத்தாசராகுதல், குதிரை, யானை ரதமுடையவன், க்ஷத்திரியன், சண்டாளன். சூதகன், நாமதாத, சூத்திரன், சாதி கெட்டவன் இவர்களைத்தொட்டு ஸ்நானஞ்செய்யாதிருத்தல், சங்கு சக்கரத்தாற்சூடுபடுதல், சங்கு சக்கரச் சின்னமுடையவர்களுடன் கலந்து விவாகஞ்செய்தல், அவர்களுடன் கூடி அத்தியயனஞ்செய்தல், நான்ஞானுயர்ந்தவனென்றுசொல்லல், அதர்ம இச்சையால், அற்பாயுளாக மரணமடைதல், நான்தவருணத்தாருஞ்சனகராசரிடாதல், காமக்குரோத அகங்காரத்தால்வயிரங்கொண்டதுபிறர்க்குவருத்தஞ்செய்தல், உத்தமர்கள்நீசராகுதல், நீசர்கள்உத்தமராகுதல், அரசர்கள்திரவியஆசையடைந்து தருமம் செய்வதுபோற்றருமத்திரவியத்தைக் கவர்தல், அபகாரஞ்செய்துபிறர்க்குக் கெடுதி விளைப்பவரோடுகலந்திருத்தல், ஆசாரமில்லாதவனையும், வேதங் கற்காதவனையும், சிராத்தத்திற்பிராமணனாகவைத்தல், சிஷ்டப்பிராமணனுக்குக்கொடாதிருத்தல், குலமாதர்கள்வேசிகளைப்போல் அலங்கரித்துக்கொள்ளல், ஔஷதியற்படலத்தைக்கொடுத்தல், மேசஞ்

சுருக்கமாகவருஷித்தல், பால்நிமித்தமாகப்பசுவைப்பரலன ம்செய்தல்,நதிதீரங்களிற்பயிரிடுதல், தருமத்திற்கும்,மூடாக ளுக்கும், சாதுக்களுக்கும், விதவைகளுக்கும், பாலர்களுக் கும்அபகாரஞ்செய்து திரவியஞ்சம்பாதித்தல்; டம்பநிமித்த ம்பிதிர்எக்கியமுதற் பஞ்சஎக்கியங்களும் சோமாதியாகங்க ளுஞ்செய்து அபாத்திரற்குத்தானங்கொடுத்தல்,சவுசம், ஸ் நானம்விதிப்படி செய்யாதிருத்தல், அகாலத்திற்கருமஞ்செ ய்தல், குயுக்திபரல்வேதநிந்தனை விப்பிரநிந்தனைநிநிந்தனை பதிவிரதா நிந்தனை, பரமசிவனிடத்திற் பக்தியில்லாமல் காட்டேரி, கருப்பன், முதலான துர்த்தேவரிடத்திற் பக்தி செய்தல், தேவார்ச்சனைபண்ணுமிறவரைப்பரிகாசஞ் செய் தல்,இராஜசேவகர்கள்திரவியநிமித்தம் பிராமணுளைவாதை ப்படுத்தல்,தானம்,எக்கியம்,செபம் இவைகளால்வரும்பல னைவிற்றல் சண்டாளரிடத்தில் வாங்கியுண்ணல், சூத்திரா ன்னம்புசித்தல், தாசி-விதவையிவர்களுடன் புணர்தல்.கலி யுகமுதற்பாகத்தில் மாதர்கள்கணவனைநிந்தித்தல்,காலாம்பா கத்திற்கடவுளை மறத்தல் முதலானகெடுதிகளுண்டாகும். இ ந்தக்கலியுகத்திலாதிகாலத்தில் வேதவேதாங்க பாரங்கதனு ம்,தர்மசாஸ்திரமர்மத்தையறிந்தவனும்,வருணாசிரமதருமந்தவறாதவனுஞ்சிவத்தியானத்துடன் சிவபூஜாதுரந்தரனு ம்,விபூதிருத்திராக்ஷதாரனும்,பாவமில்லாதவனுமானசுசிகர னென்னும்பிராமணன்கிருஷ்ணன் வைகுந்தமடைந்தபின் கலிவாதையதிகரித்தெந்தவிடங்களிலும் பாவிகளாகவிருப் பதைக்கண்டு இந்தயுகதர்மம் நம்மையும்பற்றி நரகமடை யச்செய்யு மென்று பயந்துபரமசிவனைச்சரணமடைவோ மென்று தன்னிடம் விட்டுத் தீர்த்தயாத்திரை செய்துவரு

ங்காலத்திற்றனக்குப் பின்னாகக்கலிபுருஷன் கருநிறத்தையு
டையவனாய்க்கையிற்கத்திபிடித்துக்கொண்டுதன்னைத்தட்
டுவதைக்கண்டுபயந்துபஞ்சாக்ஷரமந்திரத்தைச்செபித்தான்

அந்தஜெபசத்தத்தைக்கேட்டுக்கலிபுருஷன்மறைந்
தான. மறைந்தவுடன் இன்னுமவனம்மைத்தொடர்ந்து வ
ருவானென்று ஒருவிருக்ஷத்தினடியிலுட்காந்து திரும்பி
ப்பார்த்தான். பார்த்தபொழுது நெடுந்தூரத்திற் கலிபுருஷ
ன்வருவதைக் கண்டுகீழேவிழுந்துமூர்ச்சையடைந்து தெ
ளிந்துமுன்பஞ்சாக்ஷரமந்திரத்தால்மறைந்தவன் இப்பொ
ழுதுகண்ணுக்குத்தோன்றுகின்றான். இன்னுமந்தப்பஞ்சா
க்ஷரமந்திரத்தையேசெபிப்போமென்றுதியானத்துடன்செ
பிக்கக்கலிபுருஷனைக்காணாதாகினான்அப்பொழுதாகாயத்
தில்ஓ பிராமணனே! கலிபுருஷனுன்னைப்பிடிக்கவருகிறான்.
அன்றியும்பஞ்சநதக்ஷேத்திரந்தவிர மற்றெல்லாவிடங்களி
லும்கலிபுருஷன் வியாபித்திருக்கின்றான். ஆகையால்நீசீக்கி
ரத்திற்பஞ்சநதத்தை யடைவாயென்று அசரீரியுண்டான
து. உடனே பஞ்சாக்ஷரசெபத்துடன் பஞ்சநதத்தை
யடைந்து திரிகாலம் காவேரிஸ்நானஞ்செய்து வேதமாதா
வாகியகாயத்திரி மந்திரத்தை ஆயிரத்தெட்டுருச்செபிப்ப
தோடுபஞ்சாக்ஷர மந்திரமுஞ்செபித்து பிரதக்ஷண நம
ஸ்காரத்துடன் பஞ்சநதீசனைத்தெரிசித்து ருத்திரமந்திரத்து
டன் ருத்திராபிஷேகஞ்செய்துசதா ருத்திரமந்திரத் தாற்
றோத்திரம்பண்ணினான். பரமசிவன்பிரசன்னமானார். சுசி
கரன்நமஸ்கரித்தெழுந்துநின்று சுவாமி! என்னைக்கலியனு
காது காத்தருளவேண்டுமென்றான். சுசிகரனே! யெம்மிடத்
திலுள்ளபயத்தாற்கலிபுருஷனிந்தஸ்தலத்தில் வரமாட்டான்

அந்தப்பயமுனக்கில்லை. ஐப்பியேசுரபதி, பஞ்சநதீசா, பிரணதார்த்திகரா! வென்றுநீசெபித்தாற்றூர்ச்சொர்ப்பனம்துஷ்டக்கிரகம், பூதப்பிரேதப்பிசாசம், விஷம் ஆபிசாரம, தாரித்திரம், துக்கமிவைகள்நாசமாகும். அர்த்தோதயம் மகோதயம் சூரியசந்திர கிரகணம் இந்நாட்களிற் பஞ்சநதகாவேரிஸ்நானஞ்செய்பவர்கள் பரதிரவியாபகரம். இம்சை பரதாரகமனம் முதலான காயிகபாதகத்தையும்; கோட்சொல்லல், மாறுபடப்பேசல், குரூரமாகச் சொல்லல், ஆன வாசிகபாதகத்தையும்; பரதிரவியதியானம், பிறருக் குநஷ்டதைதயெண்ணல், வீணகங்காரப்படுதல், ஆன மானசிக பாதகத்தையும்போக்கி க்கோடி கோதானஞ் செயதபலத்தையடைவார்கள். அன்றியுங்காவேரி ஸ்நானங் கங்காநதியிலு நூறுடங்கு அதிகப்பலத்தையுஞ் சமுத்தபூமிதானபலத்தையுங்கொடுக்கின்றது. பஞ்சநதக்ஷேத்திரத்திலவஸ்திரம் தானியம், இரணியம், இவைமுதலாகிய தானங்கள் செய்தவர்கள், ஆயுள்விருத்தி தனதானியசம்பத்துபுத்திரபௌத்திர சம்யுத்தராக அனேகசௌக்கியத்தையடைந்து, பரத்திற்சிவலோகசாயுச்சியத்தை யடைவார்கள். வித்தியாதவசுவிரதமுள்ளபிராமணன் புண்ணியகாலங்களில் தானபாத்திரனுவான். மகரசங்கிராந்திமுதலாகிய புண்ணியகாலங்களிற்காவேரிஸ்நானஞ்செய்து, நம்மைதெரிசித்தவர்கள் மோக்ஷமடைவதுசத்தியம்; ஆதலால் நீயிந்தஸ்தலத்தில்வசித்துப்புண்ணியகாலங்களிற் காவேரிஸ்நானஞ்செய்து, நம்மைத்தெரிசித்தால்மோக்ஷமடைவாயென்றுபரமசிவன்சொல்லிமறைந்தருளினார். அவ்வண்ணமேசுசிகரன்மரணபரியந்தந்திருவையாற்றில்வசித்துமோக்ஷமடைந்தான்.

உக-வது அத்தியாயம்

முற்றிற்று

# தருமநாசன் சாரூபபதவியை யடைந்த அத்தியாயம்.

திரேதாயுகத்திற்கோதாவிரிதீரத்தில் முற்கலவம்சத்திற்பிறந்ததருமநாசனென்றபிராமணன்வருணாசிரமதர்மத்தைவிட்டு, விலக்கானகாரியங்களைச்செய்யத்துவந்தான். அவனுக்குத்தர்மசொரூபியாகவோர்புத்திரன்பிறந்தான். அப்புத்திரனுக்குத் தருமசேதுவென்று பெயரிட்டுச் சாதகர்மமுதல் உபநயனபரியந்தம்வேறோர்பிராமணனாற்செய்வித்து, விவாகமுஞ்செய்வித்தான். பின்தருமசேதுபுண்ணியகீர்த்தியென்றும்பிதுர்க்கடன்விமோசனென்றும் பிரசித்தியடைந்தான். அக்காலத்திலவன்தந்தையாகியதருமநாசன்மகோதரவியாதியாற்பீடிக்கப்பட்டுத் தான்சீக்கிரத்தில்மரணமடைவேனென்று நிச்சயித்து,ப்புத்திரனை யழைத்துத்தருமசேதுவே! நான்சென்னமுதல்வருணாசிரம தருமத்தைவிட்டுப் பாவத்தொழில்களிற் பிரவேசித்துப் பாவஞ்செய்ததமையால்; நரகமடைவேனென்றென்னிருதயம் நடுங்குகின்றது. நான்நரகமடையாமற்செய்வதுன்கடமையென்றனன். அதைக்கேட்டதருமசேது ஐயா! பூர்வத்திற்பிதுர்வாக்கியத்தாற் பரசுராமன்தன்றாயைக்கொன்றார். இராமன்காட்டையடைந்தார். யயாதிச்சக்கரவர்த்தியின்வயோதிகத்தைஅவன்புத்திரனாகியபூருமகாராஜா வாங்கிக்கொண்டுதன்யௌவனத்தைத் தந்தைக்களித்தான். பீஷ்மர் தன்றந்தைசந்தனுமகாராஜா மச்சகந்தியைக்கலியாணஞ்செய்து, சுகத்தையடையும்பொருட்டுத் தான்பிரமசரியத்தையடைந்தார். ஆதலாற்றந்தைவாக்கிய பரிபாலனஞ்செய்யவேண்டியது புத்திரர்கடமைதான்; நான்செய்யவேண்டியதைச்சொல்

வேண்டுமென்றான். தருமநாசன் புத்திரன் சொல்லியதிற் சந்தோஷமடைந்து, தருமசேதுவே! நான் மரணமடைந்த பின் எனனுடைய அஸ்திகளையெல்லாவற்றையும் ஸ்ரீராமசேதுவில் ஸ்தாபனம்பண்ணினால் எனக்குத்தம ஜென்மங்கிடைக்குமென்றான். தருமசேது தந்தைசந்தோஷிக்க அவ்வாறே செய்கிறேனென்று சொன்னான். சிலநாட்சென்ற பின் மகோதரவியாதியாற் றருமநாசன் மரணமடைந்தான் அவன்மனையாளும் அனுமரணமடைந்தாள். தருமசேது தாய்தந்தையிருவரையுந் தகனம்பண்ணி, அந்தியேஷ்டிமுதல் சவுண்டிகரணபரியந்தஞ் செய்ததுந்தவிர வருஷாப்திகபரியந்தஞ் சேஷகருமங்களையுஞ்செய்து, இருவர்அஸ்திகளையும் ஓர்பெட்டியில்வைத்தெடுத்துக்கொண்டு சேதுவையுத்தேசித்து,நியமத்துடன்புறப்பட்டு வருங்காலையிற்பஞ்சநதமடைந்து, சங்கற்பபூர்வமாகக் காவேரிஸ்நானம் பண்ணிக்ஷேத்ரசிராத்தம் தர்ப்பணமுதலியவைகளுஞ் செய்துசிவாலயமடைந்துபிரணதார்த்திகரரைத்தெரிசித்துப்பிரதக்ஷிணநமஸ்கார ஸ்தோத்திரத்துடன் பஞ்சாக்ஷரஞ் செபித்து, அன்றைத்தினமுபவாசமிருந்து; மறுநாட்பாரணை செய்து, தன்னாத்மாவைக் கிருதார்த்தமாகவெண்ணி; ஸ்தலமான்மியத்தையுங் காவேரிமான்மியத்தையும் விசாரித்தங்கெழுந்தருளி,த் துர்வாசர்-கௌதமர்-சதாநந்தர்-வசிஷ்டர் முதலான ஆறுகோடிமகரிஷிகளும், அநேகஞ்சந்நியாசிகளும், வானப்பிரஸ்தர்களும், பிரமசரியஆச்சிரமத்தர்களும். சோமயாகமுதல் மற்றயாகங்களையுஞ்செய்துமுடித்த தீக்ஷிதர்களுந் தவஞ்செய்வதைக்கண்டு, நாமுமிந்தஸ்தலத்திலொருமாதம் வசிப்போமென்றொருவீட்டில் அஸ்

திட்பெட்டியைவைத்துச் சுயம்பாகத்தாலேகவாரம் போச னஞ்செய்து, பஞ்சாக்ஷரசெபத்துடன் வசிக்கின்ற நாள்க ளில் ஓர்நாள்நித்திரைசெய்கையில் சொப்பனத்திற்றன்பிதா வைச்சந்திரார்த்த சேகரனாகவும், சடாதாரியாகவும், முக்க ண்ணனாகவும், விபூதிதரித்த சரீரமுள்ளவனாகவுங்கண்டு எ முந்துநமஸ்கரித்துத் தருமநாசனை நோக்கி ஐடனே! யுனக் கிந்தசிவசொரூபம் வந்தகாரணத்தைச் சொல்லவேண்டு மென்றான்.

தருமநாசன், நானிறந்தபின் எமதூதர்கள் இருப்புப் பாசங்களாற்கட்டி, யெண்பத்தாறுயிரம் யோஜனைதூரமு ள்ள பயங்கரமான எமமார்க்கத்திற் கொதித்த சேற்றிலும் கொதித்தமணலிலும், கல்லிலுமுள்ளிலும் எமதூதர்களால் முசலாயுதத்தாலடித்திழுத்தும், கல்மழையாலும் நெருப்பு மழையாலும் வாதையடைந்தும் போகையில், பத்துநாட் சென்றுபதினொராநாள் எமலோகத்திற்கருகே போகையி ற் பாவிகளாற்கடக்கக்கூடாத வைதரணியென்னுமொருப் பாற்றைக்கண்டேன். அதிலிறங்கென்று எமபடாள்சொ ன்னதைக்கேட்டுப் பயந்தேன்; உடனேஎமதூதர்கள் என் னையதிற்றள்ளினார்கள்; நானதிலொருநாள்முழுதுங் கிடந் துதத்தளித்தேன். பனிரெண்டாநாள் பசுவொன்றுவந்து தருமநாசனே! நீ வைதரணிநதியைத் தாண்டவேண்டி யுன்புத்திரனாற்பனிரெண்டாநாள் சவுண்டிகாரணத்திற் ப்பி ராமணனுக்குத் தானங்கொடுத்தபசு நான்; என்வாலைநீபி டித்துக்கொள்ளு, உன்னைக் கரையேற்றுகிறேனென்று சொல்லிற்று. அவ்வாறேநான்வாலைப்பற்றிக்கொண் டே ன். உடனேயந்த வைதரணிநதிகுளிர்ந்து முழங்காலளவா

னது. கரையேறினவுடனெமதூதர்களென்னையெமன்முன் கொண்டுபோயவிட்டார்கள். எமன் என்பாவகர்மத்தைத் தெரிந்து, என்னை நரகத்திற் பதனம்பண்ணிவைக்கும்படி யெமதூதர்களுக்குத் திரவுபண்ணினான். அப்படியே யெமதூதர்கள் நரகத்திலிருத்தினார்கள். நானதிலொருவருஷமிருந்து வாதையடைந்தேன்: ஒருவருஷமானபின்னரகஞ் சுவர்க்கலோகம்போலானதுமன்றி யிந்தச்சரீரத்தையுமடைந்தேன். அடைந்தவுடன்தேவர்கள்புஷ்பமாரிபொழிந்தார்கள். அப்பொழுது எமதூதர்களென்னருகில்வந்து நமஸ்காரஞ் செய்தெழுந்து, அஞ்சலிபாத்தத்துடனின்று, பிராமணோத்தமனே! நீ தவசீலனாயினை- உன்னைநரகத்தினின்றும்வெளிப்படுத்தி மரியாதையாகத் தன்னிடமழைத்துவரும்படியெமன் எங்களுக்குத்திரவுகொடுத்தார்; ஆகையால்வரவேண்டுமென்றார்கள். நானவர்களோடு எமனருகில்வந்தேன். வந்தவுடன் எமனென்னைக்கண்டெழுந்து அர்க்கியபாத்தியம் ஆசமனமுதலான உபசாரத்துடனமஸ்காரஞ்செய்து பிராமணோத்தமனே! யுன் புத்திரன் தருமசேது உன்னஸ்திகளை யெடுத்துக்கொண்டு சேதுக்குப் போனவன் திருவையாற்றிலொருமாதம்வசித்தான். அங்கவன்வசித்தபுண்ணியத்தால் நரகவாதைநீங்கிவிட்டது; இனிசிவலோகமடைவாயென்று சொல்லியதோடு, உன்புத்திரனுக்கு நடந்தயாவுஞ் சொல்லவேண்டுமென்றான். அதைக்கேட்டுநானிங்குவந்தேன். நீசேதுக்குப்போகவேண்டியதில்லை, யென்னைச்சிவலோகத்துக் கனுப்பும்போது எமன்றன்றூதர்களையழைத்து, வேறெங்கேயாவதும்ரித்தவர்கள் தலைமயிராவது, அஸ்தியாவது, அல்லதுசாம்பலாவ

து திருவையாற்றி லிரண்டுகெடிகையளவு தங்குமாயின்அ வர்கள்சிவலோகபதவியை யடைவார்கள்; அவர்களிடத்தி ல்நீங்கள்போகக்கூடாதென் றுத்திரவுதந்தான். பார்வதிரூ பத்தைப்பெற்ற வுன்றுயுஞ்சிவரூபத்தைப்பெற்ற யானும் தேவவிமானத்திலேறிச சிவலோகம்போகின்றேம். நீசுக மாகவாழக்கடவா யென்றதையுணர்ந்து, தருமசேது நித்தி ரைதெளிந்தெழுந் தாச்சரியமடைந்து, காவேரிக்குப்போ ய் ஸ்நானம்பண்ணி நித்திய கருமங்களைமுடித்துச்சிவாலயம டைந்து, சிவதெரிசனஞ்செய்து, அங்கெழுந்தருளியிருக கின்ற தூர்வாசர்-கௌதமர்-சதாநந்தர்-வசிஷ்டர்-அத்திரி- வியாசர்-சுகர்- பராசரர்- கண்ணுவர்- மேதா - திதி- சதகு- விசுவாமித்திரர்- பிருகு முதலானமகரிஷிகளைககண்டு நம ஸ்கரித்துத்தானிராத்திரிக்கண்ட சொப்பனத்தைச்சொன் ஞன்

அதைக்கேட்ட மகரிஷிகளாச்சரியமடைந்துன்றுய்தந் தையஸ்திப்பெட்டியைக கொண்டுவாவென்றார்கள். அவ் வாறேயவன் அஸ்திப்பெட்டியைக் கொண்டுபோய மகரி ஷிகள்முன் வைத்தான்; மகரிஷிகள் அதைததிறவென்றா கள். தருமசேது அஸ்திப்பெட்டியைததிறந்தான். திறந்த வுடன் மகரிஷிகளதைப்பார்ககும்போது அஸ்திகளெல்லா மிடதுபாகத்திற் பார்வதிதேவியோடு சிவசொரூபமாகவி ருப்பதைக்கண் டாநந்தமடைந்திருக்குந்தருணத்தில், அவ வஸ்திகள் பறந்துவெளியில்வந்து, சிவலிங்கத்திலைக்கியமா யின. பின்தருமசேது பஞ்சநதத்திற்றுனேவசித்துததவஞ் செய்தானென்றுசொல்லியநாதசன்மாவைநோககி, அனவ த்தியாதேவி சுவாமி! மகாபாபிகளாக யிருந்தாலுமவர்கள்ம

னையாள் அனுமரணத்தாற் புண்ணியலோகத்தை யடைகி ன்றார்களென்று புராணங்களாலும், ஸ்மிருதிகளாலுஞ் சொல்லப்படுகின்றன. நாயகனிறந்தபின் பதிவிரதையான மாதர்கள் அக்கினியாரோகணஞ்செய்து, பாபியாகிய தன் பதியைப் புண்ணியலோகமடைவித்துத் தாமுஞ்சுகத்தைய டைவார்களென்று தேவரீராலும் சொல்லக்கேட்டிருக்கின் றேன். பாரதத்தில் மாடப்புறாவின் ஆக்கியானத்தி லாண் புறாவையிறந்தபின் பெண்புறாவை அக்கினியிலநுமரணம டைந்து, அநேகவலங்காரத்தை யடைந்தவனாகத் தன்புரு ஷனைச்செய்து, சொர்க்கலோகத்தில் வாசஞ்செய்ததென் றுசொல்லப்பட்டிருக்கின்றது. சங்கர்-அங்கிரிஸ் முதலான மகரிஷிகளால் அனுமரணஞ்செய்தமாதர்களுக்கு மூன்ற ரைக்கோடி கற்பகாலந் தன்பர்த்தாவுடன் சொர்க்கத்தில வசிப்பதுபலனென்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதித மகரிஷியால், தன்னாயகன்சந்தோஷமடையுங்காலத்திற்று னுஞ் சந்தோஷமடைந்தும், துக்கமடையுங்காலத்திற்று னுந்துக்கமடைந்தும், தேசாந்திரபோகுங் காலத்திற்று னழுக்குவஸ்திரந்தரித்துச் சுகத்தைத்துறந்திருந்தும், மர ணமடைந்தாற் றானுமரணமடைந்துஞ் சுகத்தையடைகி ன்றார்களென்று சொல்லப்பட்டிருக்கின்றது. இவைகளுக் குவிரோதமாகத் தருமநாசன் மனையாளநுமரணமடைந்தி ருந்தும் தருமநாசனொருவருக்கும் நரகத்தையடைந்தானெ ன்றுசொல்லிடதென்ன காரணமென்றுகேட்க, நாதசன் மா பெண்ணே! தருமநாசன் துராசாரனும், வேசைமா தர்களைப்புணர்ந்து அவர்களுடனேகபாத்திரத்தி லுண்டவ

னும், சத்தியவாக்தனங்காடதநிரிஜபம்விட்டவனும், பிராமணனைக்கொன்றவனும், எனழப்பிராமணனவீட்டிற்கொள்ளையடித்தவனும், பிறருடையவிளைநிலங்களையும் மனைவாளையுமபகரிததவனுமாதலால் அநேகங்கோடிகாலநரகததைத யனுபவிக்கவேண்டியவன் மனையாளனுயரணத்தாலோர்வருஷநரகத்தை யனுபவிததுச், சிவலோகத்தை யடைாதானென்று சொன்னார்.

உச-வது அத்தியாயம்

முற்றிற்று.



## உரு-வது கழுதை- நாய்- மான்- முள்ளம்பன்றி யுத்தமஜன்மத்தை யடைந்த அத்தியாயம்.

ததிசிமகரிஷியானவர் கந்தமாதனபருவதத்திலிருந்துபுறப்பட்டுத் தனுக்கோடிக்குப்போய் ஸ்நானஞ்செய்து, இராமலிங்கத்தைத்தெரிசித்துப் பஞ்சநதீசுவரரைத தெரிசிக்க மிகுந்தவிருப்பத்துடன் வருங்காலையில் தங்கள் தங்கள் குறையைச்சொல்லிக்கொண்டுநின்ற கழுதை-நாய்- மான்- முள்ளம்பன்றியைககண்டு நீங்கள்மானிடர்போற்பேசிக்கொண்டிருக்கின்ற காரணம்யாதென்றுகேட்டார் கழுதை மகரிஷியினெதிர்வந்து, ஐயா! நான்காசிபகோத்திரத்திற்பிறந்து, வேதாத்தியயனஞ்செய்த பிராமணன்: குருமனையாளோடுபுணர்ந்த பாபசேஷததால் நாய்ச்சென்மமும், அக்காலத்தில் வீபூதிதரித்திருந்த புண்ணியத்தா

ல் மானிடவறிவுமுண்டானதென்று சொல்லிநின்றது. மா
ன் மகரிஷியினெதிர்வந்து ஐயா! நான்கௌண்டினிய கோ
த்திரத்திற்பிறந்து புண்டரனென்னும்பெயர்பெற்றபிராம
ணன. பதிதப்பிராமணனுக்கு வேதாத்தியயனஞ் செய்து
வைத்த பாவத்தால் மான்சென்மமும், அக்காலத்தில் நல்ல
றிவுடன் ஞானத்தைப்போதித்ததமையால் மானிடவறிவுமு
ண்டானதென்று சொல்லிநின்றது.

முள்ளம்பன்றி மகரிஷியினெதிர்வந்து, ஐயா! நா
ன் தாய்தந்தைகளையடித்த பாபசேஷத்தால் முள்ளம்பன்
றிச்சென்மமும், அக்காலத்திற் சத்கருமங்கள்செய்ததமையா
ல்மானிடவறிவு முண்டானதென்று சொல்லிநின்றது.

அதைக்கேட்டு ஆச்சரியமடைந்துநின்ற ததீசிமுனிவ
ர்காலில் நான்குமிருகங்களும்விழுந்து நமஸ்கரித்து, எங்
களை யுத்தமசென்மமடையும்படி இரக்ஷித்தருளவேண்
டுமென்றன. ததீசிமுனிவர் அவைகளைநோக்கி நீங்களெ
ன்னுடன் பஞ்சநதக்ஷேத்திரமடைந்தால் உங்கள் பாபம்
விமோசனமாகுமென்றுசொல்லித் தன்னுடனழைத்துக்
கொண்டு பஞ்சநதமடைந்து, அந்நான்குமிருகங்களுடன்
றானும் காவேரிஸ்நானஞ்செய்து மரவுரிவரித்து, விபூ
திதரித்து, உருத்திராக்ஷம் பரித்து, அவைகளை யாலயத
தின் வெளியினிறுத்தித் தானாலயத்தினுட்சென்று பிரதெ
க்ஷணம்வந்து, நந்திசங்கார்மத்தியில் நமஸ்கரித்துப் பரமசி
வனருகிற்சென்றார். அப்பொழுதுபரமசிவனுக்கபிஷேக
காலமாகையால் வேதபாராயணஞ்செய்துநின்று, சிவேத்
ஞதிகளானவின் உபநிஷதவாக்கியத்தாற் ஸ்ருத்திரம் பண்
ணினார். அப்பொழுது பரமசிவன் பிரசன்னமாகித் ததீசி

முனிவரே! உமதிஷ்டத்தைத் தெரிவியுமென்றார். ததீசி முனிவர் பரமசிவனை வணங்கி நின்று சுவாமி! யென்னுடன் வந்திருக்கின்ற மிருகங்களை யிரக்ஷித்தருள வேண்டுமென்றார். பரமசிவன் ததீசிமுனிவரே! யெமது பாத தீர்த்தத்தால் மிருகங்களின் சரீரத்தை நனைத்தால் திவ்வியதேகமுண்டாகுமென்றுசொல்லி மறைந்தருளினார். உடனே ததீசிமுனிவர் ஓர்கடத்திற் பாததீர்த்தத்தைக்கொண்டுபோய்க்கோபுரவாயிலுக்குவெளியினின்றமிருகங்களின் சரீரத்தைநனைத்தார். நனைத்தவுடன் திவ்விய தேகத்தையடைந்து, யாவரும்பார்க்கும்படி விமானத்திலேறித் தேவலோகமடைந்து, ஓர்கற்பகாலம்வரையில் இந்திரனாற்பூசிக்கப்பட்டங்குவசித்தார்கள். இந்தசென்மத்தையுடைய மிருகங்களும் பஞ்சநதமடைந்தமாத்திரத்திற் புண்ணியவுலகத்தையடையுமானால் உயர்ந்தபிறவியடைந்து, நல்லறிவுடன்பஞ்சநதத்தில் வசிப்பவர்களடையும்பயனை நான்சொல்வதுயாது. இழிந்தபிறவிபிறக்கினும் பஞ்சநதத்திற்பிறக்கவேண்டுமென்றுசொன்னார்.

உரு-வது அத்தியாயம்.

முற்றிற்று.

---

## உசு-வது ஜைகிஷவ்வியசந்நியாசியுடன் தேவலர் பஞ்சநதமடைந்த அத்தியாயம்.

மனோவாக்குக்காயங்களாற் பிறர்க்குத்துன்பமி

ல்லாதவரும், வருணாசிரமம ஆசாரமுதலானவைகளைப்
பாலனஞ்செய்பவரும், சிவபூஜாதுரந்தரரும், தருமசிந்த
னையுடையவருமான தேவலரென்னுமோர் பிராமணனி
ருந்தார். அவருடைய ஆசிரமத்தில் ஜைகிஷவ்வியரென
னுமோர்சந்நியாசிவந்தார். வந்தவரைத் தேவலர்கண்டு, வந்
தனத்துடனுபசாரஞ்செய்து, எப்பொழுதுமென்னுடைய
வாச்சிரமத்தில்வசித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தா
ர். அவரதற்கிசைந்தவ்விடத்தில்வசித்தார். தேவலரவருக்கு
வேண்டியவைகளைக்குறைவின்றி நடத்தியவரைவிட்டுநீங்
காதிருந்தார். இவ்வாறிருக்குநாள்களிலோர்நாள் ஜைகிஷவ்
வியருக்குத்தெரிவித்துக்கொள்ளாமற் சமுத்திரஸ்நானத்தி
ற்குப்போய் ஸ்நானஞ்செய்து, நித்தியகருமங்களை முடித்து
க்கொண்டு, கண்ணைவிழித்தெதிரேபார்த்தார். பார்த்த
காலையில் ஜைகிஷவ்வியசந்நியாசிக ளெதிராகவிருந்தார்.
அவரைக்கண்டுவியப்படைந்து தன்னாசிரமத்திற்குவந்தா
ர். வந்தவர்தனக்குமுன்னாக ஆச்சிரமத்தில் வந்திருந்தசந்நி
யாசியைக்கண்டு, இவர்மிகப்பெரியவரென் றெண்ணியவ
ரைப்பரீக்ஷைசெய்வதற் காகாயத்திற் பறந்தார். அங்குந்
தனக்குமுன்னாகச்சந்நியாசியைக்கண்டு ஆச்சரியமடைந்து
பின்சூரியாதி யுலகங்களிற்போனார். அங்குந்தனக்குமுன்
னாகச்சந்நியாசியைக்கண்டு ஆச்சரியமடைந்துநின்றார். அப்
பொழுது சந்நியாசி யோகமாயையால் மறைந்தார். உ
டனேதேவலர் சித்தர்களைநோக்கிச் சித்தர்களே! ஜைகிஷ
வ்வியர்போனவிடந் தெரிவிக்கவேண்டுமென்றார். சித்தர்க
ள் தேவலரே! ஜைகிஷவ்வியர் தனது யோகப்பிரபாவத்தா

ற்கருமகெதியாலடையக்கூடாத பிரமலோகத்திற்குப் போயிருக்கின்றார். உம்முடையகருமகெதியால் இந்தவுலகபரியந்தந்தானடையக்கூடும்; பிரமலோகமடையக்கூடாது; நீரும்முடைய ஆச்சிரமத்தையடையலாமென்றார்கள். அதைக்கேட்டுத் தன்னாச்சிரமத்தை யடைந்தார். அடைந்தவர் தனக்குமுன்னேவந்து யோகத்திலிருந்த சந்நியாசியைக்கண்டு நமஸ்கரித்தெழுந்துநின்று, சுவாமி! சிற்றறிவையுடையயான் தேவரீரைப்பரீக்ஷைசெய்ததைத் திருவுளத்திற்கொள்ளாது ஜெனனமாகியசாகரத்திற் காமமென்கின்றமீனாலுந் தாபத்திரயமென்கின்ற முதலையாலும், விஷயமென்கின்ற அலைகளாலுஞ், சோகமோகமென்கின்ற பாம்புகளாலுங், குரோதமென்கின்றசுழலாலும் வாதையடைந்து மூழ்கிக்கிடக்கின்ற அடியேனை ஆத்மஞானோபதேசமென்கின்ற தெப்பத்தினாற்கரையேற்றவேண்டுமென்றார். ஜைகிஷவ்வியர் அந்தவார்த்தையைக் கேட்டுத்தேவரே! மனதையுநேத்திரத்தையுமடைந்த அஞ்ஞான திமிரத்தைச் சிவஞானமென்கின்ற அஞ்சனச்சலாகையா லொதுக்கவேண்டும். சிவஞானச்சலாகையாவது; ஜப்பியேசுவரரைத் தியானிப்பதாலும், நமஸ்கரிப்பதாலும், ஸ்தோத்திரஞ்செய்வதாலும், பிரதக்ஷணஞ்செய்வதாலும், தெரிசனஞ்செய்வதாலும், பஞ்சநதத்தில்வசிப்பதாலும், காவேரிஸ்நானத்தினாலும், சர்ச்சங்கத்தாலுமுண்டாவது; சர்வம் ஜப்பியேசுவரரென்கிற ஞானந்தான். தவசு, சித்தி, தனம் இந்தரகசியத்தை யறிந்தவனான்ஞானி; ஞானத்தையடைவதற்குத் துக்கமாகியசம்சாரத்தைநீக்குவதாவசிகம். ஆத்தும பின்னங்களிலாத்தும ஞானமுண்டாவது சம்சாரமூலம்; அதைப்பேதிப்பதாகிய

ஆதமாவிலாதமஞானமுணடாவது மோக்ஷம, சிவனுககு
ம ஆததுமாவுககுமபேதமுணடாவது ஞானம, பரததுவ
மாயிருககிற பஞசநதீசுவரரைச சததியஞானானநதசொ
ரூபியாகததியானிபபதுமோக்ஷசாதனம. யோகமாகினற
கததியாற சமசாரவிஷவிருக்ஷததைச சேதிதது, ஆததுமா
விலாதமபுத்தி யுளளவன யோகி இந்த ஞானயோகத
தையடைநதவனதறபோதமுளளவுங கருமததைவிடபப
டாது, ஏகாநததலிருநது தவசுசெயயவேணடியது- தவ
சுசெயவோனசுருககமானவாகாரம காவேரிஸநானம, இநதி
ரியநிககிரகம நலலறிவு, ஜபபியேசுவரரிடததில மனோல
யததுடன ஸோஹமபாவனைசெயயவேணடும. இபபொ
ழுதுயாமசொலலியவாறு தவசுசெயவோன ஈசுவரனருளுரு
வடிவையடைவது நிசசயம. இநதரகசியததையபககுவாக
குபதேசிககலாகாது தேவலரே! ஸ்ரீபஞசநததையடைந
துதவசுசெயயும யாமுமஙகுவருகினறோம நீகவலையடை
யவேணடாமெனறுசொனனா. அதைககேடட தேவலா
ஆசாரியருபதேசததாலஆசாபாசநீஙகி வயிராககியததோடு
சநநியாசமடைநது, ஜைகிஷவவியருடன திருவையாற
றையடைநதார

உஅ-வது அததியாயம்.

முறறிறறு.



# உஎ-வது தேவலர் தவசுக்கிரம முரைத்த அத்தியாயம்.

தேவலர் ஜைகிஷவ்வியருடன் பஞ்சநதத்தையடைந்தபின், காவேரிஸ்நாநஞ்செய்து பரமசிவனைத்தெரிசித்துச் செப்பியேச்சுரமண்டபத்திலோர்காலினின்று, பழுவர்க்கங்களையாகாரஞ்செய்துகொண்டு இந்திரியநிக்கிரகத்துடன், காமாதிஷட்குற்றங்களைநீக்கிச் சிலகாலந்தவசும், ஜலபக்ஷணத்துடன் சிலகாலந்தவசும், சருகுபக்ஷணத்துடன் சிலகாலந்தவசும், வாயுபக்ஷணத்துடன் சிலகாலந்தவசும், பிரஜாபத்தியக்கிரிச்சிரம் -அதிக்கிரிச்சிரம் - உஷ்ணகாலங்களில்தப்தக்கிரிச்சிரம். சீதகாலத்திற்சீதக்கிருச்சிரம்-சாந்தபனக்கிரிச்சிரம்- மகாசாந்தபனக்கிருச்சிரம்-அதிசாந்தபனக்கிருச்சிரம்-மகாபராகம்- சவுமியக்கிருச்சிரம்-வச்சிரக்கிருச்சிரம்-சாந்தராயணக்கிருச்சிரம்- வாருணக்கிருச்சிரம், பர்ணக்கிருச்சிரம் முதலானதுஞ் செய்துமுடித்துச் சித்தசுத்தியாகும் வரையில் முக்கியபக்ஷத்தாலேயே சரீரசிரமமடைந்து, பிராயச்சித்தங்களாலு நீக்கப்படாத பாவங்களைப்போக்கி முத்திகொடுக்கும் பஞ்சநதத்திற் செய்தார். அக்காலத்திற் பரமசிவன் பிரசன்னமாகிச் சரீரமெலிந்து, வாடியிருந்த தேவலரைப்பார்த்துக் கையாற்றடவினார். பரமசிவன் ஸ்பரிசவிசேஷத்தாற் றவங்களால் வாடியிருந்தசரீரம் பருவதம்போல்வலிமையடைந்து, உடனேயானந்தத்துடன் பரமசிவனை நமஸ்கரித்துநின்றார். நின்றவரைப் பரமசிவன்பார்த்துத தேவலரே! கிருச்சிரங்களால்மிகச்சிரமமடைந்தீர். இவ்வாறு தவசுசெய்தல் மிகவுமரிது; உமதிஷ்டத்தைத்தெரிவியுமென்றார். தேவலர் சுவாமி! சம்சாரவாதைக்குப் பயந்தவென்னையதினின்றுநீக்கிச் ஜை

கிஷவ்வியரை இரக்ஷித்ததுபோலென்னையும் இரக்ஷித்தருளவேண்டும். என்குருவாகிய ஜைகிஷவ்வியர் பிரசாதத்தால் தேவரீரைச் சரணமடைந்தேன். அவருமெனக்குஞானபோதமுண்டாகும் வரையில் இங்கு வசிக்கின்றாரென்று சொன்னார். அத்தருணத்தில் ஜைகிஷவ்வியரும் பரமசிவனைப்பணிந்து, தேவலரை இரக்ஷித்தருளவேண்டுமென்றார். அதைக்கேட்டுப் பரமசிவன் தேவலரே! ஜைகிஷவ்வியராற் போதிக்கப்பட்ட தத்துவமெதார்த்தம்; அது இபபொழுது விளங்கக்கடவதாக. காஷாயமுதலான வேடங்களை நீக்கிக் கிரகத்தாச்சிரமத்தை யடைந்து, எமதுஸ்தானத்தில்வசித்தவர்களுக்கு மோக்ஷங் கிடைப்பதற் கையமில்லை. கிரஹஸ்தர்களுக்குத் தான் றருமாதிகாரம். இஃதன்றி ஜைகிஷவ்வியருன்னாச்சிரமத்தில் வசிக்கு நாள்களிலோர்நாள் நீ வைசுவதேவபலி பண்ணாமல் அன்னமிட்டவன்று இருமியானவன்னத்தைத் தன்றவமகிமையால் அமிர்தான்னமாக்கியுண்டார். ஓர்நாள் வைசுவதேவபலி பண்ணாதவன்னம்புழுவாமேல், என்றும் வைசுவதேவபலி பண்ணாதவன்னம் யாதாகும். ஆனதால் நீ ஜைகிஷவ்வியமுனிவரைச் சர்க்குருவாகவெண்ணிப் பத்திசிரத்தையாக வணங்கக்கடவாயென்றுசொல்லி மறைந்தருளினார். உடனே தேவலர் தன்குருவாகிய ஜைகிஷவ்வியரைவணங்கி, விடைபெற்றுத் தன்னாச்சிரமத்தை யடைந்து சிலகாலமிருந்துமுத்தியடைந்தார்

உஎ-வது அத்தியாயம்.

முற்றிற்று.



# ௨௮-வது அவிஹிதாசாரன் முத்தியடைந்த அத்தியாயம்.

பூர்வத்தில் அவிஹிதாசாரனென்ற மகா பாவியொருவனிருந்தான். அவனெப்பொழுதும் பிராமணருக்குக்கெடுதி விளைவித்து, அவர்கள்திரவியத்தையபகரித்து, விடர்-நடர்-காயகர்-மூர்க்கர் முதலான பாவிகளுக்குக் கொடுத்துவந்தான். இப்படிப்பட்டபாவத்தாற்பிரமராக்ஷஸால்பிடிக்கப்பட்டுவெகுவாதையடைந்தான். அவன்பிதா காலவரென்பவர் புத்திரவாஞ்சையால்மிகுந்த துக்கத்தையடைந்து, வசிஷ்டமகரிஷியாச்சிரமம்போய் வசிஷ்டமகரிஷியைக்கண்டுநமஸ்கரித்துத் தன்புத்திரனுடையதுன்பத்தைத்தெரிவித்தார். அதைக்கேட்டவசிட்டமுனிவர் அனேகநாள்யோசித்துக் காலவரைநோக்கி காலவரே! பிரமவிஷ்ணுவாதிதேவர்களால் நித்தியந்தெரிசிக்கப்பட்டதும் அனேகவிரதர்களாற் றவசித்தியடைந்ததும், சர்வோபத்திரவநிவர்த்தியின்பொருட்டுச் சங்கரனானிர்மிக்கப்பட்டதும், அற்பதானத்தால் மகாதானபலத்தைக்கொடுக்கப்பட்டதும், தெரிசனத்தளவில் புத்திமுத்தியளிக்கப்பட்டதும், மஹாபாவங்களைநீக்கப்பட்டதுமான பஞ்சநதஸ்தலத்தை யடைந்து மார்கழிமாதத்தில் ஆருத்திராநக்ஷத்திரத்தில் உதயகாலத்திற்காவேரி ஸ்நானஞ்செய்து, பிரணதார்த்திகரனையும் தருமாம்பாளையுந்தெரிசித்தாற் பிரமராக்ஷசுநீங்கிவிடும். ஆகையால் நீர் உம்முடையபுத்திரனோடு பஞ்சநதத்தை யடையுமென்றுத்திரவுகொடுத்தார். காலவர்வசிஷ்டமுனிவரைநமஸ்கரித்துத் தன்கிரகம்வந்து, புத்திரனோடு திருவையாற்றையடைந்து மார்கழிமாதம் ஆருத்திரா நக்ஷத்திரத்தி

காவேரிஸ்நானஞ் செய்துதருமபாலனோடு பிரணதார்த்திஹரரைத் தெரிசனஞ்செய்யுங் காலத்திற் பிரமராக்ஷசக் கிரகநீங்கிவிட்டது. அதன்பின்னெடுங்காலம் பஞ்சநதத்திற் றானேவசித்து மரணமாகி முத்தியடைந்தான்.

உஅ-வது அத்தியாயம்.

முற்றிற்று



## உகூ-வது துர்ப்பகன்முத்தியடைந்த அத்தியாயம்.

பூர்வத்திற் றருமதூஷகனும், வேசியா நட்புடையவனும், பிராமணர் திரவியத்தைக் கொள்ளையடித்தவனும், சுராபானஞ்செய்தவனும், நித்திய கர்மாநுஷ்டானத்தைவிட்டவனும், தாய்தந்தையர் வார்த்தை கேளாதவனுமான துர்ப்பகனென்னுமோர் பிராமணனிருந்தான். அவன் மகரசங்கிராந்திபுண்ணியகாலக்காவேரி ஸ்நானத்திற்குப்போன ஜனங்களுடன்சேர்ந்து பஞ்சநதமடைந்து காவேரிஸ்நானஞ்செய்து பிரணதார்த்திஹரரைத் தெரிசித்து, வெளிவீதியில்வந்து நடந்துவந்தசிரமத்தாலோர் மரத்தடியில் நித்திரைசெய்தான். அக்காலத்தில் நித்திரைசெய்த துர்ப்பகன்தலையிற் பெருமழையுடன் இடிவிழுந்து மரணமடைந்தான். மரணமடைந்த துர்ப்பகன்சரீரத்திலிருந்து ஓர் ஜோதிகிளம்பித் திருக்கோயிலையடைந்து, பரமசிவனுடன் கலந்தது. இறந்துபூமியிற்கிடந்த சரீரம் திரிநேத்திரம் - நான்குபுயம்-மான்-மழு-சூலம்- உடுக்கையுடன் சந்திரசேகரனாகவெழுந்து திருக்கோயிலையடைந்து து

வாரபாலகனுயினது. ஆகையால் மகரசங்கராந்தியிற்பஞ்சநதகாவேரிஸ்நானஞ் செய்தவர்கள் சமஸ்ததோஷங்களு நிவர்த்தியாகிச் சிவலோகமடைவது சத்தியம்.

உகூ-வது அத்தியாயம்.

முற்றிற்று.



## கடு-வது ஆசாரவிகலன் முத்தியடைந்த அத்தியாயம்.

கௌசிககோத்திரத்திற்பிறந்தவனும், உபநயநகாலமுதற் பிரமசரியவாச்சிரமத்திற்குயோக்கியமாகிய ஆசாரம்-தண்டம்-எக்கியோபவீதம்-கிருஷ்ணாசனம்-சௌசம்-முஞ்சை-வெண்மைவஸ்திரம்-பிச்சாசரணம்-திரிகாலசந்தியாவந்தனம் முதலானவைகளை விட்டவனும், பெரியோர்-தாய்-தந்தைகளை வணங்காதவனும், ஈசுவராராதனஞ்செய்யாதவனுமான ஆசாரவிகலனென்னுமோர் பிராமணனிருந்தான். அவன் இல்லற தருமங்களுக்குரிய விவாகஞ் செய்துகொள்ளாமல் தாய்தந்தைகளால் நீக்கப்பட்டு, வேசியருடன்கலந்து மதுபானஞ்செய்து, தூர்த்தரைச்சினேகித்துப் பிறர்திரவியத்தைக் கொள்ளையடித்துத் திரிந்தான். அந்தச்சமாசாரதனை அரசனறிந்து தன்தேசத்தைவிட்டுத்துரத்திவிட்டான். அதன்பின் ஆசாரவிகலன் அன்னியதேசங்களில்நெடுங்காலந்திருடித்திரிந்துகடைசியாகப்பஞ்சநதம்வந்து, டம்பமாகத்திரிகின்ற தூர்த்தர்களோடுவேசைமாதர்களைச்சேர்த்துக்கொண்டு மகரசங்கராந்திப்பு

ண்ணியகாலத்திற் காவேரியில்ஜலக்கிரீடைசெய்து, முழுகி விளையாடிக்கரையேறி, நிர்த்தகீதவாத்தியத்துடன் மண்டபத்திலெழுந்தருளியிருந்த பரமசிவனைத்தெரிசித்து, நடகாயகர்களோடு வெளிவீதியில்வந்து, ஓர்திண்ணையிற்படுத்து நித்திரைசெய்தான். அப்பொழுதவனுக்கு மரணகாலஞ்சம்பவித்ததால், பரமசிவன், அருகிலெழுந் தருளிப்பிரணவத்துடன்பஞ்சாக்ஷரமந்திரத்தைவலதுசெவியிலுபதேசித்தருளினர். உபதேசித்தவுடன்மரணமடைந்து ஈசுவரனோடைக்கியமாயினன். ஆதலாற்பக்தியில்லாமல் மகரசங்கராந்தியிற்காவேரிஸ்நானம்பண்ணிப பரமசிவனைத்தெரிசித்தவர்களுஞ் சிவலோகமடைவது சத்தியம்.

கூ0–வது அத்தியாயம்.

முற்றிற்று.



## கக–வது வேதப்பிரியர்மோக்ஷமடைந்தஅத்தியாயம்.

பூர்வத்திற்கருமங்களிற் சிரத்தையுடையவரும், சாந்தகுணத்தையுடையவரும், வேதவேதாங்க பாரங்கதரும் சுருதி–ஸ்மிருதி–புராண–இதிகாச–தர்மசாஸ்திரங்களிற் சொல்லியவருணாசிரம பரிபாலகரும், சர்வஜீவனிடத்தினுந்தயவுள்ளவரும், மித்துருசத்துருவைச் சமமாகவெண்ணப்பட்டவரும், மானாவமானத்திலும்–லாபாலாபத்திலும்–சுகதுக்கத்திலுஞ் சமபார்வையுடையவரும், இந்திரியநிக்கிரகருமானவேதப்பிரியரென்னுமோர் பிராமணரிருந்தா

அவரினித்தனக்கு வருஞ்ஜென்மம் எவ்வளவினதோ? அதைநம்முடையபுத்தியா லறியப்படவில்லையேயென்றமிகுந்ததுக்கத்தையுடையவராய்ச் சிவஸ்தலங்களைத்தெரிசித்தும் புண்ணிய நதிகளில்மூழ்கியுஞ்சஞ்சரித்து வருங்காலத்தில் சிலமகரிஷிகளைக்கண்டு, ஐயாமகரிஷிகளே! யென்ஜனனபூரணமெப்பொழுது நீங்குமென்றுகேட்க அவர்கள் விசுவேசுவரரன்றி வேறொருவருஞ் சொல்லச் சாத்தியப்படாதென்றுசொன்னார்கள். அதைக்கேட்டுமிகுந்ததுக்கமுடையவராய்ப் பஞ்சநதமடைந்து, காவேரியிற் சங்கற்பபூர்வமாக ஸ்நானஞ்செய்து, செம்பொற் சோதியாரைத்தெரிசித்து, அங்குவசிக்கின்ற ஆர்வாசர்முதலானமகரிஷிகளைக்கண்டு தன்கருத்தைத்தெரிவித்தார். அதற்கவர்கள் வேதப்பிரியரே! பரமசிவனன்றி வேறொருவருமறியமாட்டார்கள். நீர்தஸ்தலத்திலிருந்து அவரையுத்தேசித்துத்தவஞ்செய்தாற் பரமசிவன்பிரசன்னமாகித்தெரிவிப்பாரென்றார்கள். அவ்வாறே வேதப்பிரியர் தவஞ்செய்தார். அப்பொழுதுபரமசிவன் பிரசன்னமாக வேதப்பிரியர்கண்டு, நமஸ்கரித்தெழுந்துநின்றுஸ்தோத்திரம்பண்ணினார். பரமசிவன் வேதப்பிரியரே! உம்முடையவரியதவத்திற்கானந்தமடைந்தோம்; உம்முடையவிஷ்டத்தைத்தெரிவியுமென்றார். வேதபிரியர் சுவாமிதயாமூர்த்தியே! இனியெனக்கு வருஞ்ஜென்மங்களெத்தனையிருக்கின்றன; அவையெப்பொழுதுநிவர்த்தியாகுமென்றுகேட்கப்பரமசிவன் வேதப்பிரியரே! உமக்கின்னநூறுசென்மமிருக்கின்றதென்றுசொல்ல, வேதப்பிரியர் மனநடுங்கிசுவாமி! இந்தசென்மத்தையேகடைசியாகவைத் தெனக்கநுக்கிரகம்ப

ண்ணவேண்டுமென்று நமஸ்கரித்தார். பரமசிவன்தாரக மந்திரமாகிய பிரணவத்துடன் பஞ்சாக்ஷரமந்திரத்தையுபதேசித்து மறைந்தருளினர். அதனபின்வேதப்பிரியர் அம்மந்திரத்தையனேகநாள்ஜெபித்து மரணமடைந்துமுத்தியடைந்தார்.

கக-வது அத்தியாயம்
முற்றிற்று.



## கஉ-வது நாஸ்திகப்பிராமணன் முத்தியடைந்த அத்தியாயம்.

பூர்வத்தில் நாஸ்திகனென்னுமோர் பிராமணனிருந்தான். அவன் வேதம்-வேதாங்கம்- இதிகாசம்-புராணம்-தருமசாஸ்திரங்களைப்பொய்யென்று சொல்லிப்பெரியோர்களையு நிந்தித்தான். அவன்மரணமாகி நரகவாதையடைந்து பாபசேஷத்தால்மாமரமாகப்பஞ்சநதக்ஷேத்திரத்தில் வெளிவீதியில்முளைத்து த்தழைத் திருந்தான். அப்பொழுது,சங்கரனென்னு மோர்பிராமணேத் தமர் அனேகதீர்த்த யாத்திரைசெய்து பஞ்சநதத்தை யடைந்து,வழிநடந்து வந்தசிரமத்தால் முன்சொல்லியமாமரத்தினிழலினுள் வந்துபடுத்துக்கொண்டார். அத்தருணத்திலொரு குரங்குமாமரத்தின் கிளையையசைக்க அதிலிருந்தொருபழம் நித்திரைசெய்தசங்கரப்பிராமணன் மார்பில்விழுந்தது. விழுந்தவுடன் சங்கரப்பிராமணன்விழித்து, அந்தப்பழத்தையெடுத்துத்தின்று,பசிநீங்கிக் காவேரிஸ்நானஞ்செய்து, தி

ருககோயிலையடைந்து, செம்பொற் சோதியாரைத்தெரிசி த்துச்சிலகாலம்பஞ்சாநதத்தில்வசித்து, மரணமடைந்து, சி வலோகம்பெற்றனா.ஙா ஸ்திகப்பிராமணன் பஞ்சநதத்தில் மாமரமாகமுளைநததாலும், உத்தமராகியசங்கரப்பிராமண ன்பழததைபபுசிநததாலும், சகலபாபங்களுநீங்கிச் சிவலோ கமடைந்தான். குரங்குஞ்சிவலோகமடைந்தது.

௲உ-வது அத்தியாயம்.

முற்றிறறு.

---

## ௲௲-வது விஜயசந்திரராஜன் மோக்ஷமடைந்த அத்தியாயம்.

பூர்வத்தில் இமோர்க்கிரிபருவததசசாரலி லரசா க்ஷிசெயத விஜயசசததிரனெனனும யவனராஜன பரமசி வனைசகுறிததுத தவஞ்செயது யாவராலுநதான மரணம டையாதவரததைபபெற்று, எலலாவுலகங்களை யுஞ்செயிக் கவுததேசிததுப்பதின்மூன்றுகோடியக குரோணிசேனையு டனபுறபபடடு, அயோததி-வடமதுரை- துவாரகை-அஸ்தி னபுரி-காஞ்சீபுரமுதலான தேசஙகளைப்பி டிததுககொண்டு பஞ்சநதத்தையடைந்தான். அவனைக்கண்டு தூர்வாசர்முத லானமற்றரிஷிகளும்பயந்து, பிரணதார்த்திகரரைநோக்கி முறையிட்டார்கள். அப்பொழுது பரமசிவனவர், விநா யகர்-சுப்பிரமணியர்- நந்திகேசுவரர்- சததமாதர்கள்-பிரு ங்கி-வைரவர்-சண்டிகேசுவரர்முதலான சிவகணங்களையுந்

தத்திற்கனுப்பினார். அவர்கள்வந்து யவனராஜன்படையு டன்கலந்து யுத்தஞ்செய்யுங்காலத்தில்விஜயச்சந்திரன் அதி கோபங்கொண்டு தன்சேனையையுத்தஞ்செய்யும்படி உத் தரவுகொடுக்க அவர்கள் யுத்தம்பண்ணும்பொழுது விநாய கர் ஒருகோடிசேனையைமடித்தார். சுப்பிரமணியர் தன் கையிலிருக்கின்ற சக்திவேலால்இரண்டுகோடிசேனையை மடித்தார். பைரவர் மூன்றுகோடி சேனையை மடித்தார். நந்திகேஸ்வரர் நாலுகோடிசேனைகளை மடித்தார். பாக்கி நாலுகோடிசேனைகளை சத்தமாதா-பிருங்கி-நந்திகேசுவரர் வீரபத்திரர்-இவர்கள் திக்குகள்தோறுமோடியொளியும்ப டியடித்தார்கள். அத்தருணத்தில் விஜயச்சந்திரன்மிகுந்த கோபத்துடன் இவர்கள்முன்வந்தெதிர்த்தான். எதிர்த்தவ னை விநாயகர்துதிக்கையாற் பிடித்துப்பூமியிற்போட்டு த தேயததுகொன்றார். அந்தயுத்தத்திலிறந்தசேனைகளும் அரசனும்புண்ணிய க்ஷேத்திரமாகிய திருவையாற்றிலிற ந்தமையாற்சிவசாரூப்பியத்தைப்பெற்றுச் சிவலோகமடை ந்தார்கள்-

கஉ-வது அத்தியாயம்

முற்றிற்று



## கஉ-வது சத்தியவான்தீர்க்காயுள் பெற்றஅத்தியாயம்.

புண்ணியகீர்த்தியெனனும் பிராமணன் சுசீலையெ

ன்னும்மனையாளோடுபூஞ்சநதத்தில்வசித்து இல்லறநடத்திவருங்காலத்தில், அவர்மனையாளோராண் குழந்தையையும், ஓர்பெண்குழந்தையையும், பெற்றனள். ஆண்குழந்தைக்குச் சத்தியவானென்றும், பெண்குழந்தைக்குச் சுந்தராகிருதியென்றும் பெயர்வைத்துச்சிலகாலமிருந்து மரணமடைந்து சிவலோகத்தைப் பெற்றனர். சத்தியவான் அவருக்குச்செய்யவேண்டிய உத்தரகிரியைகளை முடித்து தன்றங்கையுடனிருந்து வருநாள்களில், சத்தியவானுக்கு இருபதுவயதும் அவன்றங்கைக்குப் பத்துவயதுமானது. அப்பொழுது கௌதமரிஷிசத்தியவான்வீட்டில்வந்து ஆதித்தியஞ்செய்துகொண்டு சுசீலையைநோக்கியுன் புத்திரனுக்கு முப்பதாவதுவயதில்மரணமும், உன்புத்திரிக்கிருபதாவதுவயதில் வைதவ்வியமும் உண்டாகுதென்று சொல்லிப்போயினர். அவ்வார்த்தையைக் கேட்டசுசீலை மிகுந்ததுக்கமடைந்து ஆகாரமின்றியிருக்கச் சத்தியவானுஞ் சுந்தராகிருதியுந்தன்றாயைப்பார்த்து அம்மா! நீ யேன்றுக்கமடைந்திருக்கின்றாயென்றுகேட்கச், சுசீலைகௌதமரிஷி சொல்லியதைச்சொன்னாள். அதைச் சத்தியவான் கேட்டுக்கலக்கமின்றித் தன்றாயைநோக்கி அம்மா! பரமசிவப்பிரசாதத்தால் அற்பாயுளைப்போக்கி தீர்க்காயுளைநான் அடைவதுமன்றி, யென்றங்கைக்குண்டாகிய வைதவ்வியத்தையுநீக்குகிறேன்; நீ பயப்படாதேயென்றுசொல்லிச்சிவதீக்ஷைசெய்துகொண்டு சிவபூஜையும், சிவத்தியானமும், சிவகதாசிரவணமும், மாதுருபூஜையும், வருணாச்சிரமவிதிப்படி நித்தியகருமானுஷ்டானமுஞ்செய்து ஒருகாலினின்றுதவஞ்செய்தான். அப்பொழுதுபரமசிவன் பிரசன்னராகிச் சத்தியவானே! புண்ணியதவத்தாலானந்த மடைந்

தோம். உன்னபீஷ்டத்தைச்சொல்வாயென்றார். சத்தியவரன சுவாமி! கௌதமர் என்றயிடத்தில் எனக்குமுப்பதாவதில்மரணமும், என்றங்கைக்கிருபதாவதில் வைதவ்வியமுமென்றுசொன்னாராம், அன்றுமுதலென்றாயிகுந்தவிசனத்தை யடைந்திருந்தான். அதைநான்றெரிந்து என்மரணத்தையும், என்றங்கைவைதவ்வியத்தையும்; பரமசிவப்பிரசாதத்தாற் போக்குகிறேனென்று சொன்னேன். அவ்வாறே தேவரீர்பாலித் தருளவேண்டுமென்றான். அப்பொழுது பரமசிவன்எமதருமராஜனை நினைத்தார். உடனேஎமன்வந்து பரமசிவனைவணங்கிசுவாமி! அடியேனை நினைத்தகாரியமென்னனென்று திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்றான். பரமசிவன் எமனே! சத்தியவானுக்கு முப்பதாவதுவயதிலுண்டாமரணத்தையும், அவன்றங்கைக்கிருபதாவதுவயதி லுண்டாகும் வைதவ்வியத்தையு நீக்கியிருக்கிறோம். இதை நீயறியக்கடவாயென்றார். எமன்சுவாமி! தெரிந்துகொண்டேனென்றுதன்னுலகத்தையடைந்தான். அதன்பின்பரமசிவன் சத்தியவானுக்கநுக்கிரகஞ்செய்துமறைந்தருளினார். சத்தியவான்பரமசிவன் அநுக்கிரகஞ்செய்ததைத் தனாயக்குத்தெரிவித்துத் தானுந்தங்கையும்பஞ்சநதத்திற்சுகமாக வசித்தார்கள்.

௯௪-வது அத்தியாயம்
முற்றிற்று.

---

## ௯௫-வது மந்தமதிமுத்தியடைந்த அத்தியாயம்

மந்தமதியென்னுமோர்காமுகபிராமணனிருந்தா

ன். அவன்சில வேசைமாதர்களுடன்பஞ்சநதம்வந்து அர்த்தராத்திரியிற் றிருடவேண்டுமென்று வீடுவீடாகநுழைந்தான். ஒவ்வொருவீட்டிலுஞ் சனங்கள் விழித்துக்கொண்டிருந்தமையாற் றிருட்டகப்படாமல் மூன்றுசாமநேரங் கண் விழித்திருந்து நாலாவதுசாமம் திருக்கோயிலினுள்வந்தான். அவ்விடத்திலோர்வணிகன் அனேகஆபரணங்களைத்தரித்துக்கொண்டு சிவார்ச்சனையோடு சிவதெரிசனஞ்செய்து வீட்டிற்குப்போகுங்காலையில் மந்தமதியின்றொடர்ந்து தடியாலடித்து ஆபரணங்களைஅபகரித்தான். அப்பொழுதுஅவ்வணிகன்பெருங்கூச்சலிட்டதை இராஜசேவகர்கள்கேட்டு ஓடிவந்துதடையத்துடன்பிடித்துக்கயிற்றாலிறுகக்கட்டிச் சிவாலயத்திற்சிவபூசை செய்துகொண்டிருந்த அரசன்முன்கொண்டுபோய்விடுத்தார்கள். அரசன் தருமசிந்தையையுடையவனாதலாலும், சிவபூஜாசமயமானதாலும்அவனைத்தெண்டிக்காமல், ஆபரணங்களைமாத்திரம்வாங்கி வணிகனிடத்திற்கொடுத்து மந்தமதியைவிட்டுவிட்டான். அன்றுசிவராத்திரி புண்ணியகாலமாகையால் மந்தமதி இராத்திரிமுழுவதுங் கண்விழித்துச்சிவதெரிசனஞ்செய்தமையால் மரணமடைந்து கைவல்லியபதத்தைப்பெற்றான். ஆகையால் சிவராத்திரி புண்ணியகாலத்திற்போஜனத்தோடு நித்திரையில்லாமல் பத்திசிரத்தையுடன் காவேரியிற்றிரிகால ஸ்நானஞ்செய்து இராத்திரிகாலுகாலமும் வில்வமுதலானபத்திர புஷ்பங்களாற்சிவார்ச்சனைபண்ணித்திருக்கோயிலுக்குச்சென்று திருவிளக்கிட்டு, தர்மாம்பிகையோடு செம்பொற்சோதியாரைத் தெரிசித்துப் பிரணவத்துடன்பஞ்சாக்ஷரமந்திரஞ்செபித்து வேதபாராயணஞ்செய்து சூரியோதயத்திற்குமுன் காவேரி

யில் மூழ்கிவீட்டிற்குவந்து சற்பிராமணருக்கன்னதானஞ் செய்து, பின், பாரணைமுடித்துச் சிவகதாசிரவணஞ் செய்தவர்கள், சென்றசென்மங்களிற்செய்திருந்த பாவங்களெல்லா நீங்கிச்சிவலோகமடைவதுசத்தியம்.

ரு௰-வது அத்தியாயம

முற்றிற்று

## ரு௲-வது மதுவெனனும்சூத்திரன் முத்தியடைந்த அத்தியாயம்

முன்னோர்காலத்தில்கோஹத்தி-பிரமஹத்திசெய்தவனும், தருமகுனியனும், கோட்சொல்லினவனும், தேவத்திரவியம பிராமணத்திரவியந்திருடினவனும், கட்குடியனுமான மதுவென்னுமோர் சூத்திரனிருந்தான். அவன்றன பந்துக்களால்நீக்கப்பட்டு அநேகதேசங்களிற்சஞ்சரித்து, மாசிமாதத்துக்கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தசிதினமாகிய சிவராத்திரிபுண்ணியகாலத்தில் வேசைமாதர்களுடன் கள்ளுண்டு, பஞ்சநதமடைந்து, திருக்கோயிலினுள்வந்து, கட்குடிமயக்கத்தாற் சந்நிதியினின்றுவிடியுமளவும் நிர்த்தனஞ்செய்து கட்குடிமயக்கந்தெளிந்து கீழேவிழுந்து மரணமூர்ச்சையடைந்தான். அப்பொழுதுபரமசிவன்தாரகமந்திரத்துடன்பஞ்சாக்ஷரமந்திரத்தை வலதுசெவியில் உபதேசிக்க மரணமானான். உடனேசிவகணங்கள்வந்து விமானத்திலேற்றிக்கைலாசங்கொண்டுபோயிரண்டுகற்பம்வைத்திருந்து, வைகுந்தத்திற்கனுப்பினார்கள். வைகுந்தத்திலிரண்டுகற்பம்வைத்திருந்து, சத்தியலோகத்திற்கனுப்பினார்கள். ச

த்தியலோகத்திலொருகற்பம்வைத்திருந்து, சொர்க்கலோகத்திற்கனுப்பினார்கள். சொர்க்கலோகத்திலொரு கற்பம் வைத்திருந்து, பூலோகத்திற்பஞ்சநதத்திற்கனுப்பினார்கள். பஞ்சநதத்தில்வந்து, பூர்வஜன்மநினைவுடன் பிராமணனாக பிறந்து, வேதவிருப்பனென்னும் பெயர்பெற்றுச் சகல வேதசாஸ்திரங்களையுங்கற்றுச் சிவசந்நிதியில்நித்தியம் கீர்த்தனஞ்செய்வதுமன்றி, ச் சிவராத்திரிபுண்ணியகாலத்தில் விசேஷகீர்த்தனஞ்செய்தான். அப்பொழுதவன்தந்தையாகி யகுணநிதியென்னும்பிராமணன் புத்திரனைநோக்கி வேதவிருப்பனே! சகலதருமங்களுமிருக்க அவைகளைவிட்டு நீ கீர்த்தனஞ்செய்யவேண்டிய காரணம் யாதென்று கேட்க, வேதவிருப்பன் தந்தையைநோக்கி ஐயா! நான்பூர்வஜன்மத்தில மதுவென்னும்பெயரையுடையசூத்திரனாகப்பிறந்து, கட்குடிமயக்கத்தால்சிவசந்நிதியில்சிவராத்திரி புண்ணியகாலத்தில்மறுநாட்சூரியோதயபரியந்தம்கீர்த்தனஞ்செய்துமயக்கந்தெளிந்து, கீழேவிழுந்துமரண மடைந்தேன். சிவராத்திரிபுண்ணியகாலத்தில் சிவசந்நிதியில் கீர்த்தனஞ் செய்தபுண்ணியத்தால் கைலாயத்திலிரண்டுகற்பமும்வைகுந்தத்திலிரண்டுகற்பமும் சத்தியலோகத்திலொருகற்பமும்சொர்க்கலோகத்திலொரு கற்பமும்வசித்துப் பிறகு உமக்குபுத்திரனாகப்பிறந்து பூர்வசென்மவாசனையால்கீர்த்தனத்திலென்மனம் பிரவேசித்து கீர்த்தனஞ்செய்கின்றேனென்றுசொல்லிமரணமடைந்து, சிவலோகம்பெற்றான்.

௩௬-வது அத்தியாயம்.

முற்றிற்று.



# ௧௭-வது சிவராத்திரி மகிமை யுரைத்த அத்தியாயம்.

முக்குற்ற நீக்கினவர்களும், சுவையொளியூறு ஓசைநாற்றமென்னு மைந்தின்வகைதெரிந்தவர்களும், வேதவிதிதவருதவர்களும், சாபால உபநிஷத்திற் சொல்லியவாறுவிபூதிருத்திராக்ஷந்தரித்தவர்களும், சிவலிங்கார்ச்சனையுள்ளவர்களும் நித்தியகர்மானுட்டான நெறியுள்ளவர்களுமான துர்வாசர்-கௌதமர்-அத்திரி-சதாநந்தர்-ததீசி-வசிஷ்டர்-பிருகு-குச்சர்-காசிபர்-ஆங்கிரசுமுதலான மகரிஷிகள்முத்தியடையவேண்டிய மார்க்கந்தெரிந்துகொள்ளப்பஞ்சநதக்ஷேத்திரத்திலிருந்து, பரமசிவனைத்தியானித்து தவஞ்செய்தார்கள். அப்பொழுது பரமசிவனிவர்கள்செய்யுந்தவத்திலானந்தமடைந்து, நந்தி-பிருங்கிமுதலான சிவகணங்கள்சூழ உமாசமேதரா ரிஷபத்தின்மேலாரோகணித்துமகரிஷிகளுக்குப்பிரத்தியக்ஷமாக, மகரிஷிகள்தெரிசித்துப்பிரதக்ஷிணநமஸ்கார ஸ்தோத்திராதிகள்செய்துவாயபொத்திக்கைகட்டி, நின்றுபரமபதியே! நாங்கள்சம்சாரவாதைநீங்கி முத்தியடையுமார்க்கத்தைச் சொல்லியருளவேண்டுமென, பரமசிவன்மகரிஷிகளே! மாசிமாதங்கிருஷ்ணபக்ஷம் சதுர்தசியிரவை எல்லவுயிர்களுங்கடைத்தேறும்பொருட்டுச் சிவராத்திரியென்றெம்மால் நிர்மிக்கப்பட்டிருக்கின்றது. அன்றைத்தினமுபவாசமிருந்து, காவேரியிற்றிரிகாலஸ்நானஞ்செய்து, வில்வமுதலானபத்திரங்களைத்தெத்து, இராத்திரி நாலுசாமம்பூசைபண்ணி, நாலாவதுசாமத்திற்றிருக்கோயிலையடைந்து, நமதுசொரூபமாகிய சிவலிங்கப்பெருமானை மல்லிகை சண்பகமுதலான வாசனைபுஷ்பங்களாலருச்சித்து, நிவேதனாதிகள்செய்து, பரமசிவனு

க்கும் பிராமணனுக்கும் லோபகுணமின்றிச்சொர்னதான ங்கொடுத்து,ஊர்த்துவபுண்டராந்தரித்தவர்-துலுக்கர் — சண்டாளர்-சங்கரஜாதியார்-முதலானபாபிகளுடன் வார்த்தைசொல்லாமல் மறுநாட்பாரணைசெய்து விரதத்தைமுடித்தவர்கள், நரகவாதை-கெர்ப்பவாதை- முக்கடமை-பஞ்சமகாபாதகம் நீங்கிமுத்தியடைவது சத்தியம். இப்படிக்கில்லாமலன்றுபோசனஞ்செய்து விரதமில்லாதிருந்தவர்கள் மலபோசனஞ்செய்துதிரிகின்ற துர்ப்பீஜர்களென்பதற்குச் சந்தேகமில்லையென்றுசொல்லி மறைந்தருளினர். அதன்பின் மகரிஷிகள் பரமசிவன்சொல்லியவாறே சிவராத்திரிவிரதத்தைமுடித்துச் சிவலோகமடைந்தார்கள்.

கூஎ-வது அத்தியாயம்.

முற்றிற்று.

---

பஞ்சநதமான்மியம்





# ஜப்பியேச்சுரமான்மியம்.

## புராணவரலாறு.



திருமாதுக்கிருப்பிடமும், சிவப்பிராப்திக்கேகசாதனமும், சகலபாபப்பிரசமனமும், நிகிலகாமபலத்தைக்கொடுப்பதும், தெரிசித்தளவில் மோக்ஷத்தைக் கொடுப்பதும், புராதன தேவாசுரர்களாற் பூசிக்கப்பட்ட பரமசிவன், தன்னடியவர்களுக்கு முத்திகொடுக்க வெழுந்தருளியதுமான ஜப்பியேசுரத்தில், ஸ்ரீமானும், சிவப்பிரியரும், சாவகருமம், மகாயோகியும், இந்திரியநிக்கிரகரும், சகலஜீவர்களிடத்திலு மிரக்கமுள்ளவரும், சமுத்திரத்தை யாசமனஞ்செய்தவரும், வேதவேதாந்த-புராண-இதிகாச-தர்மசாஸ்திரமுதலியவைகளை ஐயந்திரிபறவுணர்ந்தவருமான அகஸ்தியமகாமுனிவர் தவஞ்செய்துகொண்டிருந்தார். அப்பொழுது பரமசிவன் பிரசன்னமாக, அகஸ்தியர் அவரைத்தெரிசித்தானந்தத்திலுல அடிக்கடி நமஸ்கரித்து, உபநிஷத்தாற் றோத்திரஞ்செய்து, சூரியபுஷ்கரணிதீர்த்தத்தாற்பாதத்தைவிளக்கி, யத்தீர்த்தத்திலுண்டான புஷ்பங்களாலர்ச்சித்து, அஞ்சலிபந்தனத்துடனெதிர்நின்று சுவாமி ! தேவரீர்திருவடியைத்தவிர வேறொன்றுந்தெரியாதிருக்க வாமனரூபத்தையும், புத்தி முத்தி சாதனமாகவுள்ள பத்தியையும், அடியேனுக்களி

த்தருளவேண்டுமெனப் பரமசிவன் அகஸ்தியரே! இந்தச் சூரியபுஷ்கரணிதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்வீரேல் யாவுங்கிடைக்குமென்றுசொல்லி, மறைந்தருளினார். அதன்பின் அகஸ்தியர் பரமசிவன் சொல்லியவாறே சூரியபுஷ்கரணிதீர்த்தத்தில முழ்கியெழுந்து, தான்கைலாசகிரத்திலுசசியிலிருந்ததைக்கண்டு, மிகுந்த வாச்சரியமடைந்து, பரமசிவனைத்தெரிசித்துச் சுவாமி! அடியேனையிரக்ஷித்தருளவேண்டுமென்றார். பரமசிவன் ஜீவன்முத்தித் திசையைகொடுத்தருளினார். அப்பொழுதுபரமசிவன், அகஸ்தியருக்கனுக்கிரகஞ் செய்வதைப்பார்க்க முப்பத்துமுக்கோடிதேவர்கள் நாற்பத்தெண்ணாயிர மகரிஷிகள் சித்தவித்தியாதராதி சகலருமங்கு வந்திருந்தமையால் வடதிசைதாழ்ந்து தென்றிசையுயர்ந்தது. அதைப்பரமசிவன் கண்டு, யுகப்பிரளய நேரிடுமென்று யோசித்து, அகஸ்தியரையருகழைத்து,த் தமிழிலக்கணத்தை யுபதேசித்துப், பொதிகைமலைக்குப்போகும்படி கட்டளையிட்டருளினார்.

அவ்வாறே யகஸ்திடர் மலயாசலத்துக்கு வருமார்க்கமத்தியில்அனேகர்க்கிடையூறுகவிருந்தவிந்தகிரியைப் பூமியிலமுத்தி, இல்வலன் வாதாபியைக்கொன்று; காணவித்யைத்தானுமன் பெரியவனென்று விவாதப்பட்டுக்கொண்டிருந்த தும்புருநாரதாருகிற்போனார். அவ்விருவருந்தங்கள்விவகாரத்தைச்சொல்ல,அவாகள் கையிலிருந்ததாளங்களிலொவ்வொன்றைவாங்கித் தான்கானஞ்செய்து, அவ்விடத்திலிருந்த பளிங்குமலையையுருகச்செய்து, தாளத்தையதிலெறிந்து கானத்தைநிறுத்தினார். உருகினபளிங்குமலைதாளத்தைப்பிடித்துக்கொண்டு கெட்டியாய்விட்டது. அப்பொழுது

அகஸ்தியர் தும்புருநாரதரை நோக்கி நீங்கள்பாடிமலையை யுருகச்செய்து, தாளத்தையெடுத்துக் கொள்ளுங்களென் றுசொல்லினர். அவ்வாறே தும்புருநாரதரிருவருந்தனித் தனி பாட; மலையுருகாமையை அகஸ்தியர் கண்டு, நீங் களிருவருங் கானவித்தையிற் சிறந்தவர்களல்லரென் றவர் கள்கெருவத்தைத்தணித்துத் தான்பாடிமலையையுருகச்செ ய்து, பலகையாகத் தாளத்துடன்சேர்த்துக்கொண்டுபோ ய் மதுரைமாநகரத்திற் சாரதாபீடமாக விருத்தி; த் திருக்கு ற்றாலமடைந்துஅங் குள்ளவிஷ்ணுவைத்தெரிசனஞ்செய்ய க்கோயிலினுள்ளேபோவதைச் சங்குச்சக்கர யோனிமூத்தி ரை தரித்தங்கிருந்த சில வைணவர்கள் அகஸ்தியர் தரித் திருந்த சிவச்சின்னங்களைக்கண்டு உள்ளேபோகக்கூடா தென்று தடுத்தார்கள். உடனேவெளியில்வந்து சற்றுநே ரமிருந்துவிஷ்ணுச்சின்னங்களைத் தரித்துக்கொண்டுகோ யிலினுள்ளேபோவதை முன்றடுத்த வைணவர்கள்கண்டு விஷ்ணுபத்தரென்றுவிட்டுவிடஉள்ளேபோய்ப்பஞ்சாக்ஷ ரமந்திரப் பிரபாவத்தால்விஷ்ணுவைச்சிவலிங்கமாக்கினர். அதைக்கண்ட வைணவர்கள் வயிற்றிலும் வாயிலுமடித் துக்கொண்டு அவ்வூரைவிட்டோடினார்கள்.

அதன்பின்அகஸ்தியர் மலயாசலத்தையடைந்து தன் மாணாக்கர் பன்னிருவருக்குந் தமிழிலக்கணம்போதித்துச் சிலகாலமிருந்து சமுத்திரதீரவழியாகச் சுவேதாரணியஞ் சென்றுஸ்வாமிதெரிசனஞ் செய்திருக்குங்காலத்திற் சமு த்திரராஜன்வந்து அகஸ்தியரைவணங்கிநின்று தயாமூர்த் தியே! சையகிரியிலிருக்கும் கவேரராஜபுத்திரியாகிய கா வேரியை அடியேனுக்குவிவாகஞ்செய்துவைக்க வேண்டு

மென்றுகேட்க, அவ்வாறே செய்கிறேமென்று சையகிரி யையடைந்து கவேரராஜரிஷியைக் கண்டு சமுத்திரராஜன் சம்பந்தத்திற்குடன்படுத்திக் காவேரியோடுமூவரும்ப ஞ்ச நதத்தையடைந்து, சுவாமிதெரிசனஞ்செய்துகொண்டுபுற ப்படுகையிற் காவேரிபஞ்சநதத்தைவிட்டுவரமாட்டேனெ னறுசொல்ல, ப்பரமசிவனுற்காவேரியைச்சமாதானப் படு த்தியழைத்துக்கொண்டுபோய்ச் சமுத்திரராஜனுக்குவிவா கஞ்செய்துவைத்துக் கவேரராஜரிஷியைச் சையகிரிக்கு ப்போகும்படி விடைகொடுத்திருக்கும்பொழுது சமுத்திர ராஜன்வணங்கிநின்றுஸ்வாமி! தாஙகள்சையகிரிக்குப் போ யவருவதற்கிவ்வளவு காலதாமதமானகாரணம் அடியே னுக்குச்சொல்லியருளவேண்டுமென்று கேட்க, அகஸ்தியர் சமுத்திரராஜனே! காவேரிபஞ்சநததில்வந்திருந்து கொ ண்டுவரமாட்டேனென்றுசென்னதால் இவ்வளவுகாலத் தாமதமானதென்றுசொல்லச் சமுததிரராஜன் சுவாமிமல யமுனிவரே! பஞ்சநதமான்மியத்திற் சில, அடியேனுக்கு ச்சொல்லியருளவேண்டுமென்றுகேட்க அகஸ்தியர் சமுத் திரராஜனுக்குச்சொல்லததொடங்கினர்.

கஉ-வது புராணவரலாறுரைத்த அததியாயம் முற்றிற்று.



## உ-வது சிலாதமுநிவர்புத்திரனடை ந்த அத்தியாயம்.

சிலாதமுனிவரானவர், வசிஷ்டர் - வாமதேவர்

முதலானமகரிஷிகளால ஜெபததுககுயோககிய மென று நிசசயிததஜெபபியேசசுரததில சூரியபுஷகரணி தீரததது லிருநதுதவஞசெயதார அப்பொழுதுபரமசிவனபிரசன்ன மாகிமகாபபிரளய காலததிலுமழிவிலலாத நிததியததுவ த தையளிததுமறைநதருளினார. அதனபினசிலாதர் நெடுஙகா லஞசெபபியேசசுரததில வசிததுசசுவேசசையாற சொரக காதிபுவனஙகளைபபாாககவேணடுமெனறு, முதலநரகலோ கததைபபடைநது, அநதவுலகததரசனாகிய எமதருமரா ஜனை பபாாததார பாாததவுடனெமதருமராஜனெழுநது அா ககியபாததிய ஆசமனீயஙகளாலுபசரிததுத தாஙகளிங்கு வநதகாரியந தெரிவிததருள வேணடுமெனறான. சிலாதா தருமராஜனே! நான பிக்ஷாகபபிராமணனபலிபபாதத ரததிறகலலைபபோடடேன. அநதபபாவததாறகறகளைப பொடிபணணிபபுசிததுத தவமபணணினேன. அதனாற சிலாதவெனறெனககுபபெயாவநததுநதவிர உனபடடண ததைநானபாாகக தமளவுஞசிலாசனததுவமெனககிருககுமெ னறுபரமசிவனசொனனதா லுனபடடணததைப பார்கக வநதேனெனறுசொனனார. தருமராஜன மகரிஷியே! பா ாககச்சகிககமுடியாத வெனபடடணததைத தாஙகளெவ வாறு பாாககபபோகிறீர்களெனறுசொலலித தூதாகளைய ழைததுநீங்கள சிலாதமுனிவரை யழைததுககொணடுபோ யெனனுலகவைபவங்கள யாவையுஙகாட்டுஙகளெனறுததி ரவுபணணினான. அவவாறே தூதாகள சிலாதரையழைத துககொண்டுபோய ஒவவொருநரகஙகளையுங காட்டச சி லாதாபாாதது, மிகுநததுககமடைநது வேறோாநரகததை பபாாகக அநதநரகததிலிருநது சகிககமுடியாத வாதைய

டைகின்ற சனங்களைக்கண்டு, இதென்ன நரகமென்று தூதர்களைக்கேட்டார். அப்பொழுது துன்முகனென்ற தூதன் புத்திரரில்லாதவர்களடையும் புன்னாம நரகமென்று சொன்னான். சொன்னவுடன் சிலாதர் மனநடுங்கியிருந்துக் கொடிய நரகலோகத்தைவிட்டுப் பூமியிற் ஜப்பியேசுவரமடைந்து, சூரியபுஷ்கரிணி தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, நித்தியகருமங்களைமுடித்துத் திருக்கோயிலினுட்சென்று, பிரதக்ஷிணநமஸ்காரஞ்செய்துகொண்டு வெளியில்வந்து, சூரியபுஷ்கரணிக்கரையிற் பஞ்சாக்ஷரிமந்திரியினின்று நெடுங்காலந்தவசுசெய்தார். அப்பொழுதுபரமசிவன் பிரசன்னமாய்ச்சிலாதரேயென்றுவிளிக்கக் கண்ணைத்திறந்து பரமசிவனைக்கண்டு, நமஸ்கரித்து ஸ்தோத்திரம்பண்ணினார்.

பரமசிவன் சிலாதரே! யுமக்குவேண்டியதைச் சொல்லுமென்றார். சிலாதர் சுவாமிபரமபதியே! அயோனிசம்பந்தனாகவுஞ் சகலகலைஞானங்களுந் தெரிந்தவனாகவுமோர் புத்திரனை நானடையும்படி யனுக்கிரகஞ்செய்யவேண்டுமென்றார். அப்பொழுதுபரமசிவன் சிலாதரே! புத்திரகாமேஷ்டி செய்வீரேற் பதினாறுவயது பூரணாயுளாகவுள்ளவோர் புத்திரனையெமதனுக்கிரகத்தாலடைவீரென்றுசொல்லி மறைந்தருளினார். அதன்பின் சிலாதமுனிவர் புத்திரகாமேஷ்டி செய்ய, அந்தணர் வாசஞ்செய்யுமக்கிரகாரஞ்சென்று ஸ்தலசுத்திசெய்வதற்குக் கலப்பையாலுழுங்காலத்திற் கொழுமுனையில், நவரத்தினங்களிழைத்தக்ப்பெட்டியொன்றகப்பட்டது. அதைக்கண்டு மிகுந்த வாச்சரியமடைந்து பெட்டியைத்திறந்து பார்க்கையில் சோதிமயமாகிய திருமேனியும்; திரிநேத்திரமும், சதுர்ப்பு

புயமும், சிரசசந்திரனுமுள்ள பரமசிவனைக்கண்டு நமஸ்கரிதுதிற்கையிற் சிலாதரே! பெட்டியை மூடித்திறந்தாலுமமுடைய அபிப்பிராயப்படி புத்திரனாகத் தோன்றப்படுமென்றாகாயத்திலசரீரி யுண்டானது. அவ்வாறே பெட்டியைமூடித்திறந்து, சூரியோதயம்போலோராண்குழந்தையைக்கண்டு, பேரானந்தத்துடன் கையாற்றூக்கித் தன்மார்போடணைத்துக்கொண்டு கிரகமடைந்து, மனையாளாகிய சாருலக்ஷணைகையிற் கொடுத்தனர்.

உ-வது அத்தியாயம்
முற்றிற்று.



## ௩-வது சைலாதிசிவகணாதிபத்தியம்பெற்ற அத்தியாயம்

சிலாதமுனிவர்கொண்டுவந்துகொடுத்தகுழந்தையைச்சாருலக்ஷணைவளர்த்து, அருமைபாராட்டி வருங்காலத்திற்சிலாதமுனிவர்ஜாதகர்மஞ்செய்து, சைலாதியென்று நாமமிட்டுஉபநயனஞ்செய்துசகலவேதபுராணங்களுங்கற்பித்துவருகையிற், பரமசிவன்முன்சொல்லியபதினாறுவயதிற்குப் பதினான்குவயதாயவிட்டது. இன்னுமிரண்டுவயதுதானேயிருக்குதென்று யோசித்து மிகுந்த துக்கமுடையவராகவிருந்தார். அப்போது அவர்மனையாள் சாருலக்ஷணை சிலாதரைவணங்கிச் சுவாமி! தாங்கள்மிகுந்ததுக்கமடைந்திருக்

வின்றகாரணத்தைத்தெரிவித்தருள வேண்டுமென்றுகேட்கச்சைலாதர்பெண்ணே! நமதுகுமாரன் மரணத்திற்கின்னமிரண்டுவருஷந்தானிருக்கிறதென்று சொல்லினார். அதைக்கேட்டுச் சாருலக்ஷணையுமிகுந்ததுக்கமடைந்திருந்தாள். சைலாதிதாய்தந்தையிருவரும் துக்கமடைந்திருப்பதை தெரிந்து, நீங்கள்துக்கமடைந்திருப்பது யாதுகாரணமென்றுவினவ, அவர்கள் நிகழ்ந்ததைச்சொல்லப் புன்னகையுடன் தாய்தந்தையரைநோக்கி ப்பரமசிவனனுக்கிரகத்தாலென்றுஞ்சாவாவரத்தைப்பெறுகிறேனென்றுசொல்லிச்சூரியபுஷ்கரணியையடைந்து, கழுத்தளவுசலத்தினின்றுசிரமேற்கைகளைக்கூப்பிவடதிசையைநோக்கி ப்பரம சிவத்தியானத்துடன் அக்ஷரலக்ஷமாகும்படி ஸ்ரீருத்திரமந்திரத்தைசெபித்தார். அப்பொழுதுஉமாதேவியார் பரமசிவனைப்பணிந்துநின்று சுவாமி! யாவராலுஞ் செய்தற்கரிய தவஞ்செய்யுஞ்சைலாதிக்குக்காலதாமதமின்றி யனுக்கிரகஞ்செய்யவேண்டுமென்றுசொல்லப் பரமசிவனவர் பிரமா-விஷ்ணு-இந்திரன்முதலான அஷ்டதிக்குபாலகர்-முப்பத்துமுக்கோடிதேவர்கள்-நாற்பதெண்ணாயிரமகரிஷிகள் சித்தர்-சாத்தியர்-கெந்தருவர்- உரகர்- அப்சரசுகள்-வித்தியாதரர்புடைசூழ வீணை-வேணு-மிருதங்க முதலான பதினெண்வாத்தியங்கள்முழங்க ரிஷபாரூடராகப் பிரசன்னமாகிச்சைலாதியருகில்வந்து, சைலாதியேயுன்னரிய தவத்தால்யாமானந்த மடைந்ததுமன்றியுனக்குச் சாரூபபதவியையுமளித்தனமென்று சொல்லிச்சைவதீக்ஷையோபெஞ்சநதியாலபிஷேகஞ்செய்துநந்திகேசுவரரென்று தீக்ஷா

நாமம்ஸ்வதந்திர நந்திகேசுவரரோடுகைலாயமடைந்தார்.

௯-வது அத்தியாயம்.

முற்றிற்று.



## ௪-வது நந்திகேசுவரருக்குமணம்புரி அத்தியாயம்.

பரமசிவன் நந்திகேஸ்வரரோடுகைலாயமடைந்தபொழுது பார்வதிதேவியார் இருவரையும்வேறுதெரியாமல்மயங்கஅதைபபரமசிவன்றறிந்து, பெண்ணே யுன்மனதிலுண்டான சந்தேகத்தைச்சொல்லென்று கேட்கப்பார்வதிதேவியாரொன்றுஞ் சொல்லாதிருந்தார்-அதைநந்திதேவர் தெரிந்து எழுந்துபரமசிவனை நமஸ்கரித்து சுவாமியடியேனுக்குமுகத்தில்வானரரூபத்தை யளித்தருளவேண்டுமென்றுகேட்கப்பரமசிவன்நந்தியே! நீ ஜெப்பியேச்சுரமடைந்து சூரியபுஷ்கரணி தீர்த்தத்தில் முன்போற்றவஞ்செய்; யாமங்குவந்து வானரரூபத்தைக்கொடுக்கின்றோமென்றுசொன்னார். உடனே நந்திகேசுவரர்கைலாயமலையைவிட்டுச் செப்பியேசுவரமடைந்து, சூரியபுஷ்கரணிதீரத்திலிருந்துதவஞ்செய்தனர். அப்பொழுதுபரமசிவன் பிரசன்னமாகி நந்தியே இலங்கையரசனாகிய இராவணனுக்கும் பார்வதிதேவியாருக்கு முன்னுடையமுகம் வானரரூபமாகவும் மற்றவர்களுக்கெல்லா மெம்முடைய முகம்போலவுந் தோன்றக்கடவதென்றுசொல்லி, உடை

வாளும் இரத்தினவேத்திரமுங்கொடுத்து, எப்பொழுது மெமதுசந்நிதானத்தைவிட்டு நீங்காதிருவென்று நந்திகேசுவரரோடு கைலாயமடைந்தார். பரமசிவன் நந்திகேசுவருக்குச்சை சிவதீக்ஷைசெய்ததைச் சனற்குமாரமகரிஷி ஞானதிருஷ்டியாற்றெரிந்து கைலாசம்வந்து நந்திகேசுவரரனுமதியாற் பரமசிவன்சந்நிதியையடைந்து நமஸ்கரித்தெழுந்துநின்றுபரமபதியே! அடியேனுக்குச்சைவதீக்ஷைசெய்தருளவேண்டுமென்றுசொல்லச் சுவாமி நந்திகேசுவரரையழைத்து நந்தியே! இவருக்குக் கலாசோதனைசெய்து தீக்ஷைசெய்யென் றுத்திரவுகொடுக்க, அவ்வாறேதீக்ஷைசெய்தவரை யனுப்பியிருக்குங்காலத்திற் பரமசிவன நந்திகேசுவரருக்கு விவாகஞ்செய்ய வேண்டுமென்று விடையிலாரோகணித்து, வசிஷ்டாசிரமமாகியதிருமழபாடியையடைந்து, வசிஷ்டரைக்கண்டு வசிஷ்டரே! உமதுபுத்திரியாகிய சுபசையை நமதுபக்தனாகிய நந்திக்குவிவாகஞ்செய்துகொடுக்கவேண்டுமென்றுசொல்ல வசிஷ்டர்நமஸ்கரித்தெழுந்துநின்று, சுவாமி! தேவரீர்திருவாக்குக்கெதிருண்டோவென்றுசொன்னார். உடனே பரமபதியானவர் கைலாயம்போய் நந்திகேசுவரரை யழைத்துக்கொண்டு திருமழபாடிவந்து, பங்குனிமாசம்- சுக்கிலபக்ஷம்- தசமி- புனர்பூசநக்ஷத்திரத்தில் நந்திகேசுவரருக்குச் சுயசையை விவாகஞ்செய்வித்தார்.

௪-வது அத்தியாயம்

முற்றிற்று.



# ௫-வது நந்திகேசுவரர் திருமணபப வனிச்சிறப்புரைத்த அத்தியாயம்.

பரமசிவன்நந்திகேசுவரருக்கு விவாகமுடித்துக்கொண்டு சிலாதமுனிவருடன் ஜப்பியேச்சுரம்வந்து நந்திகேசுவரரைக் கௌசிகாதிமுனிவருக்குக்காண்பிக்கும் பொருட்டுநந்திகேசுவரரைமுன்விட்டுச் செப்பியேசுரத்தைவிட்டுப் புறப்பட்டுச் சகலவாத்திய கோஷங்களுடன் கௌசிகாச்சிரமமாகியதிருப்பழனத்தையடைய, அங்கெழுந்தருளியஆபத்சகாயர் எதிர்வந்தழைத்துக்கொண்டுபோயுபசாரஞ்செய்துவழிவிட; அவ்விடம்விட்டுப் புறப்பட்டுக் காவேரிநதியைத்தாண்டிக் கௌதமாசிரமமாகிய திருச்சோற்றுத்துறையையடைய, அங்கெழுந்தருளிய ஓதனவனேசுவரரெதிர் வந்தழைத்துக் கொண்டுபோயுபசரித்துவழிவிட; அவ்விடம்விட்டுப்புறப்பட்டுவியாசாச்சிரமமாகியதிருவேதிகுடியையடைய, அங்கெழுந்தருளிய வேதநாயகரெதிர்வந்தழைத்துக்கொண்டுபோயுபசரித்துவழிவிடவவ்விடம்விட்டுப்புறப்பட்டு உத்தமமானபச்சிமத்துவாரசந்நிதியையுடையதிருக்கண்டியூரையடைய, அங்கெழுந்தருளியவீரட்டேசுவரரெதிர் வந்தழைத்துக்கொண்டு போயுபசரிக்க சற்றுநேரமங்கிருந்துசூரியாபிமுகமாக வீரட்டேஸ்வரர்வழிவிட;அவ்விடம்விட்டுப்புறப்பட்டுத் திருப்பூந்துருத்தியடைய,அங்கெழுந்தருளிய புஷ்பவனேசுவரரெதிர்வந்தழைத்துக்கொண்டுபோயுபசரிக்கச்சற்றுநேரம் புஷ்பவனேசுவரமண்டபத்திலெழுந்தருளிநடனாதிவைபவங்களையனுபவித்துப்புஷ்பவனேசுவரர்வழிவிட; அவ்விடம்விட்டுப்புறப்பட்டுக் காவேரிநதியையடைந்துஅந்நதியின்மத்தியில் ம

ந்தமாருதம்வீசக்கொஞ்சநேர மெழுந்தருளியிருக்கும்பொ ழுது திருநெய்த்தானத்திலெழுந்தருளிய மிருதத்தாளே சு வரரெதிர்வந்தழைத்துக் கொண்டுபோயுபசரித்தது வழிவிட, ப்பல்லாயிரங்கோடி ஜீவட்டிமத்தாப்புவாணங் களுடன் வேதியர்வேதகோஷமுழக்க, மூவர்திருவாயமலர்ந்தருளிய தேவப்பண்களையுடைய தேவாரங்களைத திருக்கூட்டத்தார் முழங்கவுஞ் சகல வைபவங்களுடன்ஐப்பியேச்சுரமாகிய திருவையாற்றை யடைந்தார். இந்தத் தேவவைபவ வுச்ச வ தினத்தில் காவேரிஸ்நானஞ்செய்து, தன்னாலியன்ற பொருளையுத்தமர்களுக்குத் தானமாகக்கொடுத்து, மௌன விரதத்துடன் பரமபதியோடு சத்தஸ்லத்தைப்பிரதக்ஷிண மாகவந்தவர்கள் மறுவருஷத்திற்குள்ளாகப் புத்திரப்பே றுமுதலான செல்வங்களையடைவது சத்தியம்.

ரு-வது அத்தியாயம்
முற்றிற்று.



## சுஎ-வது நியமேசர் திருப்பணிசெய்த அத்தியாயம்.

பூர்வத்தில் நியமேசரென்னும் மகாயோகியொருவ ர் காவேரிநதித்தென்கரையிலிருந்தசிவாலயத்திற்சிவபணி விடைசெய்துகொண்டிருந்தனர். அப்பொழுதுசூரியகுல திலகனாகிய ரிபுவென்னுஞ்சோழராஜன் நியமேசரிடம்வந் து சுவாமி! அடியேன்கிரகத்தில் மத்தியானப்போசனஞ் செய்துகொள்ள வேண்டுமென்றுபிரார்த்திக்க அதற்கி

லைசந்தனர். உடனேயரசன் கிரகத்துக்கேகிப் போசனஞ்செய்துகொண்டு வருவதற்குமுன் நியமேசர்யோகத்திலிருந்துவிட, அரசன்வந்து யோகிகள் கண்ணைத்திறவாமலிருப்பதைக்கண்டு அனேககாலங்காத்திருக்க, அரசனுக்குமரணகாலஞ்சமீபித்தது. அப்பொழுதுதன்குமாரனையழைத்துநியமேசர்கண்ணைவிழித்தவுடன்போசனஞ்செய்துவையென்றுசொல்லி மரணமடைந்தான். அதன்பின் தந்தைசொல்லியவாறேஅனேககாலங்காத்திருந்தும், நியமேசர் கண்ணைத்திறவாமையைக்கண்டு, தன்புத்திரனையழைத்துத்தந்தைசொல்லியபிரகாரம் புத்திரனுக்குச்சொல்லிமரணமடைந்தனன். அவனுமனேககாலங் காத்திருந்து மரணமடைந்தனன். நியமேசர் அனேககற்பகாலங் கண்ணைத்திறவாமலிருக்க, ஆலயத்தோடு நியமேசரையுமூடிக்கொண்டிரண்டுபனைமரப்பிரமாணம் மேடுயர்ந்துவிட்டது. அப்பொழுதரசுசெய்திருந்த அசிதவசியென்னுஞ்சோழராஜன் சதுரங்கசேனையுடன் புறப்பட்டுத்திக்குவிசயஞ்செய்துகொண்டு, காவேரிநதித்தென்கரைவழியாக இரதத்தைநடத்திக்கொண்டுவருகையி லிரதந்தடைபட்டுநின்றது. உடனேயரசன் மந்திரிகளையழைத்து மந்திரிமார்களே! நமக்கிதுவரையிலும் யாதோரிடையூறுநேர்ந்ததில்லை. இன்றுயாதுகாரணமோ இரதம் போகாமற்றடைபட்டு நிற்கின்றதென்றுசொல்ல, மந்திரிகள் அரசனே! ஈதோர்புண்ணியக்ஷேத்திரமாகவிருக்க வேண்டுமென்றுசொல்ல, அரசன் சேனைகளைவிட்டுப்பூமியைவெட்டும்படி யுத்திரவுபண்ணினன். அவ்வண்ணமே சேனைகள் பூமியையிரண்டு பனை

மரப்பிரமாணம் பறிசக யோராலயத்தில்சிகரந்தோன்றியது. அதைச்சகலருங்கண்டானந்தமடைந்துபின்னுஞ்சோதிகக ஆலயத்தோடு நியமேசர் வெளிப்பட, அரசன் நியமேசரைக்கண்டு, பூமியிற்புதைந்திருந்த சடை-நகங்களைப்பிரித்துவிட்டு எதிர்நின்றான். அப்பொழுது நியமேசர்கண்ணைத்திறந்து அரசனே! காலைசொல்லியபடி போசனந்தயாராகவிருக்கின்றதா வென்றுவினவ, அரசன் றிகைத்துநின்றான். ஞானதிருஷ்டியால் நமக்குப்போசனஞ்சொன்னவரசனிவனல்ல; அவனிறந்துஅனேகயுகமாய்விட்டதென்றறிந்து, பின்னுமரசனைநோக்கி யரசனே! நமக்குமிகவும்பசியாகவிருக்கின்றது, போசனங்கொடுக்க வேண்டுமென்றுகேட்க, நியமேசருக்கு அப்பியஞ்ஞன ஸ்நானத்தோடுபோசனஞ்செய்துவைத்து இன்னுமென்னலாகவேண்டியதைச் சொல்லி யருள வேண்டு மென்று கேட்க, நியமேசர் கிருபாநோக்கஞ்செய்து அரசன்கையிலோர்கோலைக்கொடுத்து அரசனே! நீ யெவ்விடஞ்சென்றாலும் யாதோரிடையூறுமின்றி யிவ்வுலகத்தை யாளக்கடவாயென்றுவிடைகொடுக்க அரசன்நமஸ்கரித்துத் தன்னகரம்போய்ச்சேர்ந்தனன்.

அதன்பின் யோகீசுவரர் சிவத்தியானத்திலிருக்க அப்பொழுது பரமசிவன்பிரசன்னமாகி நியமேசரே! யென்றுவிளித்தார். நியமேசர்கண்ணைவிழித்துப் பரமசிவனைக்கண்டெழுந்து நமஸ்கரித் தஞ்சலிபந்தனத்துடனின்று; சுவாமி பரமகருணாநிதியே! அடியேனுக்கு ஸ்தூலதேகத்

தைநீக்கியருளவேண்டுமென்று சொல்லப் பரமசிவன் ஸ்தூலதேகத்தைநீக்கிச் சூக்ஷுமதேகத்தையளித்து, நியமேசரே! பிரளயகாலத்திலுநாசமில்லாத சப்தஸ்தலங்களில் முதன்மையான காவேரிநதிவடகரைக்கருகிலிருக்கின்ற ஜெப்பியேசுவரத்திற் றிரிசூலியென்னு நாமத்தையுடையநம்மைநீர்தெரிசித்து அந்தவாலயத்தை ஜீரணோத்தாரணஞ்செய்யவேண்டுமென்றுசொல்ல, நியமேசர் சுவாமி! காயக்கிலேசஞ்செய்துகொண்டு, மூன்றுசையையுந்துறந்து, தவஞ்செய்கின்றவென்னிடத்தில்ஜீரணோத்தாரணஞ்செய்யத்திரவியமில்லையே!யான்யாதுசெய்வேனென்றார். பரமசின் நியமேசரே! அந்த ஆலயத்தில் எம்முடைய ரிஷபத்தின் கால்கள் பதிந்து நாலு குண்டங்களாகவிருக்கின்றன. அவைகளில் ஒன்றிற்கருப்பஞ்சாறும், ஒன்றிற்கற்கண்டும் ஒன்றிற்சுண்ணாம்பும், மற்றொன்றிற் சொர்ணமுமிருக்கின்றன. அவைகளையெடுத்துத் திருப்பணி செய்யுமென்று சொல்லிமறைந்தருளினார்.

அதன்பின் நியமேசர் ஜெப்பியேசுரமடைந்து, பரமசிவன்சொல்லியபடி நாலுகுண்டங்களைக் கண்டானந்தமடைந்து, கெர்ப்பக்கிரகம் - ஆதிலிங்காலயம் - தெக்ஷிணாமூர்த்தியாலயம் சத்தமாதராலயம்- ஜெபமண்டபம்-மகிஷாசுரமர்த்தனியாலயம்-கெஜேந்திரலக்ஷுமியாலயம்-அமிர்தகூபம்-சண்டேசுவரராலயம்-சித்தேசராலயம்-நடராஜர்மண்டபம்- காலபைரவர் அஷ்டபைரவராலயம் விக்கினேசுவரராலயம்- சோமாஸ்கந்தமூர்த்தியாலயம்-சுப்பிரமணியராலயம் - ஏமதன்வந்திரியாலயம்-பள்ளியறை-ஸ்ரீ

ஷபமண்டபம் - அன்னபூரணேசுவரிமண்டபம். மடைப்பள்ளி-கீர்த்தனமண்டபம்-தென்கைலாயம்- வடகைலாயம் மூன்றுகோபுரம்-தெற்குவாசல் ஓலவிநாயகாலயம்-விசுவேசாலயம்-பொக்கிஷமண்டபம்- ஆபரணதேவதையாலயங்களுடன தர்மசம்வர்த்தனியாலயம்- கம்பாநதிசுடபமுதலானவைகளையும்புதுக்கிக் கும்பாபிஷேகஞ்செய்து, பரம்சிவன் சந்நிதானத்தில்வந்து நமஸ்காரஸ்தோத்திரஞ்செய்து பஞ்சாக்ஷரஜெபத்துடன் பஞ்சநதத்தில் வசித்தார்.

௬-வது அத்தியாயம்

முற்றிற்று.



## ௭-வது அப்பர்சுவாமிகளுக்குக் கைலாச தரிசனங்கொடுத்த அத்தியாயம்.

திருமுனைப்பாடி நாட்டிலே, திருவாமூரிலே வேளாளர்குலத்திலே குறுக்கையர் குடியிலேபுகழனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் மனைவியார்பெயர் மாதினியார். அம்மாதினியார் வயிற்றிலே திலகவதியாரென்கிறபுத்திரியார் பிறந்தார். அவர் பிறந்து சிலவருஷஞ்சென்றபின் சைவசமயம் அபிவிருத்தியாகும்படி, மருணீக்கியார் என்கிற புத்திரர் அவதரித்தார். அவருக்குத்தந்தையார் உரிய பருவத்திலே வித்தியாரம்பஞ்செய்வித்தார். மருணீக்கியார், தந்தையாருக்குப் பெருமகிழ்ச்சியுண்டாகும்

படி, பலகலைகளையுங்கிரமமாகக்கற்றுப் பரமசிவானுக்கிரகத்தால் அப்பரென்றும், வாகீசரென்றும் பேர்பெற்று, அனேக சிவஸ்தலங்களிற் சென்று, தேவாரப்பதிகங்கள் பாடிவணங்கிக்கொண்டு, தென்கைலாசமாகிய திருக்காளத்திமலையையடைந்தார். அங்கே பொன்முகலியிலே ஸ்நானஞ்செய்துகொண்டு, மலையின்மேல் ஏறி, சுவாமியைவணங்கித்திருப்பதிகம்பாடி, அவருடையவலப்பக்கத்திலே நிற்கின்றகண்ணப்பநாயனாருடைய திருவடிகளைவணங்கி, சிலநாள் அந்தஸ்தலத்திலே வசித்தார்.

பின் உத்தரகைலாசத்திலே பரமசிவன் வீற்றிருக்கின்ற திருக்கோலத்தைத் தரிசிக்க விரும்பி, திருக்காளத்திமலையினின்று நீங்கி, உத்தரதிசையிலிருக்கின்ற திருப்பருப்பதத்தை அடைந்து வணங்கி, திருப்பதிகம்பாடிச் சென்று, காசியைவணங்கிக்கொண்டு, அதற்கு அப்பாலிருக்கின்றகற்சுரத்திலே சாகமூலபலங்கள் போசித்தலையும் ஒழிந்து, திருக்கைலாசதரிசனஞ்செய்யவேண்டு மென்னும்பேராசையால் இராப்பகல் விடாதுநடந்தார். அதனாலவருடையபாதங்கள் பரடுவரைக்குந்தேய்ந்தன. தேய்ந்தும், ஆசைமேலீட்டினால்தம்முடையஇரண்டுகைகளையும், ஆதரவாகக்கொண்டுதாவிச்சென்றார். அந்தக்கைகளும்மணிக்கட்டு அசைந்து கரைந்து சிதைந்தன. பின்னும் ஆசைசிறிதுங்குன்றுதலின்றி மேலிடுதலால், கொடியநெருப்பையொத்த வெவ்வியபருக்கைக்கற்கள் பொருந்தியமார்க்கத்தில்மார்பினால்நகர்ந்து, போயினார். மார்புந்தசையுநைந்து சிந்தஎலும்புகளும் முறியலுற்றன. பின் புரண்டு புரண்டு போனார். அதனால்தேகமுழுதும் அரைய, நாயனார் திருக்கை

லாசகிரியினிடத்தே பதித்த அன்பின் உறுதியினால் மெல்ல நகருதற்கு முயன்றும், கூடாமையால் வழியிலே கிடந்தார். அப்பொழுது பரமசிவன், அப்பமூர்த்தியை மீளவும் தமிழ்நாட்டிற் செலுத்தி அந்நாட்டிலுள்ளோர் உய்யும்பொருட்டுத் தமிழ்வேதமாகிய தேவாரம் பாடுவித்தற்கும், அவ்வப்பமூர்த்தியுடைய கருத்தையும் மாற்றினறி முடிப்பதற்கும், திருவுள்ளங்கொண்டு, அவ்விடத்திலொரு தடாகத்தையுண்டாக்கி, ஒருமுனிவர் வடிவங்கொண்டு அந்நாயனாருக்கு முன்வந்துநின்று, நீர் அங்கங்களெல்லாம் அழிந்துபோக வருத்தத்தோடும் இந்தக்கொடிய காட்டில் எதன்பொருட்டுவந்தீரென்று கேட்டார். அப்பமூர்த்தி யாவுரியாடையையும் எஞ்ஞோபவீதத்தையும் சடைமுடியையும் விபூதிதாரணத்தையுமுடைய அந்தமுனிவனைக் கண்டபொழுதே பேசுதற்கு அர்பசத்தியுண்டாக, அவரை நோக்கி, "முனிவரே, நமது கடவுளாகிய பரமசிவன் உத்திரகைலாசத்தில் [illegible] தேவிசமேதராய் வீற்றிருக்கின்ற திருக்கோலத்தைத் தெரிசித்து வணங்கும்பொருட்டு விரும்பிவந்தேன்' என்றார். அதற்குமுனிவர் "தேவர்களாலும் அடையப்படுதற்கு அரிதாகிய திருக்கைலாசகிரி மனிதர்களால் அடையப்படுதற்கெளிதா? நீரிந்தக்கொடுஞ்சுரத்திலே வந்து என் செய்தீர்? இனித் திரும்பிவிடுதலே யுத்தமம்" என்றார். உடனே அப்பமூர்த்தி திருக்கைலாசகிரியில் இருக்கின்ற சிவபெருமானுடைய திருக்கோலத்தைத் தரிசித்தன்றி அநித்தியமாகிய இந்தத் தேகத்தைக்கொண்டு திரும்பேனென்று மறுத்தார். சுவாமி அவருடைய துணிவைக்கண்டு மறைந்தருளி, ஆகாயத்தில் அசரீரியாகிநின்று, நாவுக்கரசு

னே! எழுந்திரு என்றார். உடனே அப்பமூர்த்தி அழிந்த உறுப்புக்களெல்லாம் முன்போல் நிரம்பப்பெற்றுச் சிறந்த திருமேனியோடும் எழுந்து, சுவாமி! தேவரீர் திருக்கைலாசகிரியில் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோலத்தை அடியேன்தரிசித்து வணங்கும்பொருட்டு அருள்செய்யுமென்றுபிரார்த்தித்து, நமஸ்காரம்பண்ணினார். அப்பொழுது பரமசிவன் "நீ இந்தத்தடாகத்திலே முழுகித் திருவையாற்றையடைந்து,நம்மைக்கைலாசகிரியில் வீற்றிருந்தபடி அந்த ஸ்தலத்திலே தரிசித்து வணங்கு என்று பணித்தருளினார்.

அப்பமூர்த்தி அப்பணியைச்சிரமேற் கொண்டு, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஓதி, தடாகத்திலேமுழுகி.திருவையாற்றிலிருக்கின்ற ஓர்வாவியின்மேலே தோன்றிக் கரையிலேறி வழியிலே அந்தத்திருப்பதியிலுள்ள சராசரங்கள் தங்கள் தங்கள் துணையோடும்பொலிதலைக்கண்டு, அவைகளைச்சிவமும் சத்தியுமாகப்பார்த்து, வணங்கிக்கொண்டு, ஆலயத்துக்குமுன்னேசென்றார். அவ்வாலயம் திருக்கைலாசகிரியாகஅதனிடத்தே,வேதங் களுஞ்சிவாகமங்களும் இருபக்கத்திலும்வாழ்த்தவும், தும்புரு-நாரதரெனனும் இருவரும்யாழ்வாசிக்கவும், பிரம விஷ்ணுக் களிருவரும்வஸ்திரத்தைஓதுக்கி வாயைக்கையினாலேபொத்திக் கொண்டு ஓதுங்கிநின்று தத்தங்குறைகளைச் சொல்லவும்,பூதகணங்கள்கண்டகோறுங் காக்கவும், தேவர்-சித்தர்-அசுரர்-சாரணர்-காந்தருவர்-கின்னரர்-இயக்கர்-விஞ்சையர்-முதலாகியகணத்தவர்கள் துதிக்கவும், திருநந்தி தேவர் கையிலே

பிரம்பைத்தரித்துககொண்டு பணிசெய்யவும், காருண்ணி யஸ்வரூபியாகிய சிவபெருமான் ஒருதிவ்வியாசனத்தின் மேலேஅநந்தகோடி சூரியப்பிரகாசத்தோடும் பார்வதிச மேதராய் வீற்றிருந்தருளினர். அப்படியிருந்ததலே அப்ப மூர்த்திகண்டமாத்திரத்திலே விழுந்துநமஸ்கரித்து, உரை தடுமாற, உரோமஞ்சிலிர்ப்ப ஆனந்தவருவிசொரிய,கரை யிறந்தஅருட்பெருங்கடலிலேஅன்புநதி ஈர்த்துச்செல்ல, மிதந்துபோய,தெவிட்டுதலில்லாத அளவிறந்த சிவானந்தா மிர்தத்தைப் பருகி, சந்நிதானத்திலே ஆனந்தக்கூத்தாடி த்திருத்தாண்டகங்கள்பாடினர். திருக்கைலாச பதியாகிய கடவுள் தம்முடைய திருக்கோலத்தை இப்படி அப்பமூ ர்த்திக்குத்தெரிசிப்பித்து, பின்மறைந்தருள, அவ்வப்பமூர் த்திமனம்வருந்தி பின் ஒருவாறு தெளிந்து,திருப்பதிகங் க ள்பாடிக்கொண்டு, அந்தத்திருப்பதியில் இருந்தார்.

சிலநாட்சென்றபின், திருவையாற்றினின்றும் நீங்கி, திருநெய்த்தானம் திருமழபாடிமுதலியஸ்தலங்களை வணங்கிக்கொண்டு, திருப்பூந்துருத்தியைஅடைந்துசுவா மிதெரிசனஞ்செய்து,திருப்பதிகங்கள்பாடி, அங்கே ஒரு திருமடங்கட்டுவித்து, பல்வகைத்தாண்டகம் அடைவுதி ருத்தாண்டகம் திருவங்கமாலை முதலியதிருப் பதிகங்களை ப்பாடிக்கொண்டிருந்தார்.

இருக்கும்பொழுது, சீர்காழி என்னுஞ்சிவஸ்த லத்திலிருந்த சிவபாதவிருதயருக்குப் புத்திரராக அவதார ஞ்செய்தவரும், உமாதேவியார் திருமுலைப்பாலுண்டவரு மான திருஞானசம்பந்தமூர்த்திகள் அப்பமூர்த்தி திருப்பூ

ந்துருத்தியிலிருத்தலைக் கேள்வியுற்று, அதற்குச்சமீபத்தி
லேவந்தருளினார். அதை அப்பமூர்த்தி அறிந்து மனம
கிழ்ந்து, அவரை எதிர்கொண்டு வணங்கும்படிசென்று அ
வர்வரும் எல்லையையடைந்து, திருச்சின்னத்தின் ஓசை
யைக்கேட்டு அவரைத் தரிசிக்கும்படிசூழ்ந்தஅடியார்களு
டைய நெருக்கத்தினாலே தம்மை ஒருவரும் இன்னாரென்
று அறியாதபடி உட்புகுந்து, அவர் ஏறிவரும் முத்துச்சி
விகையைத் தாங்குகின்றவர்களோடு தாமும் ஒருவராய்த்
தாங்கிக்கொண்டு வந்தார். திருஞானசம்பந்தமூர்த்திநா
யனார் திருப்பூந்துருத்திக்குமிகச் சமீபித்தவுடனே ‘அப்பர்
எங்குற்றார்” என்றுவினவ, அதைக்கேட்ட அப்பமூர்த்தி
“அடியேன் தேவரீரைத்தாங்கிவரும் பெருவாழ்வைப்பெ
ற்று இங்குற்றேன்’ என்றார். உடனே திருஞானசம்பந்த
மூர்த்திநாயனார் அதிசீக்கிரஞ் சிவிகையினின்றும் இறங்கி
மனப்பதைப்போடு அப்பமூர்த்தியைவணங்க, இவருந் த
ம்மை அவர் வணங்குதற்குமுன் தாம்அவரைவணங்க அ
துகண்ட அடியார்களெல்லாரும் வணங்கி, ஆனந்தகோ
ஷஞ்செய்தார்கள். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் வா
கீசரோடும் திருப்பூந்துருத்தியிற்சென்று, சுவாமிதெரிசன
ஞ்செய்துகொண்டிருந்தார். அப்பர்சுவாமிகள் யான்செ
ய்யுஞ்சிவபணிவிடைக்கு இடையூறுசெய்துகொண்டனே
கம்பாஷண்டர்கள் இருக்கின்றார்களென்றுசொல்ல, தி
ருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் பரமசிவத்தியானத்துடன்
தாளத்தைக்கையிலெடுத்துத் தேவாரத்தாற்றுதிசெய்ய அ
ர்த்தக்கோவையான கானத்தைப் பரமசிவன் கேட்டேப்பா

தாலகெங்கையைவிட்டுச் சௌசிந்தகர்களாகியபாஷண்டர்களைக்கொன்றனர். அவ்வெள்ளத்திலகப்பட்ட ஐந்து சிவனடியார்களைத்திருஞானசம்பந்தசுவாமிகள்கண்டு அவ்வெள்ளத்தை அவர்களுக்கரையளவாக்கி, ப்பிழைக்கச்செய்தனர்.

அதன்பின், காவிரிநதிவடகரையில் திருநெய்த்தானத்திற்கும் ஜெப்பியேசுரத்துக்கும் மத்தியிலிருந்த சிவக்ஷேத்திரத்தில் பாஷண்டர்கள் பிரவேசித்து விஷ்ணுவாலயமாக்கியதை திருஞானசம்பந்த சுவாமிகள் கேள்வியுற்று அப்பர்சுவாமிகளுடன் அவ்விடம் வந்து பாஷண்டர்களைப்போக்கிப் பரமசிவனைப் பாடிப் பழமைபோற் சிவாலயமாக்கித திருவையாற்றிற்குவந்து, சிவதெரிசனஞ்செய்துகொண்டு திருப்பூந்துருத்தியை அடைந்தார்கள்.

எவது அத்தியாயம்

முற்றிற்று



## அ-வது சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குக்காவேரி வழிவிட்ட அத்தியாயம்.

திருக்கைலாசமலையினின்று பரமசிவனனுப்பத்திருமுனைப்பாடிநாட்டிலே திருநாவலூரிலே ஆதிசைவப்பிராமணகுலத்திலே சடையனார்க்கும் இசைஞானியார்க்கும் புத்திரராக அவதாரஞ்செய்த சுந்தரமூர்த்திஸ்வாமிகள் சிவ

க்ஷேத்திரங்கள்தோறுஞ் சென்று தெரிசித்துத்தேவாரப் பதிகம்பாடி சேரமான்பெருமாணாயனாரோடு திருவாரூரி லெழுந்தருளியிருந்தார்.

பலநாட்சென்றபின், சேரமான்பெருமாணாயனார் சுந் தரமூர்த்திநாயனாரை வணங்கி, தம்முடையவூருக்கு எழு ந்தருளிவரும்படி பிரார்த்திக்க; சுந்தரமூர்த்திநாயனார் அ தற்கிசைந்து, சேரமான்பெருமாணாயனாரோடும் எழுந்து போய், வன்மீகநாதரை வணங்கிக்கொண்டு, திருவாரூரை நீங்கி, மேற்றிசையை நோக்கிக் காவேரிநதியின் தென்க ரைவழியேசென்று, திருக்கண்டியூரை அடைந்து சுவாமி தரிசனஞ்செய்துகொண்டு புறப்பட்டார். அப்பொழுது வடகரையிலிருக்கின்ற திருவையாறெதிரேதோன்ற; சே ரமான்பெருமாணாயனார் கண்டு வணங்கி, சுந்தரமூர்த்தி நாயனாரைப்பார்த்து, சுவாமி! அடியேன் மனம் திருவையா ற்றைவணங்க விரும்புகின்றது. நாங்கள் இந்நதியைகட ந்துபோய்வணங்குவோம், என்றார். அதைக்கேட்ட சுந்த ரமூர்த்திநாயனார், அக்காவேரிநதி இருகரையுமழிதது ஓ டங்கள் செல்லாதபடிபெருகுதலைக்கண்டு, பரவும்பரிசொ ன்றறியேனான்என்னுந்திருப்பதிகந்தொடங்கி, திருப்பாட் டினிறுதிதோறும் ஐயாறுடையவடிகளோ, என்றுசொல் லிஅழைத்துப்பாடினார். அப்பொழுதுகடவுள், கன்று அ ழைத்தலைக்கேட்டுக் கதறிக்கனைக்கின்ற பசுப்போல, சராச ரங்களெல்லாம் கேட்கும்படி ஓலம், என்றுசொல்லியரு ளினார். உடனேகாவேரிநதிபிரிந்துவழிகாட்டியது. மேற்

றிசையினீரடங்கி மலைபோல்நிற்க, கீழ்த்திசையினீரோ டிந்த நடுவழி மணற்பரப்பாயிருந்தது. அதனைக்கண்ட அடியாரெல்லோரும், உரோமாஞ்சங்கொள்ள, ஆனந்தபாஷ்பஞ்சொரிய, அஞ்சலிசெய்தார்கள். சேரமான்பெருமாணாயனார் சுந்தரமூர்த்திநாயனாருடைய திருவடிகளை நமஸ்கரிக்க, சுந்தரமூர்த்திநாயனாரும் அவரையணைத்து, கடவுள் உமக்கருளியதன்றோ, என்றுசொல்லிக் கடவுளைத் துதித்துக்கொண்டு, அவரோடும் பரிசனங்களோடும் நதியின் மத்தியிலிருக்கின்ற மணல்வழியே போகையிலெவருந்திரும்பிப்பார்க்கக்கூடாதென்று சிவனடியார்களனைவருக்குக் கட்டளையிட்டருளினார். அச்சமின்றி அடியவர் சுந்தரமூர்த்திசுவாமிகள் சொல்லியதைமறந்து திரும்பிப்பார்த்துக் காவேரி வெள்ளத்திலகப்பட்டு, உயிர்விட்டு ஆக்கிருபுரமென்னுந்திட்டிலொதுங்கினார்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் காவிரிவடகரையில்வந்து அடியவர்களைப்பார்த்தார். அப்பொழுது அர்ச்சனைறவரில்லாதிருக்கவோர்பதிகம்பாடி அர்ச்சனையமைத்துக்கொண்டு திருக்கோயிலின் மதில்களைவணங்கிக்கொண்டு உள்ளேசென்று பஞ்சநதீசுவரரைத் தெரிசித்துக்கொண்டு திரும்பிக் காவேரியின் முன்சென்றபடியே நடுவே வந்து தென்கரையிலே, நீர் உடனேபிரிந்து மலைபோல்நின்றநீர் தொடர்ந்துபாய்ந்தது. அதைக்கண்டு சுந்தரமூர்த்திநாயனாரும் சேரமான்பெருமானாயனாரும் அதிசயித்துத் திருவருளைத் துதிசெய்துகொண்டு, மேற்றிசையை நோக

வெழிக்கொண்டு, கொங்கநாட்டை அடைந்தார்கள்.

அவது அத்தியாயம்

முற்றிற்று



## ௯-வது மகரிஷிகள் முத்தியடைந்த அத்தியாயம்.

சிலாதர், விபாதர், சனுதர், சனந்தர், சௌபதி, மயதேவர், சுங்கயர், சடரர், ஆருணி, விருத்தர், கருணர், பக்கர், பாரகர், பதுமநாபர், விசாலாக்கர், கல்லாதர் முதலான மகரிஷிகள் ஒன்றாகக்கூடி முத்தியடைவதற்கேதுவை யோசிக்கும்போது சிலர் காயத்திரி ஜபம்செய்வது உத்தமமென்றார்கள்; சிலர் பஞ்சாக்ஷர மந்திரஞ்ஜபிப்பது யோக்கிய மென்றார்கள்; சிலர் பஞ்சாக்கினி மத்தியிற் றவஞ்செய்வது சிலாக்கியமென்றார்கள்; சிலர் ஆத்துமஞானமடைவது நன்றென்றார்கள்; சிலர் தீர்த்தயாத்திரை செய்வது நன்மை யென்றார்கள்.

அப்பொழுது நந்திகேசுவரர் அவர்களிடம் வந்தனர். மகரிஷிகளுபசரித்து முகமன்கூறி ஆதனத்திருத்தி நாங்கள் மோக்ஷமடைவதற்கேதுவைப் போதிக்கவேண்டுமென்றுகேட்க, *நந்திதேவர், "கைலாச ஸ்தானமாகிய ஜப்பியேசுவரத்தில் தக்ஷப்பிரஜாபதி யாகத்திற் பல்லுடைந்த சூரியனு முண்டுபண்ணப்பட்ட சூரியபுஷ்கரணி தீரத்திலி

ருந்து, தினமொன்றுக்குப் பன்னீராயிரம பஞ்சாக்ஷர மந்திரஞ் ஜபித்துத் தவஞ்செய்தால் முத்தியடைவலாமென்றுசொன்னார். மகரிஷிகள்அவ்வாறே ஜப்பியேச்சுரமடைந்து, சூரியபுஷ்கரணி தீரத்திலிருந்து தவஞ்செய்து முக்தியடைந்தார்கள்.

கூவதுஅத்தியாயம்

முற்றிற்று.

---

இந்தப்பஞ்சநத மான்மியத்தையுஞ் ஜப்பியேசுவர மான்மியத்தையும் எழுதினவர்கள், படித்தவர்கள், பிறருக்குப் போதித்தவர்கள், கேட்டவர்கள் இகத்தில்புத்திரன்முதலானசகல சம்பத்தையடைந்து, பரத்திற்சிவலோகமடைவதுசத்தியம்.

## ஜப்பியேசுவரமான்மியம்

